தொகுதி 5

# தமிழாய்வு

"திட்பமும் நுட்பமும்"

Ed By

பொதுப்பதிப்பாசிரியர் :
பேராசிரியர் டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்,
எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,
தமிழ்த்துறைத் தலைவர்,
சென்னைப் பல்கலைக் கழகம்.

உதவி :

தமிழ்த்துறை ஆசிரியர்களும் மாணவர்களும்



சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு
1977

# TAMIḺĀYVU

## ( Annals of Tamil Research )

"CLARITY AND PRECISION"

*General Editor:*
DR. C. BALASUBRAMANIAN, M. A., M.Litt., Ph. D.,
Professor and Head of the Department of Tamil,
University of Madras

*Assistance:*
STAFF & STUDENTS OF THE DEPARTMENT OF TAMIL

**DEPARTMENT OF TAMIL**
UNIVERSITY OF MADRAS
**1977**

# பதிப்புரை

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையிலிருந்து 1972ஆம் ஆண்டு முதல் வெளியிடப்பட்டு வரும் 'தமிழாய்வு' இதழ்களின் அருமை பெருமைகளை ஆராய்ச்சியுலகம் நன்கு அறியும். இதுவரை நான்கு தொகுதிகள் (1972-1975) வெளிவந்துள்ளன. இடையில் ஓராண்டு வெளியீடு ஏற்ற சூழ்நிலையமையாமையால் உரிய காலத்தில் உருவாகி வெளிவரவில்லை. மாண்புமிகு துணைவேந்தர் மால்கம் ஆதிசேஷையா அவர்கள் துறை வெளியீடுகள் உரிய காலத்தில் வெளிவரவேண்டும் என்றும் ஆறுமாதத்திற்கு ஒன்றாக ஆண்டிற்கு இருமுறை வெளிவருதல் வேண்டும் என்றும் அறிவித்த பின்னர் மிக விரைவாக இத் தொகுதி உருவாகி இப்பொழுது வெளி வருகிறது.

இந்தத் தொகுதியில் நான்கு பெரும்பகுதிகள் இடம் பெற்றுள்ளன. முதலில் ஆய்வுக் கட்டுரைப் பகுதி உள்ளது. இதில் இலக்கியம் பற்றிய கட்டுரை ஒன்றும், இலக்கணம் பற்றிய கட்டுரை இரண்டும் அமைந்துள்ளன. பழந்தமிழர் வாழ்வில் அகவாழ் வாயினும் புறவாழ்வாயினும் மலர்கள் பெற்றிருந்த இடத்தை ஆராய்கின்றது 'மலர்காட்டும் வாழ்க்கை' என்னும் முதற்கட்டுரை. இலக்கணக் கட்டுரை இரண்டும் தொல்காப்பியம் பற்றியவை. புலவர்மணி, திரு. மு. சண்முகம் பிள்ளையவர்கள் தொல்காப்பிய நூற்பா ஒன்றில், 'தொன்றுவா' 'தோன்றுவா' எது உண்மைப் பாடம்? என்பதனை ஆராய்ந்து, 'தோன்று' என்பதே தொல்காப்பியர் கண்ட பாடம் என்பதனை நிறுவியுள்ளார். இதன் அடிப்படையில் சொற்பொருள் வரலாறும் நூற்பா வரலாறும் இதில் விரிவாய் ஆராயப்பட்டுள்ளன. தொல்காப்பியக் கடலில் மூழ்கித் திளைத்தவர் களாகிய உயர்திரு வித்துவான் அடிகளாசிரியர் அவர்கள் 'ஐவகை யடியும்' என்று தொடங்கும் தொல்காப்பியச் செய்யுளியல் நூற்பா விற்கு உண்மை விளக்கம் காணும் முயற்சியில் வெற்றி பெற்றிருக் கிறார்கள். இக்கட்டுரை இராசபாளையம் மணிமேகலை மன்றத்தார் வழி உயர்திரு பூ. கு. குப்புசாமிராசா அவர்கள் ஏற்படுத்திய இரு சூத்திர விளக்கக் கட்டுரைப் போட்டியில் முதற்பரிசு பெற்றது. ஐவகை அடியும் 625 ஆகப்பெருகி அமைதலை நன்கு முறைப்பட விளக்கிய தோடு இறுதியில் பட்டியல் அமைத்தும் தெளிவுபடுத்தியுள்ளார்கள்.

இரண்டாவது பகுதி, 'தமிழிலக்கண அகரவரிசை' என்பதாகும். இதனை இளநிலைத் தமிழ்ப்பேராசிரியர் டாக்டர் பொன் கோதண்டராமன் அவர்கள் தொகுத்தளித்துள்ளார்கள். இது தமிழில் வெளிவந்துள்ள இலக்கண நூல்களையெல்லாம் ஒருங்கு தொகுத்துத் தருகிறது. தமிழிலக்கண மரபுக்கேற்ப எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி, பாட்டியல் ஆகிய அறுவகை இலக்கண நூல்களும் சேர்க்கப்பட்டுள்ளன. இந் நூற்பெயர் அகரவரிசையில் நூலின் பெயர், ஆசிரியர் பெயர், உரையாசிரியர் பெயர், பதிப்பாசிரியர் பெயர், பதிப்பித்த ஆண்டு, பதிப்பித்த இடம், நூலின் பக்கம் முதலிய விவரங்கள் தரப்பட்டுள்ளன. இறுதியில் சேர்க்கப்பட்டுள்ள ஆசிரியர் அகரவரிசை நூல்களையும் உரைகளையும் ஆக்கிய ஆசிரியரின் பெயர்களை அறிவிக்கிறது. இலக்கணம் பயில்வார்க்குரிய கருவி நூல்களைக் கண்டு கொள்வதற்கு இந்தத் தொகுப்புப் பெரிதும் துணைசெய்ய வல்லது.

மூன்றுவது பெரும்பகுதி, தவத்திரு ஞானியாரடிகள் பற்றிய அறக்கட்டளைச் சொற்பொழிவாகும். தவத்திரு ஞானியாரடிகள் திருக்கோவலூர் ஆதீனம் திருப்பாதிரிப்புலியூர் மடத்தில் ஐந்தாம் பட்டமாக விளங்கியவர்கள்; சைவமும் தமிழும் தழைக்க நாடெங்கும் சுற்றிப் பெருந்தொண்டு ஆற்றிய பெரியார். கற்றவர் கல்லாதார் எல்லாரையும் காந்தம் போல் கவர்ந்திழுத்த பெரும் பேச்சாளர் அடிகளார். அவர்கள் தமிழுக்கும், சமயத்திற்கும், சமுதாயத்திற்கும் ஆற்றிய தொண்டுகளைக் குறித்து அடிகளாரின் திருமடத்தோடு நெருங்கிய தொடர்புடைய மாணவராகிய முதுபெரும் புலவர் பேராசிரியர் அ. நடேச முதலியார் அவர்களின் சொற்பொழிவுத் தொகுப்பாகும் இது. ஞானியாரடிகளின் தொண்டின் பெருமையை இதில் கண்டு, இக் காலத்தவரும் ஊக்கம் பெற இது வழிகாட்டுகின்றது.

தமிழாய்வில் மதிப்புரைக்கென வந்த பல நூல்களின் மதிப்புரையை மதிப்புரைமாலை என்னும் நான்காம் பகுதியில் காணலாம். மேலும், ஆசிரியர்களும் பதிப்பாளர்களும் தமிழாய்வுப் பதிப்பாசிரியருக்கு அண்மை வெளியீடுகளை அனுப்பிவைத்தால் அடுத்துவரும் தொகுதியில் அவற்றிற்குரிய மதிப்புரைகள் வெளியிடப்படும். எனவே, புதிய அண்மை வெளியீடுகளை உரியவர்கள் மதிப்புரைக்காக அனுப்பிவைப்பார்களாக.

இறுதியில், தமிழ்த்துறையில் நடைபெற்ற சிறப்புச் செய்திகளும் பிறவும் கொண்ட தமிழ்த்துறைச் செய்திகள் என்னும் பகுதி இடம் பெறுகிறது.

அச்சில் வாராத அருந்தமிழ் நூல்களுள் ஏதேனும் ஒன்றை வெளியிடுவதும் தமிழாய்வின் நோக்கமாகும். இந்த வகையில் இதுவரை ஆறுநூல்கள் வெளிவந்துள்ளன. இந்த ஐந்தாம் தொகுதிக்குரிய பக்கஅளவு நிரம்பிவிட்டமையால் இதில் அப் பகுதி சேர்க்கக் கூடவில்லை. அடுத்து வரவிருக்கும் தமிழாய்வில், 'மெய்ம்மொழிச் சரிதை' என்னும் சைவசாத்திரம் பற்றிய பழையநூல் வெளிவரும்.

முந்திய தொகுதிகளைப் போலவே இந்தத் தொகுதியும் செம்மையுற அமைய உதவிபுரிந்த புலவர்மணி மு. சண்முகம் பிள்ளை அவர்களுக்குத் தமிழ்த்துறையின் சார்பில் நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

சென்னை-5
12—10—77

*சி. பாலசுப்பிரமணியன்*

# பொருளடக்கம்

# பொருளடக்கம்

# 1. மலர் காட்டும் வாழ்க்கை

**டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்,**
தமிழ்ப் பேராசிரியர்/ தமிழ்த் துறைத் தலைவர்,
சென்னைப் பல்கலைக் கழகம்.

பழந்தமிழர் தாம் வாழ்ந்த நிலப்பகுதியினை 'நாவலந் தண் பொழில்' என வழங்கினர். இவ்வழக்கு, தாம் உறையும் நிலத்தினைப் பொழிலாக — சோலையாகக் கூறும் மரபு, பண்டைத் தமிழர் இயற்கைமாட்டுக் கொண்ட அன்பினை இனிதுறக் கிளத்தும். செடி கொடிகள் மிடைந்து, இலையுந் தழையும், பூவும் கனியும் நிறைந்து காணும் சோலையாகத் தாம் வாழ்ந்த நிலத்தினைக் கருதிய பான்மை உள்ளுதற்குரியது. மேலும், தாம் வாழ்ந்த பகுதியினை 'நானிலம்' என்று அழைத்தனர். மலையும் மலையைச் சார்ந்த இடமும் குறிஞ்சி என்றும், காடும் காட்டைச் சார்ந்த இடமும் முல்லை என்றும், வயலும் வயலைச் சார்ந்த இடமும் மருதம் என்றும், கடலும் கடலைச் சார்ந்த இடமும் நெய்தல் என்றும் கூறப்பட்டன. முல்லையும் குறிஞ்சியும் தத்தம் இயல்பு குன்றி, வளம் குறைந்து வற்றிய நிலையிற் காணப்படு மேயாயின் அந்நிலப்பகுதி 'பாலை' எனப்பட்டது.[1] இவ்வாறு ஐந் நிலம், ஐந்திணை என்னும் வழக்கு ஏற்பட்டது.

### நிலங்களின் பெயர்க் காரணம்

தமிழ் மக்கள் வரலாற்றிற்கு எட்டாத காலந் தொடங்கியே நிலத்தை ஐந்திணையாகப் பிரித்து, அதன் இயற்கையே பண்பாட்டின் அடிப்படை எனவும் உணர்ந்திருந்த திறமும், ஒவ்வோர் நிலத்திலும் அவ்வச் சூழ்நிலைக்கு ஏற்ற பண்பாடே இயற்கையாய் அமையும் என்று கண்டு, அதன் அடிப்படையிலேயே நிலத்தினை ஐந்திணை களாகப் பிரித்தனர் என்றும், அவ்வத் திணைகட்கு அவர் இட்ட பெயர்கள் அவரது இயற்கை அன்பினை நன்முகத் தெளிவுறுத்து கின்றன என்றும், நாகரிகமற்ற மக்கள் அவ்வந் நிலங்களில்

1. " முல்லையுங் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து
நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலையென்பதோர் படிவங் கொள்ளும்."
—சிலம்பு. காடுகாண் காதை : 64-66.

தோன்றும் பயிர் அல்லது உணவுப் பொருளின் பெயரை அத் திணை களுக்குக் கொடுத்திருப்பர். அவ்வாறு செய்யாமல் அவ்வந் நிலத்தில் சிறப்பாகக் காணக்கிடக்கும் மலரின் பெயர்களைக் கொண்டே அவ்வந் நிலத்திற்குப் பெயரிட்டுள்ள சிறப்புப் பெரிதும் பாராட்டத் தக்கது என்றும் அறிஞர் தனிநாயக அடிகளார் குறிப்பிடுவர்.[2]

ஒவ்வோர் நிலத்திற்கும் பெயர் அமைந்த காரணத்தை தொல் காப்பியத்தின் பண்டை உரையாசிரியராம் இளம்பூரணர் பின் வருமாறு கிளத்துவர் :

"முல்லை குறிஞ்சி என்பன இடுகுறியோ, காரணக் குறியோ எனின், ஏகதேச காரணம் பற்றி முதலாசிரியர் இட்டதோர் குறி என்று கொள்ளப்படும். என்னை காரணம் எனின்,

"நெல்லொடு
நாழி கொண்ட நறுவீ முல்லை
அரும்பவிழ் அலரி தூஉய்"

(முல்லைப்பாட்டு, 8-10)

என்றமையால், காடுறை உலகிற்கு முல்லைப்பூ சிறந்தது ஆகலானும்,

"கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே"

(குறுந். 3)

என்ற வழி, மைவரை உலகிற்குக் குறிஞ்சிப்பூச் சிறந்தது ஆகலானும்,

"இருஅல் அருந்திய சிறுசிரல் மருதின்
தாழ்சினை உறங்கும் தண்துறை ஊர்"

(அகநா. 286)

என்புழி, தீம்புனல் உலகிற்கு மருது சிறந்தமையானும்,

"பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்
இனமீன் இருங்கழி ஓதம் மல்குதொறும்
கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்"

(குறுந். 9)

என்ற வழிப் பெருமணல் உலகிற்கு நெய்தல் சிறந்தமையானும், இந் நிலங்களை இவ்வாறு குறிப்பிட்டார் என்று கொள்ளப்படும்.

பாலை என்பதற்கு நிலம் இன்றேனும், வேனிற்காலம் பற்றி வருதலின் அக்காலத்துத் தளிரும் சினையும் வாடுதலின்றி நிற்பது

2. தமிழ்த்தூது: பக்கம் 53-54.

பாலை என்பதோர் மரம் உண்டாகலின், அச்சிறப்பு நோக்கிப் பாலை என்று குறுப்பிட்டார் "[3] என்பர்.

### மலர்கள் பெற்ற மதிப்பு

பண்டை உலக நாகரிகத்தில் பெயர்பெற்று விளங்கிய கிரேக்கர், உரோமர் முதலான பெருமக்கள் தம் வழிபாட்டு முறையிலும், தம்மை ஒப்பனை செய்துகொள்ளும் வகையிலும் மலர்களைப் பெரிதும் பயன்படுத்தினர் என்பர். வேள்விக்குரிய காளைகளும், விலங்குகளும் மாலை சூட்டப்பெற்ற பின்னரே வேள்வியில் பங்குபற்றின. விருந்தினர் கண்ணி சூடியே விருந்துண்டனர். ஓட்டப்பந்தயத்தில் வென்றவர்கள் இலைதழை மலர்களால் ஆகிய முடியே சூட்டப் பெற்றனர். இது போன்றே பண்டைத் தமிழரும் தம் வாழ்வின் எல்லாத் துறைகளிலும் மலருக்குத் தனி மதிப்பளித்து இடம்பெறச் செய்தனர் என்பதனைப் பல்வேறு சான்றுகள் காட்டி நிறுவலாம்.

குறிஞ்சி மலர் மலைநாட்டில் பன்னீராண்டுகட்கு ஒருமுறை பூக்கும். நீலநிறமாய்த் தோற்றமளிக்கும் அம் மலர்களில் பெருந் தேன் இருக்கும். குறிஞ்சி மரம் கரிய கொம்புகளைக் கொண்டு விளங்கும். இதுபோன்றே முல்லைப்பூ வெண்மை நிறமும், நறுமணமும் நிறைந்த பூவாகும். மேலைநாட்டு இலக்கியங்களில் 'லில்லி' (Lily) மலர் பெறும் சிறப்பினும் மேலாக ஒரு படி தமிழ் இலக்கியங்களில் முல்லை மலர் பெற்று விளங்குகின்றது. கற்பின் சிறப்பினை விளக்கி முல்லைப் பூ சிறந்து நிற்கின்றது.

மருத நிலத்தே அணிபெற அமைந்துள்ள சோலைகள் 'பூவார் சோலை'யாகப் பொலிகின்றன; அங்கு மயிலாடுகின்றன; குயில் இசை கூட்டுகின்றன என்பர் இளங்கோவடிகளார்.[4] மேலும், அவர் வையை என்னும் பொய்யாக் குலக்கொடியை வருணிக்கு முகத்தான்,

" கரைநின் றுதிர்த்த கவிதழ்ச் செவ்வாய்
அருவி முல்லை அணிநகை யாட்டி
விலங்குநிமிர்ந் தொழுகிய கருங்கயல் நெடுங்கண்
விரைமலர் நீங்கா அவிரறற் கூந்தல்
உலகுபுரந் தூட்டும் உயர்பே ரொழுக்கத்துப்
புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி

3. தொல்காப்பியம்: பொருளதிகாரம்.
நூற்பா: 5. உரை.

4. ' பூவர் சோலை மயிலாலப்
புரிந்து குயில்கள் இசைபாட '
—சிலம்பு . கானல்வரி: 26.

வையை யென்ற பொய்யாக் குலக்கொடி
................... ...... ....................
புனல்யா றன்றிது பூம்புனல் யாறென "[5]

ஓடியதாகக் கூறுவர்.

பரிபாடற் புலவரொருவர் வையை தந்த வற்றாத நீரால் வளம் பெருக்கிய ஆற்றங்கரை மரங்கள் அதற்குக் கைம்மாறாக மலர்களைச் சொரிந்து நின்றன என்று பாடியுள்ளார்.[6]

### *வழிபாட்டில் மலர்கள்*

திருப்பரங்குன்றத்து முருகனை வழிபடச் செல்லும் மக்கள் பூக்களைத் தம்முடன் கொண்டு செல்கின்றனர்.[7] மலர்களால் இறைவனை வணங்கும் முறை திராவிடர் சிறப்பு முறை என்பர் ஆய்வாளர் சிலர். வைதிக வழிபாட்டில் மலர் வழிபாடு இடம் பெற்றிருக்கவில்லை என்றும், ஆரியர் திராவிடரிடமிருந்தே மலர் வழி பாட்டு முறையைக் கற்றனர் என்றும், 'பூஜை' என்னும் வடசொல் 'பூ செய்' என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபு என்றும், வேத கால ஆரியர் இறைவனுக்கு வேள்வியியற்றி அதில் மிருகங்களின் தசை முதலியவற்றைப் போட்டு வழிபாடியற்றினர் என்றும், திராவிடரே தொன்னெடுங் காலந் தொடங்கி மலர் வழிபாட்டு முறையினை மேற் கொண்டொழுகினர் என்றும் அறிஞர் எஸ். சுநீதகுமார சட்டர்ஜி குறிப்பிடுவர்.[8]

5. சிலம்பு. புறஞ்சேரியிறுத்த காதை: 164-174.
6. பரிபாடல்: 16 : 16.
' கரையொழுகு தீம்புனற் கெதிர்விருந் தயர்வபோல் '
7. பரிபாடல்: 8 : 96-101.
8. S. K. Chatterji, Race Movements and Prehistoric Culture in the Vedic Age, London, 1951, p. 160.

"The characteristic offerings in the Puja rite Viz., flowers, leaves, fruits, water etc., are not known to the homa rite except in instances where it has been influenced by the puja. It has been suggested with good reason that puja is the pre-Aryan, in all livelihood the Dravidian form of worship, while the homa is the Aryan ; and throughout the entire early Vedic Literature, the puja ritual with flowers etc., offered to an image or symbol is unknown. The word puja, from a root puj, appears like the thing it connotes, to be of Dravidian origin also. This word or root is not found in any Aryan or Indo-European language outside India."

### காதலர் வாழ்வில் மலர்

உடன்போக்கு மேற்கொள்கிருர்கள் தலைவனும் தலைவியும். ஒரு காலத்து இவர்கள் சிறுவர் சிறுமியராக இருந்தபொழுது சிறிது காலம் தங்களுக்குள் கலாம் விளைவித்துக் கொண்டவர்கள். காதற் செவிலியர் அடை நின்று தடுத்தபோதும் 'ஏதில் சிறு செரு' மேற்கொண்டவர்கள். ஆனல் அக்காலம் கழிந்தொழிந்தது. இப்போது மாலையிற்ருெடுத்த இரட்டை மலர்கள் போன்று காட்சியளிக்கின்றனர் என்கின்ருர் மோதாசனர் என்னும் புலவர்.[9]

### கபிலரின் குறிஞ்சிப் பாட்டு

ஆரியவரசன் பிரகத்தனுக்குத் தமிழ் அறிவுறுத்தற்பொருட்டுக் கபிலர் இயற்றிய குறிஞ்சிப் பாட்டில் ஏறத்தாழ முப்பத்தைந்து அடிகளில் தொண்ணூற்ருென்பது மலர்கள் சுட்டப்படுகின்றன.[10] இங்குச் சுட்டப்படும் மலர்களிற் பல இன்று நம்மால் அறிந்து கொள்ள முடியா நிலையில் உள்ளன. காரணம் நாம் தற்போது இயற்கையை விட்டு நெடுந்தொலைவு வந்து விட்டோம். இலக்கியம் தோன்றுவதற்கு நிலைக்களனுய் அமையும் பொருள்கள் மக்களும் இயற்கையும். இயற்கையுளே இயற்கையை விடுத்து மக்களைப் பற்றியும், மக்களை விடுத்து இயற்கையைப் பற்றியும் புலவர் பாடினல் அவ்விலக்கியம் குறையுடைய இலக்கியமாக அமையும் என்பர்.[11] பண்டைத் தமிழ்ப் புலவரோவெனில் இயற்கையின் இனிய சூழலில் - பின்னணியில் மனித வாழ்வினைச் சித்திரித்துக் காட்டினர். முதற்பொருள் நிலமும் பொழுதுமாய் அமைய, கருப்பொருள்கள் மக்களும், இயற்கை செயற்கைப் பொருள்களாய் அமைய, குறிப்பிட்ட வாழ்வு முறை உரிப்பொருளாய்த் துலங்கக் காணலாம்.

### மங்கையரும் மலரும்

மலர்மாட்டுப் பெரிதும் காதல் கொள்வர் மங்கையர். 'தலைவாரிப் பூச்சூட்டிக்' கொள்வதில் தனி விருப்பங் காட்டுவர்; பின்னி முடித்துப் பிச்சிப்பூ சூடிக் கொள்வதில் ஆர்வம் காட்டுவர். அழகுள்ள மலர் கொண்டு வந்து குழலில் சூடி இன்புறுதலில் ஆசை கொள்வர். இத்தகு இளம் மகளிர் வேங்கை மரத்தினிடம் சென்று 'புலி புலி' எனக் குரல் எழுப்புவர். அவ்வாறு கூச்சலிடின் வேங்கைமரம் கிளை

9. 'துணைமலர்ப் பிணைய லன்ன இவர்
மணமகிழ் இயற்கை காட்டி யோயே' —குறுந். 229 : 6-7.

10. குறிஞ்சிப் பாட்டு : 62-96.

11. "There are two great subjects of Poetry; the natural world and the human nature. It is a terrible business for poetry when it is wholly employed on men or wholly employed on nature" —Stopford Brooke.

களைத் தாழ்த்திப் பூக்களைக் கொடுக்கும் என்று சங்க கால மகளிர் நம்பினர். மேலும், வேங்கை மலரும் பருவமே திருமணத்திற்குரிய காலம் என்றும், வேங்கை மலர்கள் விழுந்து கிடக்கும் முன்றிலே திருமணம் நிகழிடம் என்றும் கலித்தொகை குறிப்பிடுகின்றது :

"வருமே தோழி நன்மலை நாடன்
வேங்கை விரிவிட நோக்கி
வீங்கிறைப் பணைத்தோள் வரைந்தனன் கொளற்கே".[12]

"புனவேங்கைத் தாதுறைக்கும் பொன்னறை முன்றில்
நனவிற் புணர்ச்சி நடக்குமா மன்றே."[13]

### திருமணத்தில் மலர்கள்

சிலப்பதிகாரம் கானல்வரியில் யாழினைக் குறிப்பிடவரும் இளங்கோவடிகள் அது மணமகள் போல் மலர் சூடிக் காணப் பட்டது என்கின்றார்.

" பண்டைத் தமிழ்க்கன்னி மலர் சூடாள் என்பதும், மலர் சூடின் கன்னியாகாள், ஒருவனை வரித்தாள் என்பதும் நம் பழஞ் சமுதாய வழக்கு" என்று கூறிச் சில இலக்கியச் சான்றுகள் காட்டி நிறுவுவர் பண்டாரகர் வ. சுப. மாணிக்கம் அவர்கள்.[14]

பண்டைத் திருமண நிகழ்ச்சியினைக் குறிப்பிடும் விற்றூற்று மூதெயினனார் பாடிய அகநானூற்றுப் பாடலில், ஆம்பற்பூவின் முறிக்கப்பட்ட இதழ்களால் ஆகிய பருத்த நிறம் பொருந்திய மாலையை நீக்கி, வண்டுகள் ஒலிக்கும் ஆராய்ந்த மலர்களைச் சூடிய வதுவை மண்ணிய மணமகள் குறிக்கப்பெறுகின்றாள் :

" பருஉப் பகை ஆம்பல் குருஉத்தொடை நீவிச்
சுரும்பிமிர் ஆய்மலர் வேய்ந்த
இரும்பல் கூந்தல். "[15]

மேலும் மணமக்களை வாழ்த்தும் பெருமக்கள்,

" நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி
பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க "[16]

12. கலித்தொகை, குறிஞ்சி, 2 : 25–26
13. கலித்தொகை, குறிஞ்சி, 13 : 33–34
14. தமிழ்க் காதல், பக்கம் 159.
15. அகநானூறு, 136 : 27-29.
16. அகநானூறு, 86 : 15-16.

மணமக்கள் தலையில் மலர்தூவி வாழ்த்துகிறார்கள். இளங்கோ வடிகளும் கோவலன் கண்ணகி திருமணத்தைக் குறிக்கும்பொழுது,

"காதலற் பிரியாமல் கவவுக்கை ஞெகிழாமல்
தீதறுகென வேத்திச் சின்மலர் கொடு தூவி"[17]

என்று மலரிட்டு வாழ்த்தும் நிலையினை மறவாது குறிப்பிட்டுள்ளார்.

களவுக்காலத்தில் தலைமகளுக்குத் தலைமகன் தரும் கையுறை தழையும், மலருங் கொண்ட கண்ணி என்பதும் நினைவுகூரத் தக்கது. தலைமகன் தரும் கையுறை மறுக்கும் தோழி ஒருத்தி, தன் மலை முழுதும் குருதிபோல் பூக்கும் காந்தட் பூக்கள் மிகுந்து காணப்படுகின்றன என்று கூறிக் கையுறை மறுக்கின்றாள்.

"கழல்தொடி சேஎய் குன்றம்
குருதிப் பூவின் குலைக்காந் தட்டே"[18]

*புறத்திணையிலும் பூக்கள்*

'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு' எனப் பண்டையாசிரியர் தமிழ்கூறு நல்லுலகத்தினைக் குறிப்பிட்டார். 'படைப்புக் காலந் தொட்டு மேம்பட்டு வருங் குடி' யெனச் சேர சோழ பாண்டியர்தம் குடியின் பழமையினைப் பாராட்டுவர் பரிமேலழகர்[19] முடியுடை மூவேந்தர்கரு அடையாளப் பூமாலையாக விளங்கிய பூக்கள் பனம்பூ, ஆத்திப் பூ, வேப்பம் பூவாகும்.

"போந்தை வேம்பே ஆரென வருஉம்
மாபெருந் தானையர் மலைந்த பூவும்."[20]

மேலும் அகத்திணைக்கு ஈடான புறத்திணைகளும் மலர்ப் பெயர்களைக் கொண்டே அமைந்துள்ளன. பகைவர் பசுநிரைகளைக் கவர வெட்சிப் பூவினை வீரர் சூடிச் சென்றனர்; பசுநிரையினை மீட்கக் கரந்தைப் பூச் சூடி நின்றனர். மாற்றார் மண்ணைக் கவர வஞ்சிப் பூ மலைந்து வீரர் அணிவகுத்துச் சென்றனர் ; தம் மண்ணைக் காக்கக் காஞ்சி சூடி நின்றனர். மதிலை வளைக்க உழிஞைப் பூச் சூடியும், மதிலைக்காக்க நொச்சிப் பூச் சூடியும் தமிழ் வீரர் நின்றனர். போர்க்களத்தே தும்பைப் பூவைச் சூடினர் ; போரில் வெற்றிப்பெற்றவர் வாகைப் பூ மலைந்தனர்.

17. சிலம்பு. 1 : 61-62.
18. குறுந்தொகை, 1 : 3-4.
19. திருக்குறள், 995 : உரை.
20. தொல்காப்பியம் : பொருளதிகாரம் : புறத்திணையியல், 3. 4-5

போர்க்காலங்களில் மகளிர் பூ அணிந்து பொலியாமல் வருந்தினர்.[21] கணவனைப் பிரிந்து வாழும் தனிப்படர் மிகுந்த நிலையிலும் பூச்சூடிக்கொள்ளாமல் வாளாவிருந்தினர். எனவே, பூவெனப்படுவது மகிழ்ச்சிக் காலங்களில் இன்பத்தை மிகுவிக்கும் மங்கலப் பெருளாயிற்று. ஒல்லையூர்கிழான் மகன் பெருஞ் சாத்தன் இறந்தபோது, குடவாயிற் கீரத்தனார் பாடிய கையறுநிலைப்பாடலும் இங்குக் கூறப்பட்ட கருத்தினை விளக்கும்.

"இளையோர் சூடார், வளையோர் கொய்யார்,
நல்லியாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்
பாணன் சூடான், பாடினி அணியாள்,
ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த
வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே ? [22]

பெருவீரர் சாத்தன் இறந்துபட்ட பிறகு முல்லைப் பூவினை இளைய வீரர் சூடார்: வளையலணிந்த இளைய மகளிர் கொய்யார்: பாணன் தன் நல் யாழ் மருப்பினால் மெல்ல வளைத்துப் பறித்துச் சூடிக்கொள்ளான்; பாடினி அணியாள். இந்நிலையில் முல்லைக்கொடியே நீ பூத்துக் குலுங்குகின்றாயே; அவ் வள்ளலை யிழந்து இறக்காமல் இன்னும் வாழ்ந்துகொண்டிருக்கும் எம் வாழ்வு போலவே அவன் வாழ்ந்த ஒல்லையூர் சூழ்ந்த நாட்டில் நீ பூத்துக் குலுங்கும் பூப்பும் கொடுமையேயாகும்" என்று பாடும் கையறுநிலைப்பாடல் தமிழர்தம் புறவாழ்விலும் மலர்கள் பெற்ற இடத்தினை உணர்த்தி நிற்கும்.

மேலும் அந்நாளைய அரசர்கள் தம்மைப் பாடிய புலவர் பெருமக்களுக்குப் பரிசுகள் நல்கும்போது, பொன்னாற் செய்த தாமரைப் பூவினையும், வெள்ளிய நாராற் கட்டிய பூங்கொத்தினையும் வழங்கினர். பாணர்கள் தம் இசைக்கருவிகளுக்கு மலர் சூட்டி, இசைகருவிகளைத் தெய்வமென மதித்தனர்.

மேலும் போர்வீரன் மனைவி ஆண் குழந்தையை ஈன்றெடுத்ததும் அவள் கணவன் போர்க்குரிய மாலைகளையும் உடைகளையும் (Uniforms) அணிந்து முதற்காட்சி அளிப்பான் என்பதனைப் புறப்பாடல் கொண்டு தெளியலாம். சிறுவர் சிறுமியரும் பூச் சூடிக் கொள்வதனைச் சிறப்பாகக் கருதினர். மங்கையரும் மலரும் சொல்லும் பொருளுமாக அமைந்து நின்றனர்.

21. 'பூவில் வறுந்தலை முடிப்ப' —புறநானூறு: 44 : 7
22. புறநானூறு : 242.

**மலரும் வாழ்வும்**

மலைவாழ்நர் உணவினைப் பலரோடும் பகுத்துண்ணும்போது அதற்கு அவர்கள் தேர்ந்தெடுத்த இடம், மலை மல்லிகை கமழும் அழகிய முற்றமாக அமைந்திருக்கக்காண்கிறோம் :

"கூதளங் கவினிய குளவி முன்றில்
செழுங்கோள் வாழை அகலிலைப் பகுக்கும்"[23]

முல்லைப்பாட்டில் வினை முடித்துத் தலைமகளை நாடி வீடு திரும்பும் அரசனின் செலவு சுட்டப்படுகின்றது. அவன் வினைமுடித்து மீளும் செந்நிலப் பெருவழியினைக் காட்டும் ஆசிரியர் நப்பூதனார், காட்டு நிலப் பூக்கள் காட்டி நிற்கும் கோலத்தினை அழகுறப் புனைந்துள்ளார் :

செறிந்த இலைகளையுடைய காயாம்பூ மலர்கள் அஞ்சனம் போன்று மலர்ந்துள்ளன; மெல்லிய கொத்துகளைக் கொண்ட கொன்றைப் பூக்கள் ஒளிவிடும் பொன்போல் பூத்துக் குலுங்குகின்றன; கோடற் பூவின் குவிந்த மொக்குகள் உள்ளங்கைகள் போன்று மலர்ந்துள்ளன. கொத்துக் கொத்தாய்த் தோன்றும் தோன்றி மலர்கள், இரத்தச் சிவப்பாகப் பூத்துள்ளன :

"செறியிலைக் காயா வஞ்சன மலர
முறியிணர்க் கொன்றை நன்பொன் காலக்
கோடற் குவிமுகை யங்கை யவிழத்
தோடார் தோன்றிக் குருதி பூப்ப"[24]

கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவரும் காட்சியன்றோ இது !

**முடிவுரை**

இவ்வாறு பழந்தமிழ் இலக்கியங்களைப் படிப்போர் மலர்கள் தமிழர் வாழ்விற்பெற்ற மதிப்பிற்குரிய மாண்புறு நிலையினை நன்கு காண்பர். காதலைக் குறிக்க வந்த திருவள்ளுவர் 'மலரினும் மெல்லிது காமம்' என்றார். விருந்தினரை ஓம்ப வேண்டிய பான்மையினைக் குறிப்பிடும்பொழுதும், 'மோப்பக் குழையும் அனிச்சம்' என்று மலரையே உவமித்துக் காட்டினார். மகளிர் உறுப்புநலனை வருணிக்கும் கவிஞர்களும், 'தாமரை போன்ற முகம்' என்றும், 'குவளை மலர் போன்ற கண்கள்' என்றும், 'எட் பூ நாசி' என்றும், 'முருக்க மலர் போன்ற இதழ்கள்' என்றும், 'குமுத மலர் போன்ற வாய்' என்றும்,

23. புறநானூறு, 168 : 12–13.
24. முல்லைப்பாட்டு, 93–96.

'வாழைப்பூப் போன்ற கூந்தல்' என்றும், 'காந்தள் போன்ற கைகள்' என்றும், நொச்சி மலர் போன்ற அடிகள்' என்றும் மலர்களுடன் ஒப்பிட்டே மங்கையர் எழிலைப் பாராட்டி யிருக்கின்றனர்.

முகை, மொட்டு, போது, மலர், வீ, செம்மல் என்னும் பல்வேறு பெயர்கள் மலரின் பல்வேறு நிலைகளை உணர்த்துவனவாகும்.

இதுகாறும் கூறப்பெற்ற செய்திகள் கொண்டு, பழந்தமிழர் தம் வாழ்வில்—அகவாழ்வாயினும் சரி, புறவாழ்வாயினும் சரி,—மலர்கள் பெற்றிருந்த இடம் மாணப் பெரிது; மாண்புடையது; போற்றத் தக்கது என 'அங்கை நெல்லிக்கனி'யென அறியலாம். மலர்கள் வாழ்க! மலர்கள் காட்டும் நாகரிகம் வாழ்க !

# 2. 'தொன்று'வா? 'தோன்று'வா?*

(ஒரு பாடபேத ஆராய்ச்சி)

**மு. சண்முகம் பிள்ளை**

**தமிழ் விரிவுரையாளர், திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி,**
**சென்னைப் பல்கலைக் கழகம்.**

### தோற்றுவாய்

சென்னை மாநகரிலே 1963-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்களில் 'தொல்காப்பிய மகாநாடு' ஒன்று நடைபெற்றது. அதில் பேசிய மகாவித்துவானாகிய தமிழன்பர் ஒருவர் தொல்காப்பிய நூற்பா ஒன்றின் மூலபாடம் பற்றிய ஒரு புதுக்கருத்தை வெளியிட்டனர்.

> 'மூன்றுஉறுப்பு அடக்கிய தன்மைத்து ஆயின்,
> தோன்றுமொழிப் புலவர், "அது பிண்டம்" என்ப'.
>
> (செய்யுளியல், 165)

என்னும் சூத்திரத்தின் இரண்டாம் அடியில் முதற் சொல், 'தொன்று' என இருக்க வேண்டும் என்பதே. 'தோன்று' என்பது பிழையாகும் என்பதும் அவருடைய கருத்து. இதுபற்றி அவர் தந்த விளக்கம் வருமாறு :

தொல்காப்பியர் தமக்கு முற்பட்ட நூலாசிரியரின் கருத்துகளை மேற்கொண்டு கூறுமிடத்து, 'என்ப,' 'மொழிப,' 'என்மனார்,' 'என்மனார் புலவர்,' 'குறியுணர்ந்தோர்' என்றாற்போன்ற தொடர்களை ஆண்டிருப்பது போலவே, இச்சூத்திரத்தும் முந்திய ஆசிரியரைச் சுட்டியுள்ளார் என்பதும், இக்கருத்திற்குப் பழமை என்னும், பொருள் தரும் தொன்று என்னும் வடிவமே சிறப்புடைத்தாம் என்பதும், இச் சூத்திர பாடம் 'தொன்று மொழிப்புலவர்' எனக் கோடலே தகும் என்பதும் தமது தீர்மானமான கொள்கை என்று கூறினர்.

---

* சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை நடத்தும் ஆசிரியர் மாணவர் கருத்தரங்கில் 27-1-1977ல் படிக்கப் பெற்ற கட்டுரை.

இக்கொள்கையை மறுத்து, ஏற்கெனவே பதிப்புகளில் பயின்று வரும் 'தோன்று' என்னும் பாடமே தகும் என மற்றொரு தமிழ்ப் புலவர் எதிர்ப்புக் குரல் எழுப்பினர். அவர் தந்த விளக்கம் பின் வருமாறு :

1. பழைய ஏடுகளில் ஒற்றைக் கொம்பிற்கும் இரட்டைக் கொம்பிற்கும் வேறுபாடு காண இயலாது. எனவே, 'தொன்று மொழி' என்பது 'தொன்று மொழி தோன்றுமொழி' என இருவகையாகவும் படிக்க இடமுண்டு.

2. 'தோல் எனமொழிப தொன்மொழிப் புலவர்'என்னும் செய்யு ளியல் 230ஆம் சூத்திரத்தில், 'தொன்மொழிப்புலவர்' என்னும் ஆட்சி யும் தொல்காப்பியத்துக் காண்கிறது. இவற்றைப் பார்க்கும்போது நண்பர் தமிழன்பர் அவர்களின் கூற்று ஏற்றுக்கோடற்குரியது என்றே நமக்குத் தோன்றும். ஆனல், உண்மை அதுவன்று. 'தோன்று மொழிப்புலவர் என்னும் பாடத்தையே முன்புள்ளோர் கொண்டனர் என்பது ஒரு சில குறிப்புகளால் தெளிவாகத் தெரியவருகிறது.

3. இதுவரை அச்சிட்ட தொல்காப்பியப் பதிப்புகளில் எல்லாம் 'தோன்றுமொழிப்புலவர்' என்னும் பாடமே உள்ளது.

4. இச்சூத்திரத்தில் இரண்டாம் அடிக்கு 'அது' என்பது இன்றி, 'தோன்றுமொழிப்புலவர் பிண்டம் என்ப' என்னும் பாட வேறுபாடு ஒன்றே பிரதிகளின் பரிசோதனையால் காணக் கிடைக்கிறது.

5. இந்நூலின் உரையாசிரியர்களுள் இளம்பூரணர் பேராசிரியர் உரைகளில் இச்சூத்திரப் பொருள் விரித்துரைக்கப்படவில்லை. அத ஞல் அவர்கள் கொண்ட மூலபாடம் புலப்பட வழியில்லை.

6. நச்சினர்க்கினியர் உரையில் இதற்குப் பொருள் தரப் பட்டிருக்கிறது. அவர் கொண்ட பாடம் '*தோன்றும் மொழி*' என் பதே என்பது அதனுல் தெளிவாகிறது. அவர்தம் உரை வருமாறு :

'சூத்திரமும் ஒத்தும் படலமும் என்கின்ற மூன்று உறுப்பினையும் உள்ளடக்கிய தன்மைத்தாய் வரின், *விளங்கிய மொழியையுடைய* புலவர் அதனைப் பிண்டம் என்று பெயர் கூறுவர்' என்பது.

'விளங்கிய' என இவர் உரைக்கும் பொருளுக்குத் 'தோன்றும்' என்னும் பாடமே பொருத்தமுடைத்து.

7. மேலும், சூத்திரம் என்பது அடிவரையறையில்லாத பாவகை ஆறனுள் ஒன்று என்று தொல்காப்பியர் கூறுகிறார். எனவே, நூற்பா விற்கும் ஓசை அமைதியும் எதுகை, மோனை, முதலிய செய்யுளமை தியும் உண்டு என்பது போதரும்.

அவற்றுள்,

சூத்திரம்தானே

ஆடிநிழலின் அறியத்தோன்றி,

நாடுதல் இன்றிப் பொருள்நனி விளங்க,

யாப்பினுள் தோன்ற யாத்து அமைப்பதுவே' (செய். 162) என்பது சூத்திரம் பற்றிய தொல்காப்பியர் விதி. இதில், 'யாப்பினுள் தோன்ற யாத்து அமைப்பதுவே' என்பது கூர்ந்து கவனிக்கத் தக்கது. 'யாப்பினுள் தோன்ற' என்பது சூத்திரமாகிய செய்யுளில் விளங்கு மாறு என்பது பொருளாம்.

ஆகவே, இச்சூத்திரத்திற்கும் 'மூன்றுறுப்பு அடக்கிய' என்னும் முன்னடிக்கு ஏற்ப, 'தோன்றுமொழிப் புலவர்' என நெடில்-மோனை அமைதி யாப்பின் ஓசைக்கு ஒத்ததாகும்.

எனவே,யாப்பமைதிக்கும் இன்னோசைக்கும் 'தோன்றும் மொழிப் புலவர்' என்பதுவே சிறப்புடைத்தாகும். நச்சினார்க்கினியர் எழுதிய பொருளினும் இப்பாடமே அவர் கால வழக்கிற் பயின்றது என்பது தெரியவரும், ஆதலால், இச்சூத்திரத்தில் தோன்று மொழிப் புலவர்' எனக் கொண்ட பாடம் தவறன்று என்பது போதரும்.

இவ்விளக்கங்கள் தமிழன்பருக்குத் திருப்தியளிக்கவில்லை. மீண்டும் தமது கொள்கையை வலியுறுத்திக் கூறும்பொருட்டு மறுப் புரைப் புலவரின் மொழிகளையே எடுத்துக்காட்டி மேலும் பேசலானார் :

" நமது நண்பர், 'தோன்று மொழிப் புலவர்' என்பதே சிறந்த பாடம் எனக் காட்ட விழைகின்றார். அதற்கு அவர் காட்டிய காரணங்களுள் ஒன்று, 'பழைய ஏடுகளில் ஒற்றைக் கொம்பிற்கும் இரட்டைக் கொம்பிற்கும் வேறுபாடு காண இயலாது என்பது. எனவே, 'தொன்றுமொழி' என்பது 'தொன்றுமொழி', 'தோன்று மொழி' என இருவகையாகவும் படிக்க இடமுண்டு என்பது தெளிவு. இதுவே எனது கருத்துமாம். 'தொன்றுமொழி' என்பதே ஏடெழுது வோரால் பிழைபடத் 'தோன்றுமொழி' என எழுதப்பட்டது என்பதே எனது கருத்து.

செய்யுளியல் 230-ஆம் சூத்திரத்தினுள் 'தொன்மொழிப் புலவர்' என்பதற்குரிய பொருளே 'தொன்றுமொழிப் புலவர்' என்பதற்கும் பொருளாகும்.

இதுவரை அச்சிட்ட தொல்காப்பியப் பதிப்புகளில் எல்லாம் 'தோன்றுமொழிப் புலவர்' என்னும் பாடமே உள்ளது என்று கூறு

கிறுர் நமது நண்பர். பண்டு தொட்டுக் காணப்படுவதால் பிழை திருத்தமாகுமா? நச்சினுர்க்கினியர் 'தொன்றுமொழி' என்பதற்கே 'விளங்கிய மொழி' என்று பொருள் கூறுகிறுர். 'பிரசித்தமான' அல்லது 'பழைய' என்பதே விளங்கிய என்னும் சொல்லுக்குப் பொருளாகும்.

'நூற்பாவிற்கும் எதுகை மோனை முதலிய செய்யுளமைதியும் உண்டு என்பது போதரும்' என்று கூறுகிறுர் நண்பர். இது அறிஞர் பலரும் ஒப்புக்கொள்ளுதற்குரிய கருத்தன்று.

இனி, 'தொன்று' என்னும் ஆட்சி பல நூல்களிலும் பயின்று வந்துள்ளமையைக் காணலாம்.

1. '**தொன்று** மொழிந்து தொழில் கேட்ப'- மதுரைக். 72
2. '**தொன்றுரை** - பழையவுரை'— மாறனலங்கார உரை மேற் கொள் : 702
3. 'தோலென மொழிப**தொன்**மொழிப் புலவர்'—தொல். செய். 238
4. '**தொன்றிய** லவையம்'—பெருங். உஞ்சை. 36 : 40
5. '**தொன்றியன்** மகளிர்'—பெருங். மகத. 6 ; 127
6. '**தொன்றுமனை**'—பெருங். உஞ்சை. 47 : 222
7. '**தொன்று** முதிர் தொடர்பு'—பெருங். மகத. 18 : 108
8. '**தொன்றுவழி** வந்த குன்ருக் கற்பு'—பெருங். இலாவாண. 11 : 46
9. '**தொன்று** படு சிதாஅர்'—புறம். 400 : 10.
10. '**தொன்றிசை**' புறம். 217 ; 11
11. '**தொன்றிவ்** வுலகத்துக் கேட்டுமறிதியோ'—கலித். நெய். 25 : 48.
12. '**தொன்று** முதிர் வேளிர்' குறுந். 164.
13. '**தொன்றியல்** புகழது'—பரிபா. 15 : 36.
14. '**தொன்ருேர்** காலை நல்லமன்'—பதிற். 19 : 24.

இங்கு எடுத்துக்காட்டிய இம்மேற்கோள் அனைத்தும் 'தொன்று' என்னும் சொல், 'பழைமை' அல்லது 'பிரசித்தம்' என்னும் பொருளையே உணர்த்துதலை அறியலாம்.

இங்ஙனன்றித் 'தோன்றுமொழிப் புலவர்' என்னும் ஆட்சி எந் நூலிலேனும் காணப்படுமாயின், அவ்வாட்சியினை நமது நண்பர் எடுத்துக்காட்டின், நன்றி பாராட்டும் கடப்பாடுடையேன்.

இதுகாறும் வெளிவந்துள்ள பதிப்புகள் அனைத்திலும் காணப் படுவது காரணமாக ஒரு பிழையை நாம் தகுதி வாய்ந்த பாடமெனக் கொள்ள வேண்டுமாயின், ஆராய்ச்சி என்பதற்கே இடம் இரா தன்றோ? 'பூமி உருண்டை வடிவின தன்று' என்றவன் வாதத்தைப் பழைமை காரணமாக உலகம் ஏற்றுக் கொள்ளவில்லையே! நெடுங் கால ஆய்வுக்குப் பின்னன்றோ 'பூமி உருண்டை வடிவினதே' என் பதை உலகம் உணர்ந்தது' !

இங்ஙனமாகத் தமது கொள்கையையே மிகவும் வற்புறுத்தி மொழியலானர் தமிழன்பர். அதன்பின் மாறுபட்ட கருத்துரைத்த தமிழ்ப்புலவர் எழுந்து, மதிப்புக்குரிய தமிழன்பர் அவர்கள் ஒன்றை விளக்க மற்றொன்று என்று பல கருத்துக்களைக் கூறியுள்ளார். இவை அனைத்தும் மறுக்கத்தக்கவை என்னும் நம்பிக்கை எனக்கு உண்டு. ஆயினும், ஒவ்வொரு கருத்தையும் தனித்தனி எடுத்து ஆராய்ந்துரைப் பதற்குப் போதிய காலம் இப்பொழுது இல்லை. மேலும், நண்பர் தமிழன்பர் கூறியவை மிகவும் கூர்ந்து கவனித்து ஆராயத்தக்கவை. எனவே, தொல்காப்பியர் கொண்ட பாடம் 'தொன்று' என்பதா? 'தோன்று' என்பதா? என்பது குறித்து ஓர் ஆய்வுரையை யான் தனிப் படப் படிக்க விழைகிறேன் என்று தமது கருத்தை அவையினருக்கு எடுத்துரைத்தார். பின்னர் அந்த அவையும் கலைந்தது.

இவ்விரு தமிழறிஞர்களின் பேச்சுகளை அடிநிலையாக வைத்து இந்த ஆய்வுக் கட்டுரை தோன்றுகிறது.

தமிழன்பர், 'ஒரு பிழை தகுதிவாய்ந்த பாடமாகக் கொள்ளப் பெற்றது' என்னும் கருத்தினையே தமது நண்பர் தமிழ்ப்புலவருடைய விளக்கத்திற்குப் பின்னும் கொண்டுள்ளார் என்பது புலனுகிறது. தமிழன்பர் தாம் கூறும் 'தொன்று' என்னும் பாடத்தையே தமிழ்ப் புலவரின் உரைகள் அரண் செய்வது போலக் கூறியுள்ளார். இப் பாடத்தைத் துணிவதற்கு அவர்கள் தந்துள்ள விளக்கங்கள் மேலும் சில ஐயங்களைத் தோற்றுவிக்கின்றன. எனவே, எனக்குத் தோன்றும் சில கருத்துக்களைத் தமிழறிஞர் முன்னிலையில் வைத்து உண்மை காண வேண்டும் என்னும் அவாவுடன் இக்கட்டுரையை எழுதமுற்படு கிறேன்.

இது பாடபேதம் பற்றிய விவாதமேயாயினும், இதில் பல கருத்து கள் பல்வேறு ஆய்வுகளுக்கும் பயன்படக்கூடும் என்னும் நோக்கத் தால் விளக்கமாகவே இக்கட்டுரை அமைக்கப்பெற்றிருக்கிறது. இக் கட்டுரையின் தோற்றத்திற்கு முந்திய நிகழ்ச்சிகள் தெரிய வேண்டு வது மிகவும் இன்றியமையாததாய் இருத்தலின், முன்னிகழ்ச்சிகள் இங்குத் தோற்றுவாயாகக் கூறப்பட்டன.

'தோன்று மொழிப் புலவர்' என்னும் பாடத்தைச் சிறந்த பாடம் என்று காட்டி விட வேண்டும் என்பது அன்று எனது நோக்கம். அது தவறன்று என்று காட்டவே விரும்புகிறேன். தமிழ்ப்புலவர் எடுத்துக் காட்டிய ஏதுக்கள் தமிழன்பரின் கருத்தை மெய்ப்பிக்கவில்லை என்றும் அது பிழைபட்ட பாடமே என்றும் தமிழன்பர் மறுத்துவிட் டார்கள். ஆகவே' 'தொன்று', 'தோன்று' என்னும் சொற்களின் இயல்பையும் பொருளையும் நான் அறிந்தவரையில் எடுத்துக்காட்டி, 'தோன்று' என்னும் பாடம் பிழைபட்டது அன்று என நான் கருது வதற்கான காரணங்களை விவரிக்கத் தொடங்குகிறேன்.

தமிழன்பர் அவர்களின் உரைகளில் எனக்குப் போந்த ஐயங் களையும், அவை பற்றி நான் கண்ட விளக்கங்களையும் பின்வரும் வகையில் பாகுபடுத்திக் கொடுத்துள்ளேன்.
அவை வருமாறு :

1. 'தொன்று' என்பது 'விளங்கிய' என்னும் பொருள் தருவதா ?
2. 'விளங்கிய' என்பது பிரசித்தமான அல்லது பழைய என்னும் பொருள் தருவதாகுமா ?
3. தொன்று என்பது பயின்று வந்தனவாகத் தமிழன்பர் காட் டிய நூலாதாரங்கள் 'பழமை' அல்லது 'பிரசித்தம்' என்னும் பொருளை உணர்த்துகின்றனவா ?
4. 'தொன்று' என்பதன் ஆட்சியும் பொருளும் (தொல்காப்பி யத்தில்)
5. 'தோன்று' அல்லது 'தோன்றும்' என்பதன் ஆட்சியும் பொரு ளும் (தொல்காப்பியத்தில்)
6. 'தொன்று' 'தோன்று' என்னும் இரு சொற்களும் ஒரே வகை யானவையா ?
7. 'தோன்று மொழிப்புலவர்' என்னும் தொடராட்சி.
8. நூற்பாவிற்கு எதுகை மோனை முதலிய செய்யுளமைதி உண்டா ?
9. கருத்துத் திரட்டு.
10. தேற்றம்.

### 1. 'தொன்று' என்பது 'விளங்கிய' என்னும் பொருள் தருவதா ?

தொல், தொன்று, தொன்மை, தொண்டு என்பன பழமை என்னும் பொருள் தரும் ஒருவகைப்பட்ட சொற்களாம். 'தொன்று தொட்டு,' 'தொண்டுகிழம்' என இக்கால வழக்கிலும் வழங்குதல் காணலாம்.

'தொன்மை, தொடர்பு, தொத்து, தொண்டு
முறையே, முன்பு, **தொன்று**, பூருவம்,
தொல்லை, முரி, விருத்தம், முது,
முந்து, புராதனம், முதுமை என
வந்தவை **பழமை** ஆமெனவைப்பர்'

என்பது திவாகரம் (பண்பு பற்றிய பெயர்).

'ஒல்லை, புராணம், முதுமை, முறை, ஊழ்,
தொல்லை, முந்து, **தொன்று**, பண்டு,
தொன்மை, முன்னை, புராதனம், **பழமை**'

என்பது பிங்கல நிகண்டு (2208).

'தொல்லை, முன், பண்டு, முந்தை,
**தொன்று**, பூருவம், புராணம்,
ஒல்லையே புராதனத் தோடு
உற்றஊழ் பழமை பத்தாம்'

என்பது சூடாமணி நிகண்டு (பண்பு. 10).

'விளங்குதல்' என்னும் பொருளில் 'விளக்கம்' என்னும் பெயர் வடிவம் பழமைப் பொருட்கு நிகண்டுகளில் தரப்படவில்லை. 'விளங்குதல்' என்பதனை 'ஒளி விடுதல்' என்னும் பொருளில் பிங்கல நிகண்டு தந்துள்ளது.

'**விளங்குதல்**, நகுதல், மின்னல், மிளிர்தல்,
துளங்குதல், நிகழ்தல், சுடர்தல், பிறழ்தல்,
இலங்கல், வயங்கல், இலகுதல், இமைத்தல்,
அலங்கல், தயங்கல், அலர்தல், நிலவல்,
ஒளிர்தல் என்றிவை **ஒளிவிடல்** ஆகும்'. (பிங்கல. 1939)

அகல் இரு விசும்பி னானும்
பகல் விளங்குதியால் பல்கதிர் விரித்தே' (புற. 8 : 10 11)

என்னுமிடத்தில் விளங்குதல் என்பது 'பிரகாசித்தல்' என்னும் பொருளையே தருகிறது. 'அகன்ற பெரிய ஆகாயத்தின்கண்ணும்

பகற்பொழுது விளங்குவை, பல கிரணங்களையும் பரப்பி' என்பது பழைய உரை.

'தொன்றுஇசை' (புறநா. 217 : 11)

என்பதற்குப் 'பழைய புகழை உடைய' என்பது புறநானூற்றுப் பழைய உரை. இந்நூற் பதிப்பின் அரும்பதம் முதலியவற்றின் அகராதியிலும் 'தொன்று — பழமை' என்றே டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் தந்துள்ளார். நச்சினார்க்கினியர் பத்துப்பாட்டு, கலித்தொகை முதலியவற்றின் உரைகளில் இச்சொற்குப் 'பழமை' என்னும் பொருளினையே குறித்துள்ளார். இங்ஙனமாகப் பழைய உரைகளிலும் நிகண்டு முதலியவற்றிலும் 'தொன்று' என்பது பழமைப் பொருள் தருவதாகக் காணப்படுகின்றதேயன்றித் தமிழன்பர் கூறியவாறு விளங்குதல், விளக்கம் என்னும் பொருளில் இச்சொல் ஆளப்பெற்றதாகத் தெரியவில்லை.

***2. 'விளங்கிய' என்பது பிரசித்தமான அல்லது பழைய என்னும் பொருள் தருவதாகுமா?***

விளங்குதல் என்னும் சொல் 'பிரகாசித்தல்' என்னும் பொருளுடையது என்பது முன்பு காட்டப்பெற்றது. இது, 'தெளிவாதல்,' 'வெளிப்படையாகத் தெரிதல்' என்னும் பொருளிலும் வழங்குதல் உண்டு. 'பிரசித்தம்' என்னும் வடசொல்லும் 'வெளிப்படையான' 'விளக்கமான' என்னும் பொருள் தருவதே. 'விளக்கமின்மை' என்னும் பொருளில் 'அப்பிரசித்தம்' என்னும் சொல்லாட்சி மணிமேகலையில் உள்ளது *(29 : 167–186)*. பிரசித்தம் என்பதற்குக் 'கீர்த்தி' என்னும் பொருள் இக்கால வழக்கே. தமிழ் லெக்ஸிகன் இப்பொருளுக்கு ஆதாரமாக உவின்ஸ்லோ அகராதியைக் காட்டியுள்ளது. 'வெளிப்படத் தெரிய வருவது' என்னும் பொருளில் 'விளங்கிய' என்பதற்குப் 'பிரசித்தம்' என்பதனைக் கருத்துப் பொருளாகக் கொள்ளலாம். ஆனால், 'பழைய' என்னும் பொருள் 'விளங்கிய' என்னும் சொல்லுக்குக் கூறுதல் பொருந்துமா? பழமையானவை எல்லாம் பிரசித்தமானவை என்றோ, கீர்த்தி பெற்றவை என்றோ கொள்ள இயலுமா? ஆகவே, 'விளங்கிய' என்பது 'பழைய' என்னும் பொருள் தருவதாகும் எனல் தெளிவின்றி உள்ளது.

***3. 'தொன்று' என்பது பயின்று வந்தனவாகத் தமிழன்பர் காட்டிய நூலாதாரங்கள் 'பழமை' அல்லது 'பிரசித்தம்' என்னும் பொருளை உணர்த்துகின்றனவா?***

நூலாதாரங்களாகத் தந்துள்ள பகுதிகளுக்கு முன்புள்ளோர் செய்த உரையையும் அவை பற்றி எழுதிய குறிப்புகளையும் நிரல்பட நோக்குவோம்.

1\. 'தொன்று மொழிந்து தொழில் கேட்ப' —மதுரைக். 72.
'தம்முடன் பழமையைச் சொல்லி ஏவல் கேட்கும்படி'
(நச். உரை)

'தொன்று தொழுபிறை'—மதுரைக். 193
'நின் குலத்திற்குப் பழைதாகிய எல்லாரும் தொழும் பிறை'
(நச். உரை)

2\. 'தொன்று உரை அணங்கே' மாறனலங். (உரை. மேற்.702)
'பழைய உரையை ; தொன்று—பழமை (மாறனலங். உரை)

3\. தோலென மொழிப தொன்மொழிப் புலவர்' (தொல். செய்யுள். 238) 'தொன்மொழி' என்றார் பழைய கதையைச் செய்தல் பற்றி. இது முன்வரும் சூத்திரத்தானும் பெறுதும். (தொன்மை தானே உரையொடு புணர்ந்த பழமை மேற்றே—தொல். செய்யுள். 237) (பேரா. உரை). இங்கே நச்சினார்க்கினியர் 'தொன்னெறிப் புலவர்' எனப் பாடங்கொண்டு, 'பழநெறியை அறிந்த புலவர்' என உரை கூறுகிறார்).

4\. 'தொன்றிய லவையம்'—பெருங். உஞ்சை. 36 : 40.
பெருங்கதை நூலுக்குப் பழைய உரை இல்லை. பதிப்பாசிரியர் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் எழுதிய அரும்பதக் குறிப்புகள் உள்ளன. பழைய முறைமையினையுடைய சபை என்பது இத்தொடரின் பொருளாம்.

5\. 'தொன்றியன் மகளிர்'—பெருங். மகத. 6 : 127.
பழைய முறைமையை அறிந்த மகளிர்' (உ.வே.சா. உரை)

6\. 'தொன்று மனை'—பெருங். உஞ்சை. 47 : 222. (மறு இல் தொன்றுமனை) தொன்று—பழமை. (உ.வே.சா. குறிப்பு)

7\. 'தொன்று முதிர் தொடர்பு—பெருங். மகத. 18 : 108
(பழமையாக முதிர்ந்து வருகிற நட்பு)

8\. 'தொன்று—வழி வந்த குன்றாக் கற்பு'-பெருங். இலா. 11 : 46.
(பண்டு தொட்டு வழிவழியாக வந்த குறைவு இல்லாத நிறைந்த கற்பு என்பது பொருளாம்)

9\. 'தொன்றுபடு சிதாஅர்' — புறம். 400 : 10. (பழைய உரை இல்லாத பகுதி. நைந்து அழுக்கேறி மிகவும் பழகிப் போன ஆடை என்னும் பொருளதாகும்).

10\. 'தொன்றிசை'—(புறநா. 217 : 11) 'பழைய புகழையுடைய' (பழையவுரை)

11\. 'தொன்றிவ் வுலகத்துக் கேட்டு மறிதியோ ? '—கலி. நெய். 25 : 48. 'பழைதாக இவ்வுலகத்து மகளிரும் தத்தம் கணவரைக்

கண்டால் கூடுவதன்றித் துணிந்திருந்தார் என்று கேட்டும் அறிதியோ?' (நச். உரை).

12. 'தொன்று முதிர் வேளிர்'—குறுந். 164, (நற். 280 : 8) 'மிகப் பழைய வேளிர்' (வி. ரை ) மிகப் பழங்காலம் முதல் இந்நாட்டில் இருந்து பழமையுற்ற வேளிர் (உ. வே. சா. உரை).

13. 'தொன்றியல் புகழது'—பரி. பா. 15 : 36. 'பழைதாய் இயல்கின்ற புகழையுடைய' (பழையவுரை).

14. 'தொன்றோர் காலை நல்லமன்'—பதிற். 19 : 24. (முற்பட்ட காலத்து, முன் ஒரு காலத்து).

இங்கு எடுத்துக்காட்டிய மேற்கோள்களனைத்திலும் 'தொன்று' என்னும் சொல் 'பழைமை' அல்லது 'பிரசித்தம்' என்னும் பொருளையே உணர்த்துதலை அறியலாம்' என்று தமிழன்பர் குறிப்பிட்டுள்ளார்கள். எடுத்துக்காட்டிய மேற்கோள்கள் அனைத்திலும் 'தொன்று' என்னும் சொல் 'பழைமை' என்னும் பொருளில் வந்துள்ளது என்பதில் சிறிதும் ஐயமில்லை. பழைய உரைகாரர்களும், உ. வே, சாமிநாதையர் அவர்கள் எழுதிய குறிப்புகளும் இப் பொருளையே தருதல் மேலே காணலாகும்.

இனி, இச்சொல் பயின்றனவாகக் காட்டிய மேற்கோட் பகுதிகளில் எல்லாம் 'பிரசித்தம்' என்னும் பொருள் தருவதாயுள்ளதா? பிரசித்தம் என்றால் வெளிப்படையானது அல்லது விளக்கமானது என்னும் பொருள் தருவதாகும் என்பது முன்னர் விளக்கப்பெற்றது. மேலும், பிரசித்தம் என்பதைக் கீர்த்தி பெற்ற அல்லது சிறந்த என்னும் பொருளில் தமிழன்பர் கருதுகிறாரா? இப்பொருள் 'தொன்றியலவையம்,' 'தொன்று முதிர் வேளிர்' என்னும் இடங்களில் தொனிப்பதுபோல் தோன்றினும் அது நேர் பொருளாக மாட்டாது; கருத்துப் பொருளே யாகும். இப்பொருளில் முன்னையோர் கருதிற்றிலர் என்பதும் 'தொன்று' என்பதற்குப் 'பழமை' என்னும் பொருளே கொண்டனர் என்பதும் முன்னர்க் காட்டியுள்ள மேற்கோள்களின் உரைப்பகுதிகளால் தெரியலாம்.

### 4. 'தொன்று' என்பதன் ஆட்சியும் பொருளும் (தொல்காப்பியத்தில்)

' இன்றி என்னும் வினை எஞ்சுஇறுதி
நின்ற இகரம் உகரம் ஆதல்
தொன்று இயல் மருங்கின் செய்யுளுள் உரித்தே'

(தொல். எழுத். 7 : 35)

என ஒரே ஓரிடத்தில்தான் 'தொன்று' என்னும் சொல் தொல்காப்பியத்துள் இடம் பெற்றுள்ளது. இங்கே மோனே, எதுகை அமைப்பு முறையில் 'தொன்று' என்பது 'இன்றி,' 'நின்ற' என்பவற்றிற்கு எதுகையாக வந்துள்ளது. எனவே, இச்சொல் வடிவில் 'தொன்று வா?' 'தோன்று வா?' என்னும் ஐயத்திற்குச் சிறிதும் இடம் இல்லை. 'தொன்று இயல் மருங்கில் செய்யுளுள் உரித்து' என்பதற்குப், '*பழக* நடந்த கூற்றையுடைய செய்யுட்களிடத்து உரித்து' என இளம் பூரணரும், '*பழக* நடந்த கூற்றையுடைய செய்யுளுள் உரித்து' என நச்சினார்க்கினியரும் உரை செய்துள்ளார்.

இதனல் இருவரும் இச்சொற்குப் 'பழமை' என்னும் பொருளே கொண்டனர் என்பது புலனகும்.

***5. 'தோன்று' அல்லது 'தோன்றும்' என்பதன் ஆட்சியும் பொருளும்***

'தோன்ற', 'தோன்று' 'தோன்றும்' என்னும் சொல் வடிவங்கள் தொல்காப்பியத்தில் பல இடங்களில் இடம் பெற்றுள்ளன. 'தோன்றும்' என்பதற்கு நிற்கும், பிறக்கும், வரும், விளங்கும், அறியப் படும், புலப்படும், கிளக்கப்படும், நிகழும், வெளிப்படும் என்னும் பொருள்கள் உரைகாரர்களால் தரப்பட்டுள்ளன.

***தோன்ற*** : 'யாப்பினுள் தோன்ற'யாத்து அமைப்பதுவே (தொல். செய்யு. 162) இங்கே 'தோன்ற' என்பதற்கு விளங்க அல்லது புலப் பட என்பது பொருளாம்.

***தோன்றும்*** : 'வினேயின் ***தோன்றும்*** பால்அறிகிளவியும்,
பெயரின் ***தோன்றும்*** பால்அறிகிளவியும்,
மயங்கல் கூடா தம் மரபினவே' (தொல். 10 : 11)

இச்சூத்திரத்தில் நச்சினார்க்கினியர், 'வினேயின் தோன்றும்,' 'பெயரின் தோன்றும்' என்பவற்றிற்கு, 'வினைச்சொல்லான் ***விளங்கும்***, பெயர்ச்சொல்லான் ***விளங்கும்***' எனப் பொருள் கூறியுள்ளார்.

இங்ஙனமே 'விளங்கும்' எனத் தொல்காப்பியத்தில் வரும் சொல் லுக்குத் 'தோன்ற' என்று நச்சினார்க்கினியர் பொருள் எழுதிய இடமும் ஒன்று உளது.

'நோயும் துன்பமும் இருவகை நிலேயின்,
காமம் கண்ணிய மரபிடை தெரிய
எட்டன் பகுதியும் விளங்க ஒட்டிய
...................................
ஒன்று இடத்து இருவர்க்கும் உரியபாற் கிளவி'
(தொல். பொருளியல் 2)

இதற்கு நச்சினார்க்கினியர் தரும் உரை விளக்கமாவது, துன்பமும் இன்பமுமாகிய இரண்டு நிலைக்களத்தும் காமம் கருதின வரலாற்று முறையிடம் விளங்க நகை முதலிய எட்டனுடைய கூறு பாடும் தோன்ற'—என்பது. இங்கே விளங்க என்பதற்குத் தோன்ற என்பது பொருளாகக் குறித்தல் புலனாகும். இதனால் 'தோன்று மொழிப் புலவர்' (தொல். பொருள். செய்யு. 165) என்ற இடத்தும். விளங்கிய மொழியையுடைய புலவர்' என்னும் நச்சினார்க்கினியர் உரை 'தோன்று' என்னும் சொல்லுக்கே உரியதாகும் என்பது உறுதி யாகும்.

### 6. 'தொன்று,' 'தோன்று' என்னும் இரு சொற்களும் ஒரே வகையானவையா?

'தொன்று' என்பது 'பழமை' என்னும் பொருள் தரும் பண்புப் பெயர். ஆகவே நிகண்டுகள் இதனைப் பண்பு பற்றிய பெயர்த் தொகுதியில் தருகின்றன. இது குன்று, மன்று, கன்று, இன்று என வரும் சொற்களைப் போன்ற வடிவ அமைதி பெற்றுள்ளது. 'தொன்று மொழிந்து, 'தொன்றுபடு,' 'தொன்றுமுதிர்' என இலக்கியங்களில் வரும் இடங்களை நோக்கினும் இது பெயராய் நிற்றல் விளங்கும்.

'தோன்று' என்பது குற்றுகர ஈற்றைக் கொண்ட வினை அடி, நிற்கும், பிறக்கும், வரும், புலப்படும், விளங்கும் முதலிய பொருள் களில் வருவதாகும். 'விளங்கிய மொழியையுடைய' என்னும் நச்சினார்க்கினியர் உரைக்குப் பொருத்தமாக அமைவது 'தோன்று' என்னும் வினையடியே. 'தோன்றுமொழி' என்பது 'விளங்கிய மொழி' எனப் பெயரெச்சமாய் இங்கு வந்துள்ளது எனக் கோடலே அமை வுடைத்தாம்.

தமிழன்பர் உரைத்தபடி 'தொன்று' என்னும் பெயர் வடிவிற்கு விளங்கிய எனப்பொருள் கூறல் பொருந்துவதோ? நச்சினார்க் கினியர் அக்கருத்தினராயின், 'விளக்கமான' என உரை எழுதியிருப் பர் அன்றோ?

### 7. 'தோன்று மொழிப் புலவர்' என்னும் தொடர் ஆட்சி

'தோன்றும்' என்பது முற்றாகவும் எச்சமாகவும் பயின்றுவரும் சொல்லாகும்.

> 'வாராக் காலத்து வினைச்சொற் கிளவி
> இறப்பினும் நிகழ்வினும் சிறப்பத் தோன்றும்'
> (தொல். சொல். வினை. 48)

> 'இறப்பே எதிர்வே ஆயிரு காலமும்
> சிறப்பத் தோன்றும் மயங்கு மொழிக்கிளவி'
> (தொல். சொல். வினை. 50)

' மெய்யின் வழியது உயிர் தோன்று நிலையே '
(தொல். எழுத். நூன். 18)

' எழுவாய் வேற்றுமை பெயர் தோன்றுநிலையே '
(தொல். சொல். வேற். 4)

' விளியெனப் படுவ கொள்ளும் பெயரொடு
தெளியத் தோன்றும் இயற்கைய என்ப ' (தொல். விளி. 1)

எனவரும் சூத்திரங்களில் பயின்று வரும் சொற்களை நோக்கின், இது புலனாகும். இலக்கியங்களிலும் இவ்வகைப் பொருளில் இச்சொல் ஆளப்பெற்றிருத்தலைப் பின்வரும் செய்யுட் பகுதிகளில் காண லாகும்.

' உதுக்காண் தோன்றும் எம்சிறுநல் ஊரே ' (நற். 264 : 9)

' மணி போலத் தோன்றும், மணிபோலத் தோன்றும்
மண்ணு மணிபோலத் தோன்றும்—என்மேனியைத்
துன்னுன் துறந்தான் மலை .' (கலித். 41 : 33-35)

' இன்று ஏழ் நாளில் இந்நகர் மருங்கே
வந்து தோன்றும் மடக்கொடி நல்லாள் ' (மணி 7 : 24-25)

என வருமிடங்களில் தோன்றும் என்பது முற்றுப்பொருள் பயந்து நிற்கின்றது.

' திருவுடைத் திருமனை ஐது தோன்று கமழ்புகை
வருமழை மங்குலின் மறுகுடன் மறைக்கும் '
(புறநா. 323 : 16-17)

பெருங்களிற்று அடியின் தோன்றும் ஒருகண்
இரும்பறை இரவல!' (புறநா. 263 : 1-2)

' ஞான்று தோன்று அவிர்சுடர் ' (அகம். 39 : 13)

' நீண்டு தோன்று உயர்குடை நிழல் என ' (கலித். 100 : 3)

எனவரும் இடங்களில் பெயரெச்சப் பொருளில் தோன்று, தோன்றும் என்பவை வந்துள்ளன. இங்கெல்லாம் புலப்படுதல், விளங்குதல் என்னும் பொருளதாய் இச்சொல் ஆளப் பெற்றிருத்தல் நோக்கத் தகும். இச்சொல் சங்க இலக்கியங்களில் பரவலாகக் காணப்படுவ தோடு தேவாரம், திவ்வியப்பிரபந்தம் முதலிய பக்திப் பாடல்களில் மிகுதியாய்ப் பயின்று வந்துள்ளன.

' வடியேறு திரிசூலம் தோன்றும் தோன்றும்
வளர்சடை மேல் இளமதியம் தோன்றும் தோன்றும்
கடியேறு கமிழ் கொன்றைக் கண்ணி தோன்றும்
காதில் வெண்குழைதோடு கலந்து தோன்றும்

இடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்றும்
எழில் திகழும் திருமுடியும்இலங்கித் தோன்றும்
பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்
பொழில் திகழும் பூவணத்து எம் புனிதனுர்க்கே !'

எனத் தொடங்கும் திருப்பூவணத் திருத்தாண்டகச் செய்யுட்களில் எல்லாம் தோன்றும் என்னும் சொல்லாட்சி மிக்கு ஆளப்பெற்றிருத்தல் காணலாம்.

' தாழ்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்நாணும் தோன்றுமால்—சூழும்
திரண்டு அருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டு உருவும் ஒன்ருய் இசைந்து '

என்பது பேயாழ்வாரின் மூன்ரும் திருவந்தாதிப் பாடல் (63).

இங்குக் காட்டிய தேவார திவ்யப் பிரபந்தப் பாசுரங்களில் 'தோன்றும்' என்பது புலப்படும் அதாவது காட்சிக்கு இலக்காகும் என்னும் பொருளில் வினைமுற்ருக வருகிறது. தேவாரப் பாட்டில் 'இலங்கித் தோன்றும்' 'பொலிந்து தோன்றும்' என வருகின்ற தொடர், 'ஒளிவீசி விளங்கிக் காணப்பெறும், என்னும் பொருள் தரும். இங்ஙனமே தொல்காப்பியத்தில் நச்சினுர்க்கினியரும், 'தெளியத் தோன்றும்' (தொல். சொல். விளி. 1) என்னும் தொடருக்கு விளங்கத் தோன்றும் என்று உரை கூறுகின்ருர். சேனுவரையர் 'சிறப்பத் தோன்றும்' (சொல். வினை 48, 50) என்னும் தொடருக்கும், விளங்கத் தோன்றும் என்றே உரை தருகின்ருர். தோன்றும் என்பதற்கு அடைமொழியாக அதே கருத்தில் வேறு சொல் அடுத்து வரும்போது தோன்றுதல் என்பது 'புலப்படும்' என்னும் பொருளாதாகவே நிற்றல் காணலாம். அடைமொழி இன்றி வருமிடங்களில் தோன்றும் என்பது புலப்படும், விளங்கும் என்னும் பொருள்களைப் பயந்து நிற்கும் ஆற்றல் பெற்றதாயுள்ளது.

'ஒளிர் பொறி மஞ்ஞை அன்ன
தளிர் போன்ற சாயலவள் தோன்றுவாய்மை பெருகி'
(தேவாரம் 4 : 8 : 4)

'துள்ளி வெள்ளிள வாளைபாய் வயல்
தோன்று தாமரைப் பூக்கள் மேல்' (தேவா. 7 : 35 : 5)

'துயரிலங்கும் பல ஊழிகள்
தோன்றும் பொழுதெல்லாம்' (தேவா. 1 : 1 : 8)

எனவரும் தேவாரப் பாடலடிகளில் 'தோன்று', 'தோன்றும்' என்பன பெயரெச்சமாக ஆட்சி பெற்றிருத்தல் கவனித்தற்குரியதாம். இங்

ஙனமே திவ்வியப்பிரபந்தப் பாசுரங்களிலும் இச்சொற்கள் வருதல் பின்வரும் பகுதிகளால் விளங்கும் :

'மூன்றுடன் வணங்கு தோன்றுபுகழ் ஆணை
மெய்பெற நடாய தெய்வம் மூவரில்' (திருவாசிரியம் 3 : 2-3)

'தோன்று சோதி மூன்றுமாய்த்
துளக்கமில் விளக்கமாய்' (திருச்சந்த 4 : 3)

'சோதி போல் தோன்றும் சுடர்பொன் நெடுமுடிஎம்
ஆதி காண்பார்க்கும் அரிது' (முதல் திருவந். 49)

'சூட்டுயர் மாடங்கள் சூழ்ந்து தோன்றும்
துவராபதிக்கு என்னை உய்த்திடுமின்.' (நாச்சியார் 12 : 9)

தோன்று அல்லது தோன்றும் எனவரும் சொல்லாட்சி இலக்கிய இலக்கணங்களில் வருதல் கண்டோம், 'தோன்றும்' என்பது 'நிலை' என்பதனை அடுத்துப் பெயரெச்சமாக வருதலையும் 'தோன்றும் நிலை' எனவரும் தொல்காப்பியர் வாக்கில் காண்கிறோம். இவ்வாறே இச்சொல் 'மொழி' என்பதனை அடுத்துப் பெயரெச்சமாய் நிற்கின்றமையைத் 'தோன்றுமொழி' என்னும் தொடரில் காணலாகும். "தோன்று மொழிப்புல்வர்" என்னும் தொடர்மொழி ஆட்சி பிற நூல்களில் உளவா ?' எனத் தமிழன்பர் அவர்கள் கேட்டுள்ளபடி அத்தொடர் மொழி அப்படியே வந்த இடம் இப்பொழுது கண்டு கொள்ளக்கூடவில்லை.

இலக்கண விளக்கப் பாட்டியலில் 'பிண்டம்' என்பதற்கு விளக்கம் தரும் சூத்திரம் தொல்காப்பியர் தந்துள்ள,

'மூன்றுப் படக்கிய தன்மைத் தாயின்
தோன்று மொழிப் புலவர் அது பிண்டம் என்ப'

(பாட்டியல் 136)

என்னும் சூத்திரமே. இந்நூலில் 'தோன்று' என்னும் பாடமே திரு. தாமோதரம்பிள்ளை அவர்கள் பதிப்பில் உள்ளது. இதற்கு, 'சூத்திரமும் ஓத்தும் படலமும் என்னும் மூன்றுறுப்பினையும் அகப்படுத்தி நிற்கும் தன்மையுடைத்தாயின் அதனை உலகினின்று விளங்கும் மொழியைக் கூறும் புலவர் பிண்டம் என்று கூறுவர்' என்று உரைவரையப் பெற்றிருக்கிறது. 'தோன்றும்' என்னும் சொல்லுக்கு இலக்கண விளக்க நூலுரையிற் காணும் பொருளும் நச்சினார்க்கினியர் கூறிய பொருளும் ஒன்றே. ஆகவே, நச்சினார்க்கினியர் கருதியது போலவே இலக்கண விளக்கமுடையாரும் 'தோன்றும்' என்னும் பாடமே கொண்டனர் என்பது விளங்கும்.

**8. நூற்பாவிற்கு எதுகை, மோனை முதலிய செய்யுளமைதி உண்டா?**

தமிழன்பர் தமது உரையில், "நூற்பாவிற்கும் எதுகை மோனை முதலிய செய்யுளமைதியும் உண்டு என்பது போதரும் என்று கூறுகிறார் நண்பர். இது அறிஞர் பலரும் ஒத்துக் கொள்வதற்குரிய கருத்தன்று", என்று மறுத்தலித்துள்ளார். பொதுப்படையாக, 'இது அறிஞர் பலரும் ஒப்புக்கொள்வதற்குரிய கருத்தன்று' என்று பேசியுள்ளாரே யன்றி, ஒப்புக் கொள்ளாமைக்குரிய காரணங்களையோ அங்ஙனம் கருதும் அறிஞர்களையோ சுட்டி எதுவும் சொன்னாரில்லை. எனவே, இதுபற்றி நான் கண்ட கருத்துக்களை இங்கு விவரிக்க முற்படுகிறேன்.

முதலாவதாக, நூற்பாக்களை ஆசிரியர் தொல்காப்பியர் அடிவரை இல்லாத செய்யுட்களில் ஒன்று எனக் கொண்டுள்ளமை கருதத்தக்கது.

'எழு நிலத்து எழுந்த செய்யுள் தெரியின்
அடிவரை இல்லன ஆறுஎன மொழிப'—

'அவ்வதாம்,
நூலினான, உரையினான,
நொடியொடு புணர்ந்த பிசியினான
ஏது நுதலிய முதுமொழியான,
மறைமொழி கிளந்த மந்திரத்தான,
கூற்றுஇடை வைத்த குறிப்பினான.'

(தொல். செய்யு. 157, 158)

இங்கே, 'மொழிப' என முந்தையோர் கருத்தாக ஆசிரியர் தொல்காப்பியர் கூறுதலால், அவருக்கு முற்பட்ட காலத்து ஆசிரியர்களும் நூற்பா எனப்படும் சூத்திரத்தை அடி வரையறை இல்லாத செய்யுள் என்றே கொண்டனர் என்பது போதரும்.

'அவற்றுள்,
சூத்திரம் தானே
ஆடி நிழலின் அறியத் தோன்றி,
நாடுதல் இன்றிப் பொருள்நனி விளங்க
யாப்பினுள் தோன்ற யாத்து அமைப்பதுவே'

(தொல். பொருள். செய்யு. 162)

என்பது சூத்திரத்தின் இயல்பைக் புலப்படுத்தும் செய்யுளியல் சூத்திரம். மரபியலில் இக்கருத்தை இன்னும் விரிவாகவும் தெளிவாகவும் ஆசிரியர் உரைத்துள்ளார். அது வருமாறு:

"மேற்கிளந் தெடுத்த யாப்பினுட் பொருளொடு
சில்வகை யெழுத்தின் செய்யுட் டாகிச்
சொல்லுங் காலை யுரையகத் தடக்கி
நுண்மையொடு புணர்ந்த வொண்மைத்தாகித்
துளக்க லாகாத் துணைமை யெய்தி
அளக்க லாகா வரும்பொருட் டாகிப்
பல்வகை யானும் பயன்றெரி புடையது
சூத்திரத் தியல்பென யாத்தனர் புலவர்.'

(தொல். பொருள். மரபி. 100)

இதற்கு இளம்பூரணர், பேராசிரியர் என்னும் இருவர் உரைகளே பழைய உரைகளாக இப்பொழுது காண்பவை. இவற்றுள் இளம் பூரணர் சூத்திரப் பொருளை விளக்கமாக எழுதாமல் கருத்தினையே புலப்படுத்தியுள்ளார். பேராசிரியர் உரை விரிவாக உள்ளது. அவர், 'சில்வகை எழுத்தின் செய்யுட்டாகி' எனவரும் இரண்டாம் அடிக்கு எழுதியுள்ள உரைப்பகுதி கூர்ந்து கவனிக்கத்தக்கது. அது வரு மாறு :

"ஆடி நிழலின் அறியச் செய்யுங்கால், அதுபோல ஒரு வழிப் பொருளடக்க ஒரு வழி வெள்ளிடைக் கிடப்பச் செய்யப்படாது பொருட்கு வேண்டும் சில சொல்லாற் செய்யும் செய்கைத்து ஆகி. செய்யுள் என்றான் அடிவரைச் செய்யுளின் வேறுபட்ட பொருட் பாட்டிற்குரிய அடிவரைப் பாட்டினுட் சிறப்புடைய ஆசிரியத்தா னும் வெண்பாவானும் செய்யப்படும் சூத்திரம் என்றற்கு என்பது. என்னை? மண்டிலப்பாட்டின் உடம்பொடு புணர்த்துச் சூத்திரம் செய்தமையானும்,

'சின்மென் மொழியிற் றாய பனுவல்'
வெண்பாட்டாகி வருமாதலானும் என்பது.

இதனால் சூத்திரம் அகவற்பாட்டைப் போன்று வரும் அமைப் புடையது என்பது விளங்கும்.

'சின்மென் மொழியிற் றாய பனுவல்'

எனப் பேராசிரியர் காட்டிய சூத்திர அடி வெண்பாவிற்குரிய தளைய மைதியுடன் காணப்பெறுதலும் நோக்கத்தக்கது. தளையமைதியையே பேராசிரியர் சுட்டிக் காட்டும் போது, செய்யுளோசைக்கு இன்றிய மையாத எதுகை மோனை அமைதி நூற்பாவிற்குண்டு என்பது சொல்லாமலே பெறப்படும் அன்றோ?

நிகண்டு ஆசிரியர்கள் சூத்திரத்திற்கு 'நூற்பா வகவல்' என்று பெயரிட்டு, அகவற்பா வகையை ஒத்தது சூத்திரம் என்பதைப் புல படுத்தியுள்ளனர்.

' நூற்பா வகவல் நுணங்க நாடில்
சூத்திரம் குறித்த யாப்பிற் ருகி
அடிவரை யின்றி விழுமிதின் நடக்கும்'

என்பது திவாகரம் (ஒலி பற்றிய பெயர்).

' அடிவரை யின்றி விழுமிதின் நடக்கும்
நூற்பா வகவல் சூத்திரம் என்ப '

என்பது பிங்கல நிகண்டு (2069). நிகண்டுகளில் காணும் சூத்திர விளக்கம் தொல்காப்பிய நூலையும் உரையையும் பின்பற்றி அமைந்தது என்பது தெளிவாம்.

'குட்டித் தொல்காப்பியம்' எனப் போற்றப்பெறும் இலக்கண விளக்கத்தில், செய்யுளியலின் இறுதியிலே, ஓரடியானும் பலவடியானும் வரும் செய்யுட்களும் உள என்று கூறி, அவ்வாறு வருவன பாட்டுரை, நூல், மந்திரம், பிசி, முதுசொல், அங்கதம், வாழ்த்து என்பனவாகும் என்றும் விவரித்துள்ளார்.

' ஓரடியானும் பலவடி யானும்
ஒரோவழி இயலும் உரைத்த அச்செய்யுள்
அவை தாம் பாட்டுரை, நூலே, மந்திரம், பிசியே,
முதுசொல், அங்கதம், வாழ்த்தொடு பிறவும்
ஆகும் என்ப அறிந்திசி னோரே. (இலக். செய்யு. 51)

'இஃது அடியின்றியும் ஓரடியானும் நடைபெறும் செய்யுட்களும் உள என்பதூஉம் அவை இவை என்பதூஉம் கூறுகின்றது' என்று உரையில் கருத்தும் தரப் பெற்றிருக்கிறது. 'இங்கே நூல்' என்றது நூற்பாவை.

' அத்தின் அகரம் அகரமுனை இல்லை' (தொல். எழுத். புணர். 23)

' மொழிப் பொருட் காரணம் விழிப்பத் தோன்ரு '
(தொல். சொல். உரி. 96)

' எழுத்துப் பிரிந்து இசைத்தல் இவண் இயல்பு இன்றே '
(தொல். சொல். உரி. 97)

என்றுற்போல மோனை, எதுகை அமைப்புடன் உள்ள ஓரடிச் சூத்திரங்களையும் செய்யுள் எனவே கொள்ள வேண்டும் என்பது இலக்கண விளக்க நூலார் கருத்தாதல் ஒருதலை. அடி வரையறை இல்லாது வரும் செய்யுட்கள் எனத் தொல்காப்பியர் உரைத்த கருத்தையே இவர் விளக்கி உரைத்திருக்கின்றுர்.

திரு. வே. வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்கள் வெளியிட்டுள்ள 'நுண்பொருள் விளக்கம்' என்னும் இலக்கணக் கட்டுரைத்

தொகுப்பின்கண், 'தெவு'வா, 'தேவு'வா, என்னும் கட்டுரையில் 'தெவுக் கொளற் பொருட்டே (தொல். உரி. 47), 'தெவ்வுப்பகை ஆகும்' (தொல் சொல். உரி. 48) எனும் சூத்திர பாடம் பற்றிய ஆராய்ச்சி ஒன்று நிகழ்த்திய இடத்தில், தொல்காப்பியர் தமது சூத்திரங்களை எதுகை மோனை இயல்பு பொருந்த அமைந்துள்ளார் என்பதனை உறுதிப் படுத்தியே 'தேவு' என்னும் பாடம் நேரிது என்னும் துணிவிற்கு வந்துள்ளார். அதுபற்றி அவர் கூறிய கருத்துகள் வருமாறு :

> ' ஆசிரியர் தொல்காப்பியனுர் பெரும்பாலும் எதுகை மோனைகள் அமைத்தே சூத்திரம் செய்துள்ளார். எதுகைக்கண் இரண்டாமெழுத் தொன்றெதுகையேயன்றி இனவெதுகை முதலியனவும் அமைந்திருக்கும். இதனைப் பல இடத்தும் காணலாகும்.
>
> ' நீட்டம் வேண்டின் அவ்வளபுடைய
> கூட்டி எழூஉதல் என்மனுர் புலவர்.'
>
> ' நெட்டெழுத் திம்பரும் தொடர்மொழி யீற்றுங்
> குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே '
>
> என்பன காண்க. இனி, உரியியலையே நோக்குவோம்,
>
> ' வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா
> வெளிப்பட வாரா உரிச்சொல் மேன.'
>
> ' உரு உட் காகும் புரை உயர் பாகும்
> குருவும் கெழுவும் நிறனு கும்மே.'
>
> ' செல்லல் இன்னல் இன்னுமையே
> மல்லல் வளனே ஏபெற் ருகும்.'
>
> இவ்வாறு வந்துள்ளன பல. இனி, இச்சொல் (தேவு) வந்துள்ள சூத்திரத்தின் முதலடி,
>
> ' தாவே வலியும் வருத்தமு மாகும் '
>
> என்றிருத்தலின், இரண்டாம் அடி,
>
> ' தேவுக் கொளற் பொருட்டு தெவ்வுப்பகையாகும் '
>
> என்றே அமைந்திருக்கும் என்பது எளிதிற் புலனுகும். (நுண்பொருள் விளக்கம், பக். 131-132)

தொல்காப்பியத்துள் வந்துள்ள இரண்டிச் சூத்திரங்கள் 552. தனிச்சொல் பெற்று வந்த இரண்டடிச் சூத்திரங்கள் 20. ஆக 572 சூத்திரங்கள் இரண்டடிச் சூத்திரங்களாகும். இவற்றுள் திரு.ரெட்டியார் அவர்கள் காட்டியபடி இரண்டாமெழுத்தொன்று எதுகை பெற்று

வந்தன 317. இனவெழுத்துப் பெற்றும் பிறவெழுத்துப் பெற்றும் எதுகை அமைதி கொண்டன 210. இன்னும் 45 சூத்திரங்கள் குறிலுக்கு நெடிலும் நெடிலுக்குக் குறிலும் அடிமோனையாக அமைந்து காணப் பெறுகின்றன.

'ஊரொடு தோற்றமும் உரித்து எனமொழிப
வழக்கொடு சிவணிய வகைமையான.'

(தொல். புறத். 25)

'குறிப்பே குறித்தது கொள்ளும் ஆயின்
ஆங்கு அவை நிகழும் என்மனார் புலவர்.'

(தொல். களவியம். 6)

'செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
தங்குறிப் பினவே திசைச் சொற் கிளவி.'

(தொல். எச்ச. 4)

'முதல்முன் ஐவரின் கண்என் வேற்றுமை
சினைமுன் வருதல் தெள்ளிது என்ப.'

(தொல். சொல். வேற். மயங். 5)

'முதலும் சினையும் பொருள் வேறுபடா
நுவலுங் காலைச் சொற் குறிப்பினவே.'

(தொல். சொல். வேற். மயங். 6)

இங்ஙனம் வரும் இரண்டடி நூற்பாக்களைப் போன்றுவரும் செய்யுள், பாவின் வகைகளுள் குறட்பா ஒன்றே. ஆதலால், குறட்பா அமைதிக்கும் இரண்டடி நூற்பாவின் நடைக்கும் பெரிதும் ஒற்றுமை யுண்டு எனக் கருத இடமுண்டு. வெண்பா இயலானும் சூத்திரம் அமையும் எனப் பேராசிரியர் உரையில் காணும் குறிப்பும் இதற்கு அமைதிதருவதாயுள்ளது.

மேலே நூற்பாவிற்கு குறித்த வகையில் நெடிலுக்குக் குறிலும் குறிலுக்கு நெடிலும் மோனை அமைதி கொண்ட குறட்பாக்களையும் இனவெழுத்துப் பெற்றும் பிறவெழுத்துப் பெற்றும் வரும் குறட்பாக் களையும் இருவிகற்பமாய் வந்தன என்பர் இலக்கண நூலார்.

'அறனன்று மாதவ னென்ப துலகெந்தை
தாள்காணார் நாணுக் கொள'

என்பதை இருவிகற்பக் குறள் வெண்பா எனச் சிதம்பரச் செய்யுட் கோவை தருகிறது. மாறன் பாப் பாவினத்தில்,

'மாத ரிலவிதழ்போன் மாண்புற்றோ மாதவனால்
வானோ ரருந்து மருந்து'

என்பது இரண்டு விகற்பக் குறள் வெண்பாவிற்கு எடுத்துக்காட்டாக உள்ளது. பாவின் பெயராலே போற்றப்பெறும் திருக்குறள் நூலகத்தும் மேற்குறித்த அமைதி கொண்டனபலவுள. சில வருமாறு:—

'நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு
தானைக் கொண்டன்ன தகைத்து.' (குறள். 109 : 2)

'பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்' (குறள் 58 : 10)

'நூலாருள் நூல்வல்ல னாகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு' (குறள். 69 : 2)

இவற்றால் குறட்பாக்களில் இருவிகற்பாய் வருதல் போல ஆசிரியர் தொல்காப்பியரும் இருவிகற்பமாய் எதுகை மோனையை மேற்கொண்டனர் என்பது தெளிவாம்.

இன்னும் ஒன்று. செய்யுளில் மட்டும் வரும் எனத்தொல்காப்பியர் விதித்த விதிப்படி வரும் சொற்றொடரை அவர்தம் சூத்திரங்களில் பல இடத்தும் எடுத்தாளுதலும் கவனிக்கத் தக்கதாம். அகர ஈற்றுச் பெயர்களின் முன் வன்கணம், மென்கணம், இடைக்கணம் உயிர்க் கணங்களில் வரும் முதனிலைகள் வந்து கூடுமிடத்து உளதாம் மாறுதல்களை உயிர் மயங்கியலில் 2 முதல் 6 வரை உள்ள 5 சூத்திரங்களிலே விளக்கியுள்ளார். ஆறுவது சூத்திரம்,

'நீட வருதல் செய்யுளுள் உரித்தே'

என்பது. இதற்கு முந்திய சூத்திரம்,

'உயிர் முன் வரினும் ஆயியல் திரியாது'

என வருவதனை நோக்கி, வருமொழி முதல் உயிரே என உரையாசிரியர்கள் கொண்டு,

'ஆயிரு திணையின் இசைக்குமன சொல்லே'

'ஆயிரு பாற் சொல்'

என்பவற்றை உதாரணமாகக் காட்டினர். இவ்வுதாரணங்கள் இரண்டும் தொல்காப்பியத்துள் பயின்றுவரும் தொடர்களே. எனவே, உரையாசிரியர்கள் தொல்காப்பிய நூற்பாவைச் செய்யுளாகவே கொண்டனர் என்பது தெளிவாகும்.

மேலும், 'வருமொழி வரையாது கூறினமையில், வன்கணம் ஒழிந்த மென்கணம், இடைக்கணங்கள் வருங்கால் சுட்டு நீளுதல் கூடும்' என்று எழுதி, 'உதாரணம் வந்த வழிக் கண்டு கொள்க' என்றனர் உரையாசிரியர். தொல்காப்பியர் தம் நூலுள், ஆ முறை (8 : 45, 156; 6 : 25; 17 : 67), ஆ முப்பெயரும் (7 : 27; 29 : 8 : 33, 80)

ஆவயின் (2 : 1; 3 ; 14; 6 : 6) என மென்கண இடைக்கண மொழிகள் வருமிடத்துச் சுட்டு நீண்டு வருதலான ஆட்சி காணப்படுகிறது. தொல்காப்பியர் வன்கண, மென்கண, இடைக்கண, உயிரக்கணங் களுக்குச் சுட்டின்முன் வரும் விதி முன்னர் உரைத்தமையால், 'நீட வருதல்' என்னும் சூத்திரத்தின் வருமொழி நாற்கணமுமாக வருத லாகக் கோடலே அமைவுடைத்தாகும் என்று தோன்றுகிறது. செய் யுட்கு வகுத்த விதியை ஆசிரியர் உடம்பொடு புணர்த்துக் கொள்ளு தலின், நூற்பாவும் செய்யுளமைதியுடையது என்பது போதரும்.

"யாமரக் கிளவியும், பிடாவும், தளாவும்
ஆமுப் பெயரும் மெல்லெழுத்து மிகுமே'

(தொல். எழுத். உயிர். மயங். 35)

என்னும் சூத்திரத்து,'யா'எனவரும் முதலடிக்கு ஒப்பஇரண்டாமடியில் ஆ முப்பெயரும் எனச் சுட்டு நீட்சி கொண்டார் என்றும் கருதலாம். இம்மாதிரி மோனையில் அமைந்த நீட்சி இடங்கள் தொல்காப்பியத்துள் சில உள.

ஐ, ஔ, என்னும் ஆயீ ரெழுத்திற்கு (2 : 9)
தான், யான், என்னும் ஆயீ ரிறுதியும் (6 : 20)

என ஓரடியிற் கூட அகரச்சுட்டு நீண்டு வருதலும் காணப்படுகிறது.

சூத்திரயாப்பிற்கு எதுகை மோனை அமைதி உள்ளமை பற்றிப் பேராசிரியர் திரு. தெ. பொ. மீனுட்சிசுந்தரம்பிள்ளை அவர்களுடன் நான் பேசிக் கொண்டிருந்தபொழுது, "தொல்காப்பிய மரபியலில் யாட்டின் ஆண் பாற் பெயராக 'மொத்தை' எனத் தாமோதரம் பிள்ளை அவர்கள் பதிப்பில் காட்டப்பெற்ற பாடம், பிற் பதிப்புகளில் 'மோத் தை' எனக் கொள்ளப்பெற்றது மோனை அமைதி பற்றியதாகும்" என் னும் செய்தியைத் தெரிவித்தார்கள். பேராசிரியர் தெ. பொ. மீ. அவர்கள் குறித்த மரபியல் சூத்திரங்கள் வருமாறு;

'ஏது மேற்றையு மொருத்தலுங் களிறுஞ்
சேவுஞ் சேவலு மிரலையுங் கலையு
மோத்தையுந் தகரு முதளு மப்பரும்
போத்துங் கண்டியுங் கடுவனும் பிறவும்
யாத்த வாண்பாற் பெயரென மொழிப.'

(தொல். பொருள். மரபு, 2)

'மோத்தையுந் தகரு முதளு மப்பரும்
யாத்த வென்ப யாட்டின் கண்ணே.'

(தொல். பொருள். மரபு. 47)

மேற்குறித்த இரண்டு சூத்திரங்களிலும் அடிக்ளிடையே நெடில் மோனை உள்ளமையில், 'மோத்தை' என்பதே சரியான பாடம் எனப்

பிற்பதிப்பாசிரியர்கள் துணிந்தனர். திவாகரம், பிங்கலம், சூடாமணி நிகண்டுகள் வெள்ளாட்டின் ஆண்பாற்பெயராக 'மோத்தை' என் பதையே குறித்துள்ளமையும் ஈண்டுக் கவனிக்கத்தக்கதாம்.

மேலே கூறிய பலவற்றாலும் செய்யுட்குரிய எதுகை மோனைக் கட்டுக்கோப்புகளைத் தொல்காப்பியர் தமது சூத்திர யாப்பில் எங்கும் மேற்கொண்டுள்ளார் என்பது நன்கு விளங்கும்.

## 9. *கருத்துத் திரட்டு*

'மூன்றுறுப் படக்கிய தன்மைத் தாயின்
தோன்றுமொழிப் புலவரது பிண்டம் என்ப'

(தொல். பொருள். செய். 165)

எனவரும் தொல்காப்பியச் சூத்திரத்தின் உண்மைப்பாடம் 'தொன்று வா, தோன்றுவா' என்பதை ஆராயும் முகத்தான் இதுகாறும் கூறி வந்த கருத்துகளை ஒருங்கே சேர்த்துப் பார்ப்போம். 'தொன்று' என்னும் சொல் பழமை என்னும் பொருள் தருவதன்றி விளங்குதல் என்னும் பொருள் தருவது அன்று என்பதும், விளங்குதல் என்பது பிரசித்தம் எனப் பொருள் தரினும் பழமை என்னும் பொருள் தருவ தன்று என்பதும் முதற்கண் கூறப்பெற்றன. அடுத்து, 'தொன்று' என்பது பழமை அல்லது பிரசித்தம் என்னும் பொருளில் ஆட்சி பெற்றுள்ளது எனக் காட்டிய நூலாதாரங்கள் எல்லாம் 'பழமை' என்னும் பொருட்குரியதேயன்றிப் பிரசித்தம் என்னும் பொருள் தரு மாறில்லை எனபது விளக்கப்பெற்றது. தொன்று என்பது பழமைப் பொருளிலும், தோன்று என்பது விளங்கும் என்னும் பொருளிலும் தொல்காப்பியர் ஆண்டுள்ளார் என்பதும் கண்டோம். 'தோன்றும்' என்பதற்கு 'விளங்கிய' எனப் பொருள் கண்ட நச்சினார்க்கினியர் 'விளங்க' என்பதற்குத் 'தோன்று' எனப் பொருளியலில் உரை தரு தலின் அவர் கொண்ட விளங்கிய என்னும் பொருள் 'தோன்று' என் னும் சொல்லுக்கேயாகும் என்பது காட்டப்பெற்றது. பின்னர், 'தொன்று' 'தோன்று' என்பன இரண்டும் வெவ்வேறு பொருளினைக் குறிப்பன என்பதும், தொன்று பெயர்ப்பொருளிலும், தோன்று வினைப் பொருளிலும் வருவன என்பதும் கூறியதோடு, 'தோன்றும்' என்பது முற்றாயும் எச்சமாயும் இலக்கிய இலக்கண நூல்களில் ஆளப்பெற்றிருத்தலும் எடுத்துக்காட்டப்பெற்றது. 'தோன்றுமொழி' பெயரெச்சத் தொடராய் வருதலைச் சுட்டியும், 'தோன்று மொழிப் புல வர்' என்னும் தொடரையும் அதற்கு நச்சினார்க்கினியர் தந்துள்ள பொருளையும்இலக்கண விளக்க நூலாரும் மேற்கொண்டுள்ளனர் என் பது குறித்தும் விளக்கப்பெற்றது. இறுதியாக நூற்பா என்பது செய் யுள் வகையுள் ஒன்று என்பதும், செய்யுளுக்குரிய எதுகை மோனை அமைதி அதற்கும் உண்டு என்பதும் காட்டும் முகத்தான் தொல்காப் பிய உரையாசிரியர், நிகண்டாசிரியர்கள், இலக்கண விளக்க நூலார்

ஆகியோரின் கருத்துகள் எடுத்து விளக்கப்பெற்றன. இப்பொருள் பற்றித் திரு. வே. வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்கள் 'நுண்பொருள் விளக்க' நூலிற் கூறியதைக் காட்டி, அவர் கூறிய அமைதி தொல்காப்பிய நூலகத்து உளதா என்று காண முற்பட்டு அந்நூலிலுள்ள இரண்டடிச் சூத்திரங்களின் போக்குகள் புலப்படுத்தப்பெற்றன. இரண்டடிச் சூத்திரங்கள் குறட்பாவை ஒத்ததோர் அமைப்புடையன என்பதும், ஆசிரியர் தொல்காப்பியர் செய்யுட்கு விதித்த விதிமுறைகளைச் சூத்திரயாப்புக்கும் எடுத்தாண்டுள்ளார் என்பதும் காட்டி, நூற்பா செய்யுளமைதி பெற்றதே என்பது துணியப் பெற்றது.

## 10. தேற்றம்

இங்ஙனமாகப் பல படியானும், 'தொன்று', 'தோன்று' என்னும் சொற்களுள் ஆசிரியர் தொல்காப்பியர் தமது சூத்திரத்து ஆண்டது எதுவாக இருத்தல் கூடும் என்பதனை ஆராயும் முகத்தான் அச்சொற்களின் பொருளும், நூலாட்சியும், பிற இயல்புகளும் கண்டோம். பொருளமைதியாலும் சொல்லமைப்பாலும், யாப்பின் இயல்பினாலும், 'மூன்றுறுப்படக்கிய' என்னும் முதலடிக்கு ஏற்ற பாடம் 'தோன்று மொழி' என்பதேயாகும் என்றும் துணிபினையே தருகின்றது. 'தொன்று' என்பது ஓர் ஊகமான பாடமே எனக்கொள்ளக் கிடக்கின்றதேயன்றி அதனை மேற்கொள்ளுதற்குத் தக்க ஆதரவு இருப்பதாகத் தெரியவரவில்லை. ஆகவே, தொல்காப்பியப் பதிப்பாசிரியர்கள் இச்சூத்திரத்தைப் பொறுத்தவரையில் பிழைப்படப் பாடம் துணிந்தார்கள் என்று கொள்ளுவதற்கு இடமில்லை.

> 'எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும், அப் பொருள்
> மெய்ப்பொருள் காண்பது அறிவு'

என ஆராய்ச்சிக்கு வித்திட்டுச் சென்ற பொய்யாமொழியாரின் வாக்கை பொன்னே போல் போற்றி எனது இந்த ஆய்வுரையை அறிஞர் பெருமக்களின் முன்னர்ப் படைக்கின்றேன். எந்த ஆராய்ச்சியையும் முற்ற முடிந்த முடிவு என எவரும் கொள்ளார். ஆராய்ச்சி என்பதே மீண்டும் மீண்டும் சிந்திக்கத் தூண்டுவதுதானே?

# 3. ''ஐவகையடியும்'' என்னும் தொல்காப்பிய நூற்பா விளக்கம்*

*வித்துவான் திரு. அடிகளாசிரியர்,*
தமிழ்த்துறை, சென்னைப் பல்கலைக்கழகம்.

*முகவுரை*—இளம்பூரணர் கருத்து—பேராசிரியர் கருத்து—நச்சினார்க்கினியர் கருத்து-யாப்பருங்கல விருத்தியாசிரியர்கருத்து—என்கருத்து—என்கருத்து என்பவையே நன்கு கருதத்தக்கன; மற்றவை அவற்றிற்குத் துணை.

*பட்டியல்*

1. இருபத்தைந்து விகற்பம்—2. நூற்றிருபத்தைந்து விகற்பம் — 3. அறுநூற்றிருபத்தைந்தடி— 4. குறளடியில் நான்கெழுத்தடி—5. குறளடியில் ஐந்தெழுத்தடி — 6. குறளடியில் ஆறெழுத்தடி— 7. சிந்தடியில் ஏழெழுத்தடி — 8. சிந்தடியில் எட்டெழுத்தடி —9. சிந்தடியில் ஒன்பதெழுத்தடி— 10. அளவடியில் பத்தெழுத்தடி— 11. அளவடியில் பதினோரெழுத்தடி — 12, அளவடியில் பன்னிரண்டெழுத்தடி — 13. அளவடியில் பதின்மூன்றெழுத்தடி — 14. அளவடியில் பதினான்கெழுத்தடி — 15 நெடிலடியில் பதினைந்தெழுத்தடி — 16. நெடிலடியில் பதினாறெழுத்தடி—17. நெடிலடியில் பதினேழெழுத்தடி — 18. கழிநெடிலடியில் பதினெட்டெழுத்தடி — 19. கழிநெடிலடியில் பத்தொன்பதெழுத்தடி — 20. கழிநெடிலயில் இருபதெழுத்தடி.

---

* இக்கட்டுரை இராசபாளையம் மணிமேகலை மன்றத்தார் வழியாக உயர்திரு பூ. கு. குப்புசாமி ராசா அவர்கள் ஏற்படுத்திய இரு சூத்திர விளக்கப் போட்டிக் கட்டுரையில் 1967ஆம் ஆண்டு முதற்பரிசுபெற்றது.

"ஐவகை யடியும் விரிக்குங் காலை
மெய்வகை யமைந்த பதினேழ் நிலத்தும்
எழுபது வகையின் வழுவில வாகி
அறுநூற் றிருபத் தைந்தா கும்மே."

(தொல்காப்பியம். செய்யுளியல் 48)

*முகவுரை*

மேற்கண்ட இந்நூற்பாவிற்குத் தெளிவுரை கூறும்முன் அத் தெளிவுரைக்கு வேண்டிய முகவுரையை முன்னே தருகின்றேன்.

***தொல்காப்பியர்*** செய்யுளியல் முதற் சூத்திரத்தே செய்யுள் உறுப்புக்களையெல்லாம் தொகுத்தோதியுள்ளார். அவ்வுறுப்புக் களுள் ஒன்று அடியாகும். அவ்வடியென்னும் உறுப்பினை அவர் கூறத் தொடங்கும்பொழுது,

"நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே"

என்ற நூற்பாவினை ஓதித் தொடங்குகின்றார். இந்நூற்பாவிற்குப் ***பேராசிரியர்*** "அடியென்று சிறப்பித்துச் சொல்லப்படுவன நாற் சீரடி என்றவாறு. எனவே, இருசீரானும் முச்சீரானும் ஐஞ்சீரானும் அறுசீர் முதலியவற்றானும் அடிகள் வருமாயினும் அவை சிறப்பில என்றவாறும்" என்றனர்.

***இளம்பூரணர்*** "கட்டுரைவகையான்" (தொல். செய். 119)

என்னும் நூற்பாவில், "முற்றடி யின்றிக் குறைவுசீர்த் தாகியும்" என்னும் அடிக்கு "நாற்சீரடியின்றி முச்சீரடியானும் இருசீரடியானும் வருதல்" என்று உரை கூறியுள்ளார். அதனால் நாற்சீரடியே முற்றடியென்று பெயர் பெறும் என்பதாயிற்று.

"அடியின் சிறப்பே பாட்டெனப் படுமே" (தொல். செய். 35)

என்ற நூற்பாவுரையுள் ***பேராசிரியர்*** "இது நாற்சீரடியையே விசேடித்துக் கூறி, அதனது இடத்தானே பாட்டென்பதோர் முதற் பொருள் தோன்றுமென்ப துணர்த்தியவாறு. இதனுள் 'எனப்படும்' என்றதனால் இவ்வடிகளான் (அளவடிகளால்) வந்த செய்யுளே சிறப் புடையன வென்பதும் சொல்லியவாறு என்றனர். மேற்கூறிய இவற்றால் நாற்சீரடியாகிய அளவடி எல்லா அடிகளிலும் சிறந்த தென்பது போந்ததாம்.

***தொல்காப்பியர்*** அந்நாற்சீரடியினையே எழுத்தளவு பற்றிக் குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி என ஐந்து வகை யாகப் பகுத்தோதினர். நாலெழுத்தடி, ஐந்தெழுத்தடி ஆறெழுத்தடி என்று மூன்று நிலம் பெறும் குறளடி யென்றும், ஏழெழுத்தடி, எட்டெழுத்தடி, ஒன்பதெழுத்தடி என்று மூன்று நிலம் பெறும்

சிந்தடியென்றும், பத்தெழுத்தடி, பதினேரெழுத்தடி பன்னிரண் டெழுத்தடி பதின்மூன்றெழுத்தடி பதினன்கெழுத்தடி என்று ஐந்து நிலம் பெறும் அளவடி யென்றும், பதினைந்தெழுத்தடி பதினறெழுத் தடி பதினேழெழுத்தடி என்று மூன்று நிலம் பெறும் நெடிலடி யென்றும், பதினெட்டெழுத்தடி பத்தொன்பதெழுத்தடி இருப தெழுத்தடி என மூன்று நிலம் பெறும் கழிநெடிலடி யென்றும் அவர் கூறியுள்ளார்.

எனவே, சிறந்த அடியென்று கூறப்படும் அவ்வளவடி தானே எழுத்துவகையால் குறளடி சிந்தடி அளவடி நெடிலடி கழிநெடிலடி என ஐவகையாய்ப் பதினேழ் நிலம் பெற்று வரும் என்பதாயிற்று,

மேற்கண்ட நூற்பாவில் ஐவகையடி, பதினேழ் நிலம் என்னும் இரண்டைப்பற்றி யார்க்கும் கருத்து வேறுபாடு இருப்பதாகத் தெரிய வில்லை. *'எழுபது வகையின் வழுவிலவாகி'* என்பது பற்றியும், ***அறுநூற்றிருபத்தைந்தடி எப்படி ஆயின*** என்பது பற்றியும் உரை யாசிரியர்களுள் கருத்து வேறுபாடுகள் உள்ளன.

### *இளம்பூரணர் கருத்து*

முன்னர் இளம்பூரணர் கூறுவதைப் பார்ப்போம். அவர் இயற்சீர் 10, ஆசிரியவுரிச்சீர் 6, வெண்பாவுரிச்சீர் 4, வஞ்சியுரிச்சீர் 60, அசைச்சீர் 4 என்னும் எண்பத்து நான்கு சீரால் எழுபது வகைப் பட்ட உறழ்ச்சி உண்டாயின என்பர். அவ்வெழுபது வகைப்பட்ட உறழ்ச்சியினையே தொல்காப்பியர் 'எழுபது வகையின் வழுவில வாகி' என்று கூறியுள்ளார் என்று ***இளம்பூரணர்*** கருதுகிறுர்.

### *எண்பத்து நான்கு சீரால் எழுபது வகை உறழ்ச்சி*

***இளம்பூரணர்,*** அடிகள் ஏழாக வரும் என்று முதற்கண் வகுத்துக் கொள்ளுகிறுர். இயற்சீரான் வருவது (ஒன்றி வருவது போலும்) இயற்சீரடி; ஆசிரியவுரிச்சீரான் (ஒன்றியும் ஒன்ருதும் வருவது போ லும்) வருவது ஆசிரிய வுரிச்சீரடி; இயற்சீர் விகற்பித்து வருவது இயற் சீர் வெள்ளடி; வெண்சீரான் (ஒன்றியும் ஒன்ருதும் வருவன போலும்) வருவது வெண்சீரடி ; நிரையீற்றுவஞ்சிச் சீரான் வருவது நிரையீற்று வஞ்சியடி ; உரியசையீற்று வஞ்சிச் சீரான் வருவது உரியசையீற்று வஞ்சியடி ; ஓரசைச் சீரான் வருவது அசைச்சீரடி ; என்று ஏழுவகை யாக அமைத்துக் கொள்கின்றுர். இவ்வேழு வகையும் எழுபது வகை உறழ்ச்சியால் வரும் என்பது அவர் கருத்தாம்.[1]

---

1. வஞ்சியுரிச்சீர் அறுபதுள் நேரீறு 12, நிரையீறு 16, உரியசை யீறு 32 சீராகும் இளம்பூரணர் நேரீற்று வஞ்சிச்சீரான் வரும் அடியை ஏன் கொள்ளாது விட்டார்? என்பதற்கு அவர் கூற்ருல் காரணம் புலப்படவில்லை.

## ஏழடியுள் வரும் உறழ்ச்சி எழுபது

### இயற்சீர் ஒன்றிய உறழ்ச்சி 10

இயற்சீர் நேரீறு நிரையீறு என இருவகைப்படும். அவற்றுள் நேரீறு நின்று நேர் முதலாகிய இயற்சீருடனும், நேர்பு முதலாகிய ஆசிரியவுரிச்சீருடனும், நேர் முதலாகிய வெண்பாவுரிச்சீருடனும், நேர் முதலாகிய வஞ்சியுரிச்சீருடனும், நேர்முதல் ஓரசைச் சீருடனும் ஒன்றினுல் ஐந்தும் ;

நிரையீறு நின்று நிரை முதலாகிய இயற்சீருடனும், நிரைபு முதலாகிய ஆசிரிய வுரிச்சீருடனும் நிரை முதலாகிய வெண்பாவுரிச்சீருடனும், நிரை முதலாகிய வஞ்சியுரிச்சீருடனும், நிரைமுதல் ஓரசைச் சீருடனும் ஒன்றினுல் ஐந்தும் ஆகப் பத்துவகை உறழ்ச்சி கிடைக்கின்றன.

### ஆசிரியவுரிச்சீர் உறழ்ச்சி 10

ஆசிரியவுரிச்சீரும் நேர்பு நிரைபு என இருவகைப்படும். இவ்விரண்டும் மேற்கூறியவாறு உறழப் பத்துவகை உறழ்ச்சியாகும்.

### இயற்சீர் விகற்ப உறழ்ச்சி 10

இயற்சீர் வெள்ளடியும் நேரீறு நிரையீறு என்றும் இரண்டாற்ரேன்றி இருவகைப்படும். அவற்றுள், நேரீற்றியற் சீர் வெள்ளடி நேரீற்றியற் சீருடன் ஒன்ருமல் நிரை, நிரைபு, முதலியற்சீர் வருதலும், நிரை முதலாசிரியவுரிச்சீர் வருதலும், நிரைமுதல் வெண்பாவுரிச்சீர் வருதலும், நிரை முதல் நிரைபு முதல் வஞ்சியுரிச்சீர் வருதலும், நிரை நிரைபு என்னும் ஓரசைச்சீர் வருதலும் என ஐந்து வகைப்படும்.

நிரையீற்றியற்சீரினுல் தோன்றும் வெள்ளடி நிரையீற்றியற்சீருடன் ஒன்ருமல் நேர்முதல் நேர்பு முதல் இயற்சீர் வருதலும், நேர்பு முதலாகிய ஆசிரிய வுரிச்சீர் வருதலும், நேர்முதல் வெண்பாவுரிச்சீர் வருதலும் நேர்முதல் நேர்பு முதல் வஞ்சியுரிச்சீர் வருதலும் நேர் நேர்பு என்னும் ஓரசைசீர் வருதலுமென ஐந்து வகைப்படும்.

### வெண்சீர் உறழ்ச்சி 10

வெண்சீர் நேர் முதலோடு உறழ்தலும் நிரை முதலோடு உறழ்தலுமென இருவகைப்படும்.

வெண்சீர் ஈற்றுமுன் நேர் முதல் வெண்பாவுரிச்சீர் வருதலும், நேர்முதல் நேர்பு முதல் இயற்சீர் வருதலும், நேர்பு முதல் ஆசிரிய வுரிச்சீர் வருதலும், நேர் முதல் நேர்பு முதல் வஞ்சியுரிச்சீர் வருதலும் நேர் அல்லது நேர்பு என்னும் ஓரசைச்சீர் வருதலும் என ஐந்து வகைப்படும்

வெண்சீர் ஈற்றுமுன் நிரைமுதல் வெண்பாவுரிச்சீர் வருதலும், நிரைமுதல் நிரைபு முதல் இயற்சீர் வருதலும், நிரைபு முதலாசிரிய வுரிச்சீர் வருதலும், நிரை முதல் நிரைபு முதல் வஞ்சியுரிச்சீர் வருதலும், நிரை அல்லது நிரைபு என்னும் ஓரசைச்சீர் வருதலுமென ஐந்து வகைப்படும்.

*நிரையீற்று வஞ்சியுரிச்சீர் உறழ்ச்சி 10*

நிரையீற்றுவஞ்சியுரிச்சீர் வருஞ்சீர் முதலசையோடொன்றுவனவும் ஒன்றுதனவுமென இருவகைப்படும். அவற்றுள் ஒன்றி வருவது நிரையீற்று வஞ்சியுரிச்சீர் முன் நிரைமுதல் நிரைபு முதல் வஞ்சியுரிச்சீர் வருதலும், நிரை முதல் நிரைபு முதல் இயற்சீர் வருதலும், நிரைபு முதல் ஆசிரியவுரிச்சீர் வருதலும், நிரைமுதல் வெண்பாவுரிச்சீர் வருதலும், நிரை அல்லது நிரைபு என்னும் ஓரசைச்சீர் வருதலும் என ஐந்து வகையாம்.

ஒன்றுது வருவது நிரையீற்று வஞ்சியுரிச்சீர் முன் நேர்முதல் நேர்பு முதல் வஞ்சியுரிச்சீர் வருதலும், நேர்முதல் நேர்பு முதல் இயற்சீர் வருதலும், நேர்புமுதல் ஆசிரியவுரிச்சீர் வருதலும், நேர் முதல் வெண்பாவுரிச்சீர் வருதலும், நேர் அல்லது நேர்பு என்னும் ஓரசைசீர் வருதலுமென ஐந்து வகைப்படும்.

*உரியசை யீற்று வஞ்சியுரிச்சீர் உறழ்ச்சி 10*

உரியசை யீற்று வஞ்சியுரிச்சீர் உறழ்ச்சியும் அவ்வாறே உறழப் பத்து வகைப்படும் என்றனர் இளம்பூரணர்.[1]

*அசைச்சீரடி உறழ்ச்சி 10*

அசைசீரடியும் அவ்வாறே இருவகையாக்கி உறழப் பத்துவகை யாகும் என்றனர் இளம்பூரணர்.[2]

---

1. வஞ்சியுரிற்சீர் நேர்பு ஈறும் நிரைபு ஈறும் என இருவகையாம். நேர்பு ஈறு ஒன்றுவன ஐந்தும் ஒன்றுதன ஐந்தும்; நிரைபு ஈறும் ஒன்றுவன ஐந்தும் ஒன்றுதன ஐந்தும் என இருபது வகைப்படுகின்றன. இளம்பூரணர் எக்காரணத்தால் பத்து வகை என்றனர் என்பது அவர் கூற்றுல் புலனுகவில்லை.

2. இதுவும் நேரும் நேர்பும் ஒன்றியன ஐந்தும் ஒன்றுதன ஐந்தும், நிரையும் நிரைபும் ஒன்றியன ஐந்தும் ஒன்றுதன ஐந்தும் என இருபதுவகைப்படும். இளம்பூரணர் எக்காரணத்தால் பத்துவகைப்படும் என்றனர் என்பது அவர் கூற்றுல் விளங்கவில்லை.

### இளம்பூரணர் கூற்றில் எழும் ஐயவினா

**இளம்பூரணர்** எண்பத்து நான்கு சீரால் எழுபது வகை உறழ்ச்சி கொண்டுள்ளனர். வஞ்சியுரிச்சீர் அறுபதை நேரீறு, நிரையீறு, உரியசையீறு என்று மூன்றாகவும் பிரிக்கலாமே. அப்பொழுது ஏழா காமல் எட்டாகுமே. இதனால் எழுபது வகையை விளக்க வேண்டி அதற்கியைய அமைத்துக் கொண்டார் போலும்.

### இளம்பூரணர் கூறும் அறுநூற்றிருபத்தைந்தடி

இனி **இளம்பூரணர்** கூறும் அறுநூற்றிருப்பத்தைந்தடிகளைப் பார்ப்போம். அசைச்சீர், இயற்சீர்' ஆசிரிய வுரிச்சீர், வெண்பாவுரிச் சீர்வஞ்சியுரிச்சீர் என்னும் ஐந்தினையும் தனித்தனி நிறுத்தி, இவ் வைந்துசீரும் வரும் சீராக உறழும் வழி இருபத்தைந்து விகற்பமாம்; அவ்விருப்பத்தைந்தின் கண்ணும் மூன்றாவது சீராய் நிற்கும்படி அவ் வைந்து சீரும் வருஞ்சீராக உறழும்வழி நூற்றிருபத்தைந்து விகற்ப மாம்; அந்நூற்றிருபத்தைந்தடிகளின் கண்ணும் நான்காவது சீராய் நிற்கும்படி அவ்வைந்து சீரும் வருஞ்சீராக உறழும்வழி அறுநூற்றி ருபத்தைந்து அளவடிகளாம் என்றனர்.

### இவ்வாறு கொள்வதில் உள்ள தடைகள்

**இளம்பூரணர்** இவ்வாறு அறுநூற்றிருபத்தைந்தடிகளை அமைத் துக் கொண்டது எளிதில் விளங்கக் கூடியதொன்றாயினும், அசைச் சீர் நான்கினையும், இயற்சீர் பத்தினையும், ஆசிரியவுரிச்சீர் ஆறினையும் வெண்பாவுரிச்சீர், நான்கினையும், வஞ்சியுரிச்சீர் அறுபதினையும் ஒவ் வொன்றாகக் கொண்டு பதினேழ் நிலத்த வாகிய அவ்வடிகளை ஆக்கிக் கொண்டது பொருந்தாததென்றே தெரிகின்றது. ஏன் எனில், புலி வழங்கு பொருப்பு, களிறு வரு பொருப்பு, களிறு வழங்கு பொருப்பு முதலிய வஞ்சிச்சீர்களும், அரவு செலவு முதலான ஆசிரியவுச்சீர் களும் ஆறெழுத்துச் சீர்களாதவின் இவற்றால் ஆகும் அடிகள் பதினேழ் நிலத்தை கடந்து செல்லுமே!

### பேராசிரியர் கருத்து

### எழுபது வகை

இனிப் **பேராசிரியர்** "பதினேழ் நிலத்த எழுபது வகைமையின் வழுவில வாகி" என்பதற்குப் பதினேழ் நிலத்து எழுபது வகைக் குற்றம் நீங்கி பதினேழ் நிலத்து எழுபது வகையாகத் தனைகொள்ளு நெறியில் வழுவிலவாகி) என்று உரைத்துக் கொள்கின்றார்.

எழுபது வகைக்கு அவர் கூறுவன:— ஆசிரியப்பாவுள் இயற் சீரும், ஆசிரிய வுரிச்சீரும், அசைச்சீரும் வந்து ஆசிரியத்தளை தட்கும். அவற்றுள் இயற்சீர் பத்தில் புளிமா மட்டும் ஒரு நிலைத்தாகும்;

ஏனைய ஒன்பதும் குற்றுகரம் எழுத்தெண்ணப் பெருமையானும், குற்றுகர முற்றுகர வேறுபாட்டாலும் பதினெட்டாகிப் புளிமாவுடன் கூட அவ்வியற்சீர் பத்தொன்ப தாயின.

ஆசிரியப்பாவுள் மேற்கூறிய இயற்சீர் பத்தொன்பதும், ஆசிரிய வுரிச்சீர் நான்கும், அசைச்சீர் நான்கும் கட்டளையடிக்கு வரும் ஆதலின் ஆசிரியப்பாவிற்கு இருபத்தேழு சீராயின.[4]

வெண்பாவினுள் மேற்குறிப்பிட்ட இயற்சீர் பத்தொன்பதும், வெண்பாவுரிச்சீர் நான்கும் அசைச்சீர் நான்கும் கட்டளையடிக்கு வருமாதலின் வெண்பாவிற்கு இருபத்தேழு சீராயின.[5]

கலிப்பாவினுள் தேமாவின் இரு நிலைமையும் புளிமா ஒன்றும் நீங்கிய இயற்சீர் பதினாறும் ஆசிரியவுரிச்சீர் நான்கும் வெண்சீர் நான்கும் கலிப்பாவின் கட்டளையடிக்கு வருமாதலின் கலிப்பாவிற்கு வருஞ்சீர் இருபத்து நான்காயின.[6]

இவற்றைக் (27 + 27 + 24) கூட்ட எழுபத்தெட்டாயின. இவ்வெழு பத்தெட்டுள் ஆசீரியத்துள் வந்த அசைச்சீர் நான்கினையும், வெண்பாவினுள் வந்த அசைச்சீர் நான்கினையும் இயற்சீர்ப்பாற் படுத்துத் தளைகொள்ளுக (தொல். செய். 28) என்றமையின், அவ்வாறு அவற்றை இயற்சீருள் அடக்கின் மூன்று பாவிற்கும் கட்டளையடிக்கு வருஞ்சீர் எழுபதாயின. அவ்வெழுபது சீரும் வழுவாமல் நின்று தட்க வேண்டுமென்பான் எழுபது வகைமையின் வழுவிலவாகி என்றான் என்பர் ***பேராசிரியர்***.

### ***பேராசிரியர் கூற்றில் எழும் ஐயம்***

இயற்சீர் பத்தினுள் புளிமாவை நீக்கி இரண்டு நிலைப்படுத்தினர். ஆசிரியவுரிச்சீர் நான்கினையும் இரண்டு நிலைப்படுத்துதல் கூடாதா ? ஆசிரியவுரிச்சீர் ஆறனுள் இரண்டினை நீக்குவானேன் ? இயற்சீருள் தேமா, கருவிளம் கூவிளம் இருநிலைமை பெற்றுற்போல வெண்பா வுரிச்சீருள் தேமாங்காய், கருவிளங்காய் கூவிளங்காய் இருநிலையை அடையாவா? என்றெல்லாம் வினாக்கள் தோன்றுகின்றன. இவற்றிற்கு விடைகாணவேண்டும்.

---

4. ஆசிரியவுரிச்சீர் ஆறில் நான்கை மட்டும் கொண்டதற்குக் காரணம் விளங்கவில்லை.

5. வெண்பாவின் நாற்சீர் கொண்ட கட்டளையடியில் அசைச் சீர் நான்கில் நேரசை நிரையசைச் சீர் இடம் பெறுமா ?

6. கலிப்பாவிலும் ஆசிரியவுரிச்சீர் ஆறுள் நான்கினையே கொண்டார். அங்ஙனமாயின் விலக்கப்பட்ட ஆசிரியவுரிச் சீரிரண்டும் எப்பாவில் வரும் ?

### பேராசிரியர் கூறும் அறுநூற்றிருபத்தைந்தடி [7]

ஆசிரியத்துள் வருமெனப்பட்ட சீர் இருபத்தேழும் ஒவ்வொன்று பன்னிரண்டுவரை ஏறிவரும் ஆதலின், ஒவ்வொன்றையும் பன்னி ரண்டா யுறழ ஆசிரியவடி முந்நூற் றிருபத்து நான்காயின.

### ஆசிரியவடி 324

எவ்வாறெனில்? ஆசிரியத்துள் வருஞ்சீர் இருபத்தேழுள் நுந்தை, வண்டு என்னும் இரண்டும் ஓரெழுத்துச் சீராம்; தேமா, மின்னு, வரகு ஞாயிறு, போதுபூ, போரேறு என்னும் ஆறும் ஈரெழுத்துச் சீராம்; புளிமா, பாதிரி, வலியது, மேவுசீர், நன்ஞுணு, பூமருது, கடியாறு, விறகுதீ, நீடுகொடி, அரவு என்னும் பத்தும் மூவெழுத்துச் சீராம்; கணவிரி, காருருமு, பெருநாணு, உருமுத்தீ, மழகளிறு, நாணுத்தளை, உரறுபுலி என்னும் ஏழும் நாலெழுத்துச் சீராம் : நரையுருமு, விரவு கொடி என்னும் இரண்டும் ஐயெழுத்துச் சீராம்; இவ்விருபத்தேழு சீரும் குறிப்பிட்ட அடியிலிருந்து பன்னிரண்டடிவரை ஏறிவரும் ஆதலின் பன்னிரண்டோடு உறழ $(27+12=324)$ ஆசிரியவடி முந்நூற்றிருபத்து நான்காயின.

### வெண்பாவடி 181

வெண்பாவினுள் வருமெனப்பட்ட இயற்சீர் பத்தொன்பதும் வெண்பாவுரிச்சீர் நான்கும் அசைச்சீர் நான்கும் ஆகிய சீர் இருபத் தேழனை உறழ வெண்பாவடி நூற்றெண்பத்தொன்று வரும்.

எவ்வாறெனில்? சிந்தடியாகிய ஏழெழுத்தடியும் எட்டெழுத் தடியும் ஒன்பதெழுத்தடியும் அளவடியுள் பத்தெழுத்தடியும் ஆகிய நான்கெழுத்தடியும் முதலாய் நிற்ப, ஏழெழுத்தடி வெண்பாவின் இறுதியடியான பதினன் கெழுத்தடியளவும் ஏறி எட்டடி பெறும்; எட்டெழுத்தடி பதினன் கெழுத்தடியளவும் ஏறி ஏழடி பெறும்; ஒன்பதெழுத்தடி பதினன்கெழுத்தடியளவும் ஏறி ஆறடி பெறும்; பத்தெழுத்தடி பதினன்கெழுத்தடிளவும் ஏறி ஐந்தடி பெறும்.

வெண்பாவினுள் வரப்பெறும் நுந்தை, வண்டு, ஞாயிறு, போதுபூ, போரேறு என்னும் சீரை ஏழெழுத்தடியிலிருந்து பதினன் கெழுத்தடி வரையுள்ள எட்டடியில் வைத்துறழ $(8+5=40)$ நாற்பது அடியாயின.

தேமா, மின்னு, வரகு, பாதிரி, வலியது, மேவுசீர், நன்ஞுணு, பூமருது, கடியாறு, விறகுதீ, மாசெல்வாய் என்ற பதினொரு சீரையும்

7. ஆசிரியவடி : 324 ; வெண்பாஅடி 181 ; கலிப்பா அடி 120 : 625.

எட்டெழுத்தடி முதல் பதினொன் கெழுத்தடிவரையுள்ள ஏழடியில் வைத்துறழ ($11 \times 7 = 77$) எழுபத்தேழு அடியாயின.

புளிமா, அரவு, கணவிரி, காருருமு, பெருவேணு, உருமுத்தீ, மழகளிறு, மாவருவாய், புலிசெல்வாய் என்னும் ஒன்பது சீரை ஒன்பதெழுத்தடி முதல் பதினொன்கெழுத்தடி வரையுள்ள ஆறடியில் வைத்துறழ ($9 \times 6 = 54$) ஐம்பத்து நான்கு அடியாயின.

நனிமுழவு, புலி வருவாய் என்னும் இரண்டு சீரை பத்தெழுத்தடி முதல் பதினொன்கெழுத்தடி வரையுள்ள ஐந்தடியில் வைத்துறழ ($2 \times 5 = 10$) பத்தடியாயின. ஆக வெண்பாவடி ($40 + 77 + 54 + 10$) நூற்றெண்பத்தொன்று ஆயின.[8]

## கலியடி 120

கலிப்பாவில் வருமென்ற நேரீற்றியற் சீர் மூன்றொழித்து எஞ்சிய இயற்சீர் பதினாறும், ஆசிரியவுரிச்சீர் நான்கும், வெண்சீர் நான்கும், ஆகிய இருபத்து நான்கு சீர்களை உறழக் கலியடி நூற்றிருபதாம்.

"அளவடி மிகுதி உளப்படத் தோன்றி, இருநெடிலடியுங் கலியிற் குரிய" என்னும் நூற்பா விதியால் அளவடி மிகுதியாய பதின்மூன் றெழுத்தடியும், பதினொன்கெழுத்தடியும், நெடிலடியாகிய பதினைந் தெழுத்தடியும், பதினாறெழுத்தடியும் முதலாக ஒரோவொன்று ஐந்தடி உறழ்ந்து முறையே பதினேழு, பதினெட்டு, பத்தொன்பது இருபது என்னும் எழுத்துள்ள அடிவரை உயரும்.

எவ்வாறெனில்? ஞாயிறு, போதுபூ, போரேறு என்னும் ஈரெழுத்துச் சீர் மூன்றையும் பதின்மூன்றெழுத்து வரையுள்ள ஐந்தடியில் வைத்துறழ ($3 \times 5 = 15$) பதினைந்தடியாயின.

பாதிரி, வலியது, மேவுசீர், நன்னாணு, பூமருது, கடியாறு, விறகுதீ, மாசெல்வாய், நீடுகொடி, என்னும் மூவெழுத்துச் சீர் ஒன்பதனையும் பதினொன்கெழுத்து முதல் பதினெட்டெழுத்தளவும் உள்ள ஐந்தடியில் வைத்துறழ ($9 \times 5 = 45$) நாற்பத்தைந்தடி யாயின.

கணவிரி, காருருமு, பெருநாணு, உருமுத்தீ, மழகளிறு, மாவரு வாய், புலிசெல்வாய், நாணுத்தளை, உரறுபுலி என்னும் நாலெழுத்துச் சீர் ஒன்பதனையும் பதினைந்தெழுத்து முதல் பத்தொன்ப தெழுத் தளவும் உள்ள ஐந்தடியில் வைத்துறழ ($9 \times 5 = 45$) நாற்பத்தைந்தடி யாயின.

---

8. ஆசிரியத்திலும், வெண்பாவிலும் அசைச்சீர் நான்கு வரும் என்று எண்ணிக்கைக்குக் கூட்டினர். நாள், மலர் என்னும் அசைச்சீர்களை இங்கே எடுத்தாளவில்லை.

நரையுருமு, புலிவருவாய், விரவுகொடி என்னும் ஐந்தெழுத்துச் சீர் மூன்றனையும் பதினறெழுத்தடி முதல் இருபதெழுத்தடிகாறு முள்ள மூன்றடியில் வைத்துறழ ($3 \times 5 = 15$) பதினைந்தடியாம்.

ஆகக் கலிப்பாவடி ($15 \times 45 \times 45 \times 15$) நூற்றிருபதாயின.

### நச்சினார்க்கினியர் கருத்தும் இதுவே

நச்சினர்க்கினியர், "ஐவகையடியும்" என்னும் நூற்பாவிற்கு "மேல் நாற்சீரடியினை ஐவகையாகக் கூறி இதனனே அறுநூற்றிருபத்தைந்தாகுமென அவற்றின் விகற்பமுங் கூறினர்" என்று கருத்துரை கூறி, "மேற்கூறிய ஐவகை யடியும் விரிக்குமிடத்து, பொருள்வகையமைந்த பதினேழ் நிலத்தவாய" எழுபது வகைக் குற்றம் நீங்கி அறுநூற்றிருபத்தைந்தாம்" என்று உரை கூறியுள்ளார்.

அவர் எழுபது வகையின் வழுவில என்பதற்கும் அறுநூற்றிருபத்தைந்தாகும்மே என்பதற்கும் பேராசிரியர் கருத்தையே தழுவி உரையெழுதியுள்ளார்.

### யாப்பருங்கல விருத்தி உரையாசிரியர் கருத்து

#### எழுபது வகைமையின் வழு

யாப்பருங்கல விருத்தி உரையாசிரியர் 'எழுபது வகை என்பதை எழுபது தளை வழு வென்றே கொண்டு, ஆசிரிய நிலம் பதினேழுள்-ளும் வெண்டளை தட்பப் பதினேழும் கலித்தளை தட்பப் பதினேழுமாய் ஆசிரியப்பாவிற்கு முப்பத்து நான்கு தளை வழுவாம். வெள்ளை நிலம் பத்தினுள்ளும் (சிந்து 3 அளவு 5 நெடில் 2 ஆகப் பத்து) ஆசிரியத்தளை தட்பப் பத்தும் கலித்தளை தட்பப் பத்துமாய் வெண்பாவிற்கு இருபது தளை வழுவாம். கலிநிலம் எட்டினுள்ளும் (அளவடி மிகுதி 2, நெடில் 3, கழிநெடில் 3) வெண்டளை தட்ப எட்டும் ஆசிரியத் தளைதட்ப எட்டுமாய்க் கலிப்பாவிற்குப் பதினறு தளைவழுவாம். ஆக மூன்று பாவிற்குஞ் சொன்ன தளைவழு ($33 \times 20 \times 16$) எழுபதாயிற்று என்பர்.

### பேராசிரியர் மறுப்பு

மேற்கூறிய கருத்தினை 'ஐவகையடியும்' என்னும் நூற்பாவுரையுள் பேராசிரியர் மறுத்துள்ளனர். அம்மறுப்பினை ஆண்டுக் காண்க.

### யாப்பருங்கல விருத்தியாசிரியர் கூறும் அறுநூற்றிருபத்தைந்தடி

அவர் ஆசிரியப்பாவில் வருஞ்சீர் இயற்சீர் பத்தும், தன்சீர் ஆறும், அசைச்சீர் நான்கும் எனக்கொண்டு கணக்கிடுவர்.

### *யாப்பருங்கல விருத்தியாரியர் கருத்து*

### *ஆசிரியவடி 261*

தன் சீரானும் (ஆசிரியவுச்சீர்) தளை வகுக்கப்படாமையின் நின்றுங் கொள்ளப்படா வெனக் கூறி விலக்கி, இயற்சீர் பத்துள் ஈரெழுத்துச் சீரால் ஐம்பதும் மூவெழுத்துச் சீரால் எண்பத்தெட்டும், நான்கெழுத்துச் சீரால் அறுபத்தொன்றும், ஐந்தெழுத்துச் சீரால் பன்னிரண்டும் ஆக இருநூற்றுப் பதினொன்று அடி இயற்சீர் உறழ்ச்சியால் வரும் என்றனர். இனி ஆசிரியத்துள் நேரசை நேர்பசைகள் ஓரெழுத்தும் ஈரெழுத்துமாக வரும் பொழுதும் நிரையசை நிரைபு அசைகள் ஈரெழுத்தும் மூவெழுத்துமாக வரும்பொழுதும் இவற்றை வைத்து உறழும் முறைப்படி உறழ்ந்தால் இருபத்து நான்கும் இருபத்தாறுமாய் ஐம்பதடி வரும். இவ்விரண்டனையும் தலைப்பெய்ய ஆசிரியவடி இருநூற்றறுபத்தொன்ரும் என்றனர்.

### *வெண்பாவடி 232*

வெண்பாவில் இயற்சீர்பத்தும் வெண்பாவுரிச்சீர் நான்கும் அசைச்சீர் நான்கும் ஆகப் பதினெட்டுச் சீர்கள் வரும் என்று கொண்டு இயற்சீரும் தன்சீராகிய வெண்பாவுரிச்சீரும் ஆகிய பதினன்கு சீர்களை இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து என்னும் எழுத்துள்ள சீராகப் பிரித்துக் கொண்டு உறழ்ந்து வெண்பாவிற்குச் சீராலாம் அடித்தொகை நூற்றுத் தொண்ணூற்ருறு என்றும், நான்கு அசைச்சீர்களை ஓரெழுத்து, ஈரெழுத்து, மூவெழுத்து என்னும் சீர்களாகப் பிரித்துக் கொண்டு உறழ்ந்து நான்கசைச்சீரால் வந்த அடித்தொகை முப்பத்தாறு என்றும் இவ்விரண்டனையும் தலைப்பெய்ய வெண்பாவடி இருநூற்று முப்பத்திரண்டாம் என்றனர்.[9]

### *கலியடி 132*

கலிப்பாவில் வெண்பாவுரிச்சீர் நான்கும், ஆசிரியவுரிச்சீரில் நீடுகொடி, குழறுபுலி என்னும் இரண்டும் தேமா, புளிமா என்னும் இரண்டும் நீங்கிய இயற்சீர் எட்டும் ஆகிய பதினன்கு சீர்கள் வரும். கலிப்பாவில் அசைச்சீர் வாரா. இச்சீர்களை இரண்டெழுத்து, மூன்றெழுத்து, நான்கெழுத்து, ஐந்தெழுத்து என்று நான்கு நிலைமையாக்கி இவற்றை உறழ்ந்து காட்டி நூற்று முப்பத்திரண்டடியாம் என்றனர். ஆக ஆசிரியவடி 261, வெண்பாவடி 232, கலியடி 132 ஆக அறு

---

9. ஆசிரியவடி கொள்ளும்போது ஆசிரியவுரிச்சீர் ஆறனையும் 'தன்சீருள்வழித் தளைவகை வேண்டா' என்ற நூற்பாவினைக் காட்டி நீக்கினர். வெண்பாவடி கொள்ளும்போது வெண்பாவுரிச்சீர் நான்கினை அவ்வாறு நீக்காமல் கொண்டே அடி கூறுகிருர். இது பொருந்துமா?

நூற்றிருபத்தைந்தடி யாயின என்றனர் யாப்பருங்கல விருத்தியுரை யாசிரியர்.[10]

### இனி என் கருத்து

தொல்காப்பியர் நான்கெழுத்தை முதலாகக் கொண்டு இருப தெழுத்து வரை ஐவகை அடிகளைக் கூறிய பின்னர்,

"சீர்நிலை தானே ஐந்தெழுத் திறவாது
நேர்நிரை வஞ்சிக் காறும் ஆகும்"

என்ற வடிவில் கூறியதாக ஒரு நூற்பா இளம்பூரணர் உரையில் காணப்படுகின்றது. இந்நூற்பாவிற்கு இளம்பூரணர் "சீர்க்கு எழுத்து வரையறை உணர்த்துதல் நுதலிற்று என்று கருத்துரை கூறி, "சீர்நிலை ஐந்தெழுத்தின் மிகாது நேர் இறுதியாங்காலத்து; நிரையீருகிய வஞ்சியுரிச்சீர்க்கு ஆறெழுத்தும் ஆகும்" என்று உரை கூறி, "எனவே இருபதெழுத்தின் மிக்க நாற்சீரடி இல்லையாம்" என்றனர்.

பேராசிரியர் மேற்கண்ட நூற்பாவை இரண்டாக் கொண்டு,

"சீர்நிலை தானே ஐந்தெழுத் திறவாது"

என்ற முதல் நூற்பாவிற்கு "இதுமேல் எழுத்தெண்ணி அடி வகுக்கப் பட்ட ஐவகை யடிக்கும் சீரும் எழுத்தெண்ணியே வகுக்கின்றது" என்று கருத்துக் கூறி. "சீரது நிலைமைதான் ஐந்தெழுத்தின் இறந்து வாராது என்றவாறு; பெருமைக்கு எல்லை கூறி வரையறுக்கவே, சிறுமைக்கு எல்லை வறையறைப்படாது ஓரெழுத்து முதலாக வருமென்பதாம்" என்றனர். யாப்பருங்கல விருத்தியுரையாசிரியரும் "வெண்பா ஆசிரியம் கலியுள் வருஞ்சீர் ஐந்தெழுத்தின் மிகா" என்றனர்.

அடி அதிகாரத்தில் மேற்கண்ட இவற்றையெல்லாம் படித்துக் கருத்தி லிருத்திக்கொண்டு,

"ஐவகை யடியும் விரிக்குங் காலை
மெய்வகை யமைந்த பதினேழ் நிலத்த
எழுபது வகையின் வழுவில வாகி
அறுநூற் றிருபத் தைந்தா கும்மே"

என்னும் நூற்பாவிற்கு வருவோம்.

இந்நூற்பா மேலே சிறந்ததாய்க் குறிப்பிட்ட அளவடியுள் வருமென்ற ஐவகையடியும் பதினேழ் நிலத்தவாய் எழுபது வகையுள் தப்பாது அறுநூற்றிருபத்தைந்தடியாக வரும் என்ற செய்தியைக் கூறுகின்றது என்பதை அறிந்துகொள்ளு கின்றோம்.

---

10. விரிவஞ்சிச் சுருக்கப்பட்டது.

இளம்பூரணர் அசைச்சீர், இயற்சீர், ஆசிரியவுரிச்சீர், வெண்சீர், வஞ்சியுரிச்சீர் என்னும் ஐந்தினையும் தனித்தனி நிறுத்தி இவ்வைந்து சீரும் வருஞ்சீராக உறழ இருபத்தைந்து விகற்பமாம்; இவ்விருபத்தைந்தின் கண்ணும் இவ்வைந்து சீரும் வருஞ்சீராக உறழ நூற்றிருபத்தைந்து விகற்பமாம்; இந்நூற்றிருபத்தைந்து விகற்பத்தின்கண்ணும் இவ்வைந்து சீரும் வருஞ்சீராக உறழ அறுநூற்றிருபத்தைந்து அளவடியாம் என்றனர். ஆனல் ஆறெழுத்து வஞ்சிச் சீரினை வைத்து உறழப் பதினேழ் நிலத்தைக் கடந்து இருபதெழுத்தின் மேலும் வரும். இளம்பூரணர் கருத்திற்கு மூன்றெழுத்து, நான்கெழுத்து, ஐந்தெழுத்து வஞ்சியுரிச் சீர்களையே கொள்ள வேண்டும்.

பேராசிரியரும், நச்சினர்க்கினியரும், யாப்பருங்கல விருத்தியுரையாசிரியரும் ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பாக்கட்கென சீர் வரையறுத்துக் கொண்டு அவற்றைத் தம் மனம் போனவாறு கற்பனை செய்து கொண்டு உறழ்ந்து அடிகளை ஆக்கிக் கொள்கின்றனர். பேராசிரியர் ஆசிரியவடி 324என்று கூற, விருத்தியுரையாசிரியர் 261 என்கின்றனர். கலியடி 120, 132 என்றும் மாறுபடுகின்றனர்.

தொல்காப்பியர் இவர்கள் கருத்தின்படி அறுநூற்றிருபத்தைந்தடிகளைக் கூறியிருக்க மாட்டார் என்பதே என் கருத்தாகும். ஏன் எனில்? எழுத்துக் கணக்குள்ள கட்டளையடிகளை இவ்வளவு சிக்கலாகவும் கருத்து வேறுபாடுள்ளதாகவும் உறழ்ந்துணரும்படி தெளிவற்ற வகையில் தெளிவுறக் கூறும் இயல்புடைய தொல்காப்பியர், கூறுவதற்கு நியாயமேயில்லை.

### கட்டளையடிக்குக் கட்டளைச்சீர்

அளவடியில் வரும் ஐவகையடியும் பதினேழ் நிலத்தவாகிய அறுநூற்றிருபத்தைந்து கட்டளையடியாக வருமேயானல், இக்கட்டளையடிகளைத் தோற்றுவிக்கக் கட்டளைச்சீரும் வேண்டும். ஆகையால், நாம் சீர்களை ஓரெழுத்துச்சீர், ஈரெழுத்துச்சீர், மூவெழுத்துச்சீர், நான்கெழுத்துச்சீர், ஐந்தெழுத்துச்சீரென்று முதற்கண் வகுத்து வைத்துக் கொள்வோம்.

### அறுநூற்றிருபத்தைந்தடியாமாறு உறழுந் திறம்

மேலே குறிப்பிட்ட ஐவகைச் சீர்களையும் ஐந்து படிகளாக நிறுத்தி, இவ்வைந்து சீர்களையும் தனித்தனி வருஞ்சீராக உறழ்ந்தால் இருபத்தைந்து விகற்பமாம்; இவ்விருபத்தைந்து விகற்பங்களையும் தனித்தனி இருபத்தைந்து ஐந்துபடிகளாக நிறுத்தி, இவ்வைந்து சீர்களையும் தனித்தனி வருஞ்சீராக உறழ்ந்தால் அறுநூற்றிருபத்தைந்து கட்டளை அளவடிகளாகும்.

**அறுநூற்றிருபத்தைந்தடியைப் பதினேழ் நிலமாகப் பிரித்தல்**

இவ்வாறு உறழ்ந்த அறுநூற்றிருபத்தைந்தடிகளைத் தனித்தனி பதினேழ் நிலத்திற்குரியனவாகப் பிரித்தால் நான்கெழுத்தடி ஒன்றும் ஐந்தெழுத்தடி நான்கும் ஆறெழுத்தடி பத்தும் ஆகக்குறளடி பதினைந்தாம் ; ஏழெழுத்தடி இருபது, எட்டெழுத்தடி முப்பத்தைந்து, ஒன்பதெழுத்தடி ஐம்பத்திரண்டு ஆகச் சிந்தடி நூற்றேழாம்; பத்தெழுத்தடி அறுபத்தெட்டு, பதினோரெழுத்தடி எண்பது, பன்னிரண்டெழுத்தடி எண்பத்தைந்து, பதின்மூன்றெழுத்தடி எண்பது, பதினான்கெழுத்தடி அறுபத்தெட்டு ஆக அளவடி முந்நூற்றெண்பத்தொன்றாகும் ; பதினைந்தெழுத்தடி ஐம்பத்திரண்டு, பதினாறெழுத்தடி முப்பத்தைந்து, பதினேழெழுத்தடி இருபது ஆக நெடிலடி நூற்றேழாம் ; பதினெட்டெழுத்தடி பத்து, பத்தொன்பதெழுத்தடி நான்கு இருபதெழுத்தடி ஒன்று ஆகக்கழிநெடிலடி பதினைந்தாம்.

| | |
|---|---|
| குறளடி | 15 |
| சிந்தடி | 107 |
| அளவடி | 381 |
| நெடிலடி | 107 |
| கழிநெடிலடி | 15 |
| | 625 |

இக்கணக்கில் குறளடியும் கழிநெடிலடியும் ஆகிவை இரண்டும் சிந்தடியும் நெடிலடியுமாகிய இரண்டும் எண்ணிக்கையால் ஒத்திருத்தலைக் காண்க.

இன்னும் குறளடியில் நான்கெழுத்தடியும் கழிநெடிலடியில் இருபதெழுத்தடியுமாகிய இரண்டும், குறளடியில் ஐந்தெழுத்தடியும் கழிநெடிலடியில் பத்தொன்பதெழுத்தடியுமாகிய இரண்டும், குறளடியில் ஆறெழுத்தடியும் கழிநெடிலடியில் பதினெட்டெழுத்தடியுமாகிய இரண்டும், சிந்தடியில் ஏழெழுத்தடியும், நெடிலடியில் பதினேழெழுத்தடியுமாகிய இரண்டும், சிந்தடியில் எட்டெழுத்தடியும், நெடிலடியில் பதினாறெழுத்தடியுமாகிய இரண்டும், சிந்தடியில் ஒன்பதெழுத்தடியும் நெடிலடியில் பதினைந்தெழுத்துமாகிய இரண்டும், அளவடியில் பத்தெழுத்தடியும் அளவடியில் பதினான்கெழுத்தடியுமாகிய இரண்டும், அளவடியில் பதினோரெழுத்தடியும் அளவடியில் பதின்மூன்றெழுத்தடியுமாகிய இரண்டும் எண்ணிக்கையால் ஒத்திருத்தலைக் காண்க. பன்னிரண்டெழுத்தடி இவற்றிற்கெல்லாம் நடுநாயகமாய் எண்பத்தைந்து அடிகளைப் பெற்றுள்ளது.

**மேற்கருத்தை விளக்கும் படம்**

| | | | |
|---|---|---|---|
| குறளடி 3 | நான்கெழுத்தடி | 1 | |
| | ஐந்தெழுத்தடி | 4 | |
| | ஆறெழுத்தடி | 10 | |
| சிந்தடி 3 | ஏழெழுத்தடி | 20 | |
| | எட்டெழுத்தடி | 35 | |
| | ஒன்பதெழுத்தடி | 52 | |
| அளவடி 5 | பத்தெழுத்தடி | 68 | |
| | பதினோரெழுத்தடி | 80 | |
| | **பன்னிரண்டெழுத்தடி** | 85 | நடு |
| | பதின்மூன்றெழுத்தடி | 80 | |
| | பதினான்கெழுத்தடி | 68 | |
| நெடிலடி 3 | பதினைந்தெழுத்தடி | 52 | |
| | பதினாறெழுத்தடி | 35 | |
| | பதினேழெழுத்தடி | 20 | |
| கழிநெடிலடி 3 | பதினெட்டெழுத்தடி | 10 | |
| | பத்தொன்பதெழுத்தடி | 4 | |
| | இருபதெழுத்தடி | 1 | |
| | | 625 | |

**எழுபது வகையில் வழுவிலவாகி**

ஆயின், 'எழுபது வகையில் வழுவிலவாகி' என்றதற்கு விளக்கம் என்னவெனில்? இவ்வறு நூற்றிருபத்தைந்தடிகள் எழுபது வகைப் பட்டு அவற்றுள் ஒன்றாய் வருமென்க (பட்டியலைப் பார்க்க; பக்கம் 50) நான்கெழுத்தடி ஓரெழுத்தசையை முதலாகக் கொண்டும்; ஐந்தெழுத்தடி ஓரெழுத்தசை ஈரெழுத்தசை என்னும் இரண்டசையை முதலாகக் கொண்டும்; ஆறெழுத்தடி ஓரெழுத்தசை, ஈரெழுத்தசை, மூவெழுத்தசை என்னும் மூன்றசையை முதலாகக் கொண்டும், ஏழெழுத்தடி ஓரெழுத்தசை, ஈரெழுத்தசை, மூவெழுத்தசை, நான்கெழுத்தசை என்னும் நான்கசையை முதலாகக் கொண்டும்; எட்டு, ஒன்பது, பத்து, பதினொன்று, பன்னிரண்டு, பதின்மூன்று, பதினான்கு, பதினைந்து, பதினாறு என்னும் எழுத்துள்ள ஒன்பது அடிகளும் ஓரெழுத்துச் சீர் முதலான ஐவகைச் சீர்களை முதலாகக் கொண்டும்; பதினேழெழுத்தடி ஈரெழுத்துச் சீர் முதலான நான்கு சீர்களை முதலாகக் கொண்டும்; பதினெட்

டெழுத்தடி மூவெழுத்துச் சீர் முதலான மூன்றெழுத்துக்களை முதலாகக் கொண்டும்; பத்தொன்பதெழுத்தடி நான்கெழுத்துச் சீர் முதலான இரண்டு சீர்களை முதலாகக்கொண்டும்; இருபதெழுத்தடி ஐந்தெழுத்துச் சீரினை மட்டும் முதலாகக் கொண்டும் பிறக்கின்றன. இவ்வகைகளைக் கூட்டினால் **அறுபத்தைந்து** வரும். நான்கெழுத்தடி (1) முற்றிலும் ஓரெழுத்துச் சீர்களாகவே வருகின்றது. எட்டெழுத்தடியுள் 32ஆம் எண்ணுள்ள அடி முற்றிலும் இரண்டெழுத்துச் சீர்களாலேயே வருகின்றது, பன்னிரண்டெழுத்தடியுள் 63ஆம் எண்ணுள்ள அடி சீர் முற்றிலும் மூன்றெழுத்துச் சீர்களாலேயே வருகின்றது. பதினாறெழுத்தடியுள் 94ஆம் எண்ணுள்ள அடி முற்றிலும் நான்கெழுத்துச் சீர்களாலேயே வருகின்றது. இருபதெழுத்தடி (125) முற்றிலும் ஐந்தெழுத்துச் சீர்களாலேயே வருகின்றது. இவ்வைந்து வகையையும் (65 + 5) அறுபத்தைந்துடன் கூட்ட எழுபதுவகை ஆகின்றன. இவற்றுள் நான்கெழுத்தடியும் இருபதெழுத்தடியும் முறையே ஓரெழுத்தசையை முதலாகக் கொண்டதும் ஓரெழுத்தசைகளையே முற்றிலும் கொண்டதும் எனவும் ஐந்தெழுத்தசையை முதலாகக் கொண்டதும் ஐந்தெழுத்தசைகளையே முற்றிலும் கொண்டதுமெனவும் இருநிலைப் படுமென்க. இவ்வகையால் அறுநூற்றிருபத்தைந்தடியும் எழுபது வகைப்பட்டன வென்க. இங்ஙனம் ஆதலைப் பட்டியல் நோக்கி உணர்க.

***21 பட்டியல்***

### இருபத்தைந்து விகற்பம்

ஓரெழுத்துச்சீர், ஈரெழுத்துச்சீர், மூவெழுத்துச்சீர், நாலெழுத்துச் சீர், ஐந்தெழுத்துச்சீர் என்னும் ஐவகைச் சீர்களைத் தம்மொடு தாமும் பிறிதுமாய்க் கூட்ட இருபத்தைந்து **குறளடி**யாம்.

| (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|
| 1—1 | 2—1 | 3—1 | 4—1 | 5—1 |
| 1—2 | 2—2 | 3—2 | 4—2 | 5—2 |
| 1—3 | 2—3 | 3—3 | 4—3 | 5--3 |
| 1—4 | 2—4 | 3—4 | 4—4 | 5—4 |
| 1—5 | 2—5 | 3—5 | 4—5 | 5—5 |

### நூற்றிருபத்தைந்து விகற்பம்

மேலே உள்ள இருபத்தைந்து குறளடிகளைத் தனித்தனியே வைத்து, ஓரெழுத்து, ஈரெழுத்து, மூவெழுத்து, நான்கெழுத்து ஐந்தெழுத்துச் சீர்களை உறழ நூற்றிருபத்தைந்து **சிந்தடியாகும்.**

| (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|
| 1—1—1 | 1—2—1 | 1—3—1 | 1—4—1 | 1—5—1 |
| 1—1—2 | 1—2—2 | 1—3—2 | 1—4—2 | 1—5—2 |
| 1—1—3 | 1—2—3 | 1—3—3 | 1—4—3 | 1—5—3 |
| 1—1—4 | 1—2—4 | 1—3—4 | 1—4—4 | 1—5—4 |
| 1—1—5 | 1—2—5 | 1—3—5 | 1—4—5 | 1—5—5 |

| (6) | (7) | (8) | (9) | (10) |
|---|---|---|---|---|
| 2—1—1 | 2—2—1 | 2—3—1 | 2—4—1 | 2—5—1 |
| 2—1—2 | 2—2—2 | 2—3—2 | 2—4—2 | 2—5—2 |
| 2—1—3 | 2—2—3 | 2—3—3 | 2—4—3 | 2—5—3 |
| 2—1—4 | 2—2—4 | 2—3—4 | 2—4—4 | 2—5—4 |
| 2—1—5 | 2—2—5 | 2—3—5 | 2—4—5 | 2—5—5 |

| (11) | (12) | (13) | (14) | (15) |
|---|---|---|---|---|
| 3—1—1 | 3—2—1 | 3—3—1 | 3—4—1 | 3—5—1 |
| 3—1—2 | 3—2—2 | 3—3—2 | 3—4—2 | 3—5—2 |
| 3—1—3 | 3—2—3 | 3—3—3 | 3—4—3 | 3—5—3 |
| 3—1—4 | 3—2—4 | 3—3—4 | 3—4—4 | 3—5—4 |
| 3—1—5 | 3—2—5 | 3—3—5 | 3—4—5 | 3—5—5 |

| (16) | (17) | (18) | (19) | (20) |
|---|---|---|---|---|
| 4—1—1 | 4—2—1 | 4—3—1 | 4—4—1 | 4—5—1 |
| 4—1—2 | 4—2—2 | 4—3—2 | 4—4—2 | 4—5—2 |
| 4—1—3 | 4—2—3 | 4—3—3 | 4—4—3 | 4—5—3 |
| 4—1—4 | 4—2—4 | 4—3—4 | 4—4—4 | 4—5—4 |
| 4—1—5 | 4—2—5 | 4—3—5 | 4—4—5 | 4—5—5 |

| (21) | (22) | (23) | (24) | (25) |
|---|---|---|---|---|
| 5—1—1 | 5—2—1 | 5—3—1 | 5—4—1 | 5—5—1 |
| 5—1—2 | 5—2—2 | 5—3—2 | 5—4—2 | 5—5—2 |
| 5—1—3 | 5—2—3 | 5—3—3 | 5—4—3 | 5—5—3 |
| 5—1—4 | 5—2—4 | 5—3—4 | 5—4—4 | 5—5—4 |
| 5—1—5 | 5—2—5 | 5—3—5 | 5—4—5 | 5—5—5 |

## அளவடியில் அறுநூற்றிருபத்தைந்து கட்டளையடி

மேலே உள்ள நூற்றிருபத்தைந்து சிந்தடிகளைத் தனித்தனியே வைத்து ஓரெழுத்து, ஈரெழுத்து, மூவெழுத்து, நாலெழுத்து ஐந்தெழுத்துச் சீர்களை உறழ **அறுநூற்றிருபத்தைந்து** அளவடியாம்.

### 1—1

| (1) | | (2) | | (3) | |
|---|---|---|---|---|---|
| 1—1—1—1 | 4 | 1—1—2—1 | 5 | 1—1—3—1 | 6 |
| 1—1—1—2 | 5 | 1—1—2—2 | 6 | 1—1—3—2 | 7 |
| 1—1—1—3 | 6 | 1—1—2—3 | 7 | 1—1—3—3 | 8 |
| 1—1—1—4 | 7 | 1—1—2—4 | 8 | 1—1—3—4 | 9 |
| 1—1—1—5 | 8 | 1—1—2—5 | 9 | 1—1—3—5 | 10 |

| (4) | | (5) | |
|---|---|---|---|
| 1—1—4—1 | 7 | 1—1—5—1 | 8 |
| 1—1—4—2 | 8 | 1—1—5—2 | 9 |
| 1—1—4—3 | 9 | 1—1—5—3 | 10 |
| 1—1—4—4 | 10 | 1—1—5—4 | 11 |
| 1—1—4—5 | 11 | 1—1—5—5 | 12 |

### 1—2

| (6) | | (7) | | (8) | |
|---|---|---|---|---|---|
| 1—2—1—1 | 5 | 1—2—2—1 | 6 | 1—2—3—1 | 7 |
| 1—2—1—2 | 6 | 1—2—2—2 | 7 | 1—2—3—2 | 8 |
| 1—2—1—3 | 7 | 1—2—2—3 | 8 | 1—2—3—3 | 9 |
| 1—2—1—4 | 8 | 1—2—2—4 | 9 | 1—2—3—4 | 10 |
| 1—2—1—5 | 9 | 1—2—2—5 | 10 | 1—2—3—5 | 11 |

| (9) | | (10) | |
|---|---|---|---|
| 1—2—4—1 | 8 | 1—2—5—1 | 9 |
| 1—2—4—2 | 9 | 1—2—5—2 | 10 |
| 1—2—4—3 | 10 | 1—2—5—3 | 11 |
| 1—2—4—4 | 11 | 1—2—5—4 | 12 |
| 1—2—4—5 | 12 | 1—2—5—5 | 13 |

1—3

| (11) | | (12) | | (13) | |
|---|---|---|---|---|---|
| 1—3—1—1 | *6* | 1—3—2—1 | *7* | 1—3—3—1 | *8* |
| 1—3—1—2 | *7* | 1—3—2—2 | *8* | 1—3—3—2 | *9* |
| 1—3—1—3 | *8* | 1—3—2—3 | *9* | 1—3—3—3 | *10* |
| 1—3—1—4 | *9* | 1—3—2—4 | *10* | 1—3—3—4 | *11* |
| 1—3—1—5 | *10* | 1—3—2—5 | *11* | 1—3—3—5 | *12* |

| (14) | | (15) | |
|---|---|---|---|
| 1—3—4—1 | *9* | 1—3—5—1 | *10* |
| 1—3—4—2 | *10* | 1—3—5—2 | *11* |
| 1—3—4—3 | *11* | 1—3—5—3 | *12* |
| 1—3—4—4 | *12* | 1—3—5—4 | *13* |
| 1—3—4—5 | *13* | 1—3—5—5 | *14* |

1—4

| (16) | | (17) | | (18) | |
|---|---|---|---|---|---|
| 1—4—1—1 | *7* | 1—4—2—1 | *8* | 1—4—3—1 | *9* |
| 1—4—1—2 | *8* | 1—4—2—2 | *9* | 1—4—3—2 | *10* |
| 1—4—1—3 | *9* | 1—4—2—3 | *10* | 1—4—3—3 | *11* |
| 1—4—1—4 | *10* | 1—4—2—4 | *11* | 1—4—3—4 | *12* |
| 1—4—1—5 | *11* | 1—4—2—5 | *12* | 1—4—3—5 | *13* |

| (19) | | (20) | |
|---|---|---|---|
| 1—4—4—1 | *10* | 1—4—5—1 | *11* |
| 1—4—4—2 | *11* | 1—4—5—2 | *12* |
| 1—4—4—3 | *12* | 1—4—5—3 | *13* |
| 1—4—4—4 | *13* | 1—4—5—4 | *14* |
| 1—4—4—5 | *14* | 1—4—5—5 | *15* |

1—5

| (21) | | (22) | | (23) | |
|---|---|---|---|---|---|
| 1—5—1—1 | *8* | 1—5—2—1 | 9 | 1—5—3—1 | *10* |
| 1—5—1—2 | *9* | 1—5—2—2 | 10 | 1—5—3—2 | *11* |

1—5—1—3 *10*
1—5—1—4 *11*
1—5—1—5 *12*

1—5—2—3 *11*
1—5—2—4 *12*
1—5—2—5 *13*

1—5—3—3 *12*
1—5—3—4 *13*
1—5—3—5 *14*

(24)

1—5—4—1 *11*
1—5—4—2 *12*
1—5—4—3 *13*
1—5—4—4 *14*
1—5—4—5 *15*

(25)

1—5—5—1 *12*
1—5—5—2 *13*
1—5—5—3 *14*
1—5—5—4 *15*
1—5—5—5 *16*

2—1

(26)

2—1—1—1 *5*
2—1—1—2 *6*
2—1—1—3 *7*
2—1—1—4 *8*
2—1—1—5 *9*

(27)

2—1—2—1 *6*
2—1—2—2 *7*
2—1—2—3 *8*
2—1—2—4 *9*
2—1—2—5 *10*

(28)

2—1—3—1 *7*
2—1—3—2 *8*
2—1—3—3 *9*
2—1—3—4 *10*
2—1—3—5 *11*

(29)

2—1—4—1 *8*
2—1—4—2 *9*
2—1—4—3 *10*
2—1—4—4 *11*
2—1—4—5 *12*

(30)

2—1—5—1 *9*
2—1—5—2 *10*
2—1—5—3 *11*
2—1—5—4 *12*
2—1—5—5 *13*

2—2

(31)

2—2—1—1 *6*
2—2—1—2 *7*
2—2—1—3 *8*
2—2—1—4 *9*
2—2—1—5 *10*

(32)

2—2—2—1 *7*
2—2—2—2 *8*
2—2—2—3 *9*
2—2—2—4 10
3—2—2—5 *11*

(33)

2—2—3—1 *8*
2—2—3—2 *9*
2—2—3—3 *10*
2—2—3—4 11
2—2—3—5 12

(34)

2—2—4—1 *9*
2—2—4—2 *10*
2—2—4—3 *11*
2—2—4—4 *12*
2—2—4—5 *13*

(85)

2—2—5—1 *10*
2—2—5—2 *11*
2—2—5—3 *12*
2—2—5—4 *13*
2—2—5—5 *14*

2—3

(36)

2—3—1—1 *7*
2—3—1—2 *8*
2—3—1—3 *9*
2—3—1—4 *10*
2—3—1—5 *11*

(37)

2—3—2—1 *8*
2—3—2—2 *9*
2—3—2—3 *10*
2—3—2—4 *11*
2—3—2—5 *12*

(38)

2—3—3—1 *9*
2—3—3—2 *10*
2—3—3—3 *11*
2—3—3—4 *12*
2—3—3—5 *13*

(39)

2—3—4—1 *10*
2—3—4—2 *11*
2—3—4—3 *12*
2—3—4—4 *13*
2—3—4—5 *14*

(40)

2—3—5—1 *11*
2—3—5—2 *12*
2—3—5—3 *13*
2—3—5—4 *14*
2—3—5—5 *15*

2—4

(41)

2—4—1—1 *8*
2—4—1—2 *9*
2—4—1—3 *10*
2—4—1—4 *11*
2—4—1—5 *12*

(42)

2—4—2—1 *9*
2—4—2—2 *10*
2—4—2—3 *11*
2—4—2—4 *12*
2—4—2—5 *13*

(43)

2—4—3—1 *10*
2—4—3—2 *11*
2—4—3—3 *12*
2—4—3—4 *13*
2—4—3—5 *14*

(44)

2—4—4—1 *11*
2—4—4—2 *12*
2—4—4—3 *13*
2—4—4—4 *14*
2—4—4—5 *15*

(45)

2—4—5—1 *12*
2—4—5—2 *13*
2—4—5—3 *14*
2—4—5—4 *15*
2—4—5—4 *16*

2—5

(46)

2—5—1—1 *9*
2—5—1—2 *10*
2—5—1—3 *11*
2—5—1—4 *12*
2—5—1—5 *13*

(47)

2—5—2—1 *10*
2—5—2—2 *11*
2—5—2—3 *12*
2—5—2—4 *13*
2—5—2—5 *14*

(48)

2—5—3—1 *11*
2—5—3—2 *12*
2—5—3—3 *13*
2—5—3—4 *14*
2—5—3—5 *15*

(49)

2—5—4—1 *12*
2—5—4—2 *13*
2—5—4—3 *14*
2—5—4—4 *15*
2—5—4—5 *16*

(50)

2—5—5—1 *13*
2—5—5—2 *14*
2—5—5—3 *15*
2—5—5—4 *16*
2—5—5—5 *17*

3—1

(51)

3—1—1—1 *6*
3—1—1—2 *7*
3—1—1—3 *8*
3—1—1—4 *9*
3—1—1—5 *10*

(52)

3—1—2—1 *7*
3—1—2—2 *8*
3—1—2—3 *9*
3—1—2—4 *10*
3—1—2—5 *11*

(53)

3—1—3—1 *8*
3—1—3—2 *9*
3—1—3—3 *10*
3—1—3—4 *11*
3—1—3—5 *12*

(54)

3—1—4—1 *9*
3—1—4—2 *10*
3—1—4—3 *11*
3—1—4—4 *12*
3—1—4—5 *13*

(55)

3—1—5—1 *10*
3—1—5—2 *11*
3—1—5—3 *12*
3—1—5—4 *13*
3—1—5—5 *14*

3—2

(56)

3—2—1—1 *7*
3—2—1—2 *8*
3—2—1—3 *9*
3—2—1—4 *10*
3—2—1—5 *11*

(57)

3—2—2—1 *8*
3—2—2—2 *9*
3—2—2—3 *10*
3—2—2—4 *11*
3—2—2—5 *12*

(58)

3—2—3—1 *9*
3—2—3—2 *10*
3—2—3—3 *11*
3—2—3—4 *12*
3—2—3—5 *13*

| (59) | | (60) | |
|---|---|---|---|
| 3—2—4—1 | *10* | 3—2—5—1 | *11* |
| 3—2—4—2 | *11* | 3—2—5—2 | *12* |
| 3—2—4—3 | *12* | 3—2—5—3 | *13* |
| 3—2—4—4 | *13* | 3—2—5—4 | *14* |
| 3—2—4—5 | *14* | 3—2—5—5 | *15* |

3—3

| (61) | | (62) | | (63) | |
|---|---|---|---|---|---|
| 3—3—1—1 | *8* | 3—3—2—1 | *9* | 3—3—3—1 | *10* |
| 3—3—1—2 | *9* | 3—3—2—2 | *10* | 3—3—3—2 | *11* |
| 3—3—1—3 | *10* | 3—3—2—3 | *11* | 3—3—3—3 | *12* |
| 3—3—1—4 | *11* | 3—3—2—4 | *12* | 3—3—3—4 | *13* |
| 3—3—1—5 | *12* | 3—3—2—5 | *13* | 3—3—3—5 | *14* |

| (64) | | (65) | |
|---|---|---|---|
| 3—3—4—1 | *11* | 3—3—5—1 | *12* |
| 3—3—4—2 | *12* | 3—3—5—2 | *13* |
| 3—3—4—3 | *13* | 3—3—5—3 | *14* |
| 3—3—4—4 | *14* | 3—3—5—4 | *15* |
| 3—3—4—5 | *15* | 3—3—5—5 | *16* |

3—4

| (66) | | (67) | | (68) | |
|---|---|---|---|---|---|
| 3—4—1—1 | *9* | 3—4—2—1 | *10* | 3—4—3—1 | *11* |
| 3—4—1—2 | *10* | 3—4—2—2 | *11* | 3—4—3—2 | *12* |
| 3—4—1—3 | *11* | 3—4—2—3 | *12* | 3—4—3—3 | *13* |
| 3—4—1—4 | *12* | 3—4—2—4 | *13* | 3—4—3—4 | *14* |
| 3—4—1—5 | *13* | 3—4—2—5 | *14* | 3—4—3—5 | *15* |

| (69) | | (70) | |
|---|---|---|---|
| 3—4—4—1 | *12* | 3—4—5—1 | *13* |
| 3—4—4—2 | *13* | 3—4—5—2 | *14* |
| 3—4—4—3 | *14* | 3—4—5—3 | *15* |
| 3—4—4—4 | *15* | 3—4—5—4 | *16* |
| 3—4—4—5 | *16* | 3—4—5—5 | *17* |

கா. ர. கோவிந்தசாமி முதலியார், வாக்கிய இலக்கணச் சிந்தாமணி.

—(பதிப்பு), வீரசோழியம், பெருந்தேவனார் உரை.

—(பதிப்பு), யாப்பருங்கலக் காரிகை.

—(பதிப்பும் உரையும்), பன்னிருபாட்டியல்.

—(பதிப்பு), நன்னூல், இராமநுச கவிராயர் விருத்தி.

—(பதிப்பு), இறையனார் அகப்பொருள் நக்கீரர் உரை.

—(பதிப்பு), அகப்பொருள் விளக்கம்.

கே. எஸ். கோபாலாச்சாரியாரும் பிறரும், நன்னூல்-காண்டிகையுரை.

தி. வே. கோபாலையர் (பதிப்பு), இலக்கணவிளக்கம், எழுத்ததிகாரம்.

—(பதிப்பு), பிரயோகவிவேகம்.

வை. மு. கோ. (பதிப்பு), நன்னூல்-காண்டிகை.

சங்குப்புலவர், மாணவர் தமிழிலக்கணம்.

வை. மு. சடகோபராமாநுசாச்சாரியார், (பதிப்பு), நன்னூல்-காண்டிகையுரை.

சண்முக முதலியார் (பதிப்பு), நன்னூல்-காண்டிகை,

இரா. சண்முகம், தொல்காப்பியம் மக்கள் வாழ்வின் இலக்கணம்.

மு. சண்முக தேசிகர் (உரை), சிதம்பரச் செய்யுட்கோவை.

செ. வை. சண்முகம் (பதிப்பும் உரையும்), சுவாமிநாதம்.

செ. சதாசிவம், கல்லூரி இலக்கணச் சுருக்கம்.

வை. சதாசிவப் பண்டாரத்தார் (பதிப்பு), தொல்காப்பியப் பொதுப் பாயிரம், ஆத்திரையர் பேராசிரியர்.

சந்திரசேகர கவிராய பண்டிதர், நன்னூல், சிவஞான சுவாமிகள் விருத்தியும், விசாகப்பெருமாளையர் பதவுரையும்.

சந்திரசேகர கவிராய பண்டிதரும் பிறரும் (பதிப்பு), தண்டியலங்காரம்.

பி. சந்திரசேகரன் (பதிப்பு), நன்னூல் மூலமும் காண்டிகை உரையும்.

க. சபாபதிப் பிள்ளை (பதிப்பு), அகப்பொருள் விளக்கம், ச. வைத்தியலிங்க பிள்ளை உரை.

தி. சபாபதிப் பிள்ளை (பதிப்பு), வெண்பாப்பாட்டியல்.

உ. வே. சாமிநாத ஐயர் (பதிப்பு), புறப்பொருள் வெண்பாமாலை.

—(பதிப்பு), நன்னூல், சங்கரநமச்சிவாயர் உரை.

—(பதிப்பு), நன்னூல், மயிலைநாதர் உரை.

—(பதிப்பு), தமிழ்நெறி விளக்கம், பொருளியல் (பழைய உரையுடன் பதிப்பு).

சாமி சிதம்பரனர், தொல்காப்பியத் தமிழர்.

சாமுவேல் பிள்ளை, (பதிப்பு), தொல்காப்பிய நன்னூல்.

த. சரவணத்தமிழன், தமிழ்நூல்.

சரவணப்பெருமாள் ஐயர், அணியிலக்கணம்.

சரஸ்வதிமகால் (பதிப்பு) இலக்கணவிளக்கம், சொல்லதிகாரம்.

—(பதிப்பு), இலக்கணவிளக்கம், பொருளதிகாரம், அகத்திணையியல்-முற்பகுதி.

—(பதிப்பு), இலக்கணவிளக்கம், பொருளதிகாரம், அகத்திணையியல்-பிற்பகுதி.

—(பதிப்பு), இலக்கணவிளக்கம், பொருளதிகாரம், புறத்திணையியல்.

—(பதிப்பு), இலக்கண விளக்கம், பொருளதிகாரம், செய்யுளியல்.

—(பதிப்பு), இலக்கண விளக்கம், பொருளதிகாரம், பாட்டியல்.

ஜி. பி. சவுந்தரநாயகம் பிள்ளை, நன்னூற் சுருக்கச் சார்பு.

சவேரிமுத்துப் பிள்ளை, இலக்கணச் சுருக்கம்.

எஸ். பி. சற்குணர், இலக்கண ஆக்கம்.

வ. உ. சிதம்பரம் பிள்ளை, (பதிப்பு), தொல்காப்பியம்-எழுத்து, இளம்பூரணர் உரை, தொல்காப்பியம்-பொருள், இளம்பூரணர் உரை.

சிதம்பர புன்னைவன நாதமுதலியார், (பதிப்பு), தொல்காப்பியம் மூலம்.

சாமி. சிதம்பரனர், தொல்காப்பியத் தமிழர்.

ஆ. சிவலிங்கனர், இளம்பூரணர் எழுத்துரை.

சிவஞான சுவாமிகள், தொல்காப்பியச் சூத்திரவிருத்தி.

—இலக்கண விளக்கச் சூறுவளி.

ந. சிவப்பிரகாச குருக்கள், (பதிப்பு), தமிழ்ப்பஞ்சலட்சண மூலம்.

சிவானந்தையர் (பதிப்பு), அகப்பொருள் விளக்கம்.

சின்னையர், இலக்கணச் சுருக்கம்.

சீனிவாசாச்சாரியும் பிறரும் (பதிப்பு), குவலயானந்தம்.

தி. ஈ. சீனிவாசராகவாச்சாரியார், தண்டியலங்கார சாரம்.

சீனிவாசராகவாச்சாரியார் (பதிப்பு), தொன்னூல் விளக்கம்.

ஆர். சீனிவாசராகவாச்சாரியா, சிரோமணி, யாப்பொளி.

இரா. சீனிவாசன், தமிழ்ப் பாவியல்.

—தொல்காப்பியமும் நன்னூலும்.

சுத்தானந்த பாரதியார், நல்ல தமிழ் எழுதுவதெப்படி ?

எம். சுந்தரமுதலியார், இலக்கணக் கோவை.

வீ. ப. கா. சுந்தரம், மலரின் பெயரா நிலங்கட்கு ?

சுந்தர சண்முகனர், எழுத்தாளர் துணைவன்-முதற்பகுதி.

சுப்பராய செட்டியார் (பதிப்பு), தொல்காப்பியம், எழுத்து, இளம்பூரணர் உரை.

சுப்பிரமணியன், சிந்தனையாளர், தொல்காப்பியர்.

சுப்பிரமணிய தேசிகர் (உரை), தண்டியலங்காரம்.

பி. சா. சுப்பிரமணிய சாஸ்திரியார், தொனிவிளக்கு.

—தமிழ்மொழி (Tamil Language).

—(குறிப்புரை), தொல்காப்பியம்-எழுத்து.

—(குறிப்புரை), தொல்காப்பியம்-சொல்.

—(ஆங்கில உரை) தொல்காப்பியம்-சொல்.

கா. சுப்பிரமணிய பிள்ளை (பதிப்பு), தொல்காப்பியம்-எழுத்து, நச்சினார்க்கினியர் உரை.

—பழந்தமிழர் நாகரிகம்.

ந. சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை.

சுப்பிரமணிய தீட்சதர், பிரயோக விவேகம்.

ரா. சுப்பிரமணியக் கவிராயர் (பதிப்பு), யாப்பிலக்கணமும் அணியிலக்கணமும்.

டாக்டர். ச. வே. சுப்பிரமணியன் (பதிப்பு), இலக்கணத் தொகை-எழுத்து.

—(பதிப்பு), இலக்கணத் தொகை-சொல்.

சுவாமிநாத பண்டிதர், (பதிப்பு), நன்னூல் மூலமும் யாப்பருங்கலக் காரிகை மூலமும்.

சுவாமிநாத தேசிகர், இலக்கணக் கொத்து.

சுவாமி ஞானப்பிரகாசர், தமிழ்ச் சொற்பிறப்பாராய்ச்சி.

வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், நாடகவியல்.

பு. த. செய்யப்ப முதலியார், தமிழ் வித்தியார்த்தி விளக்கம்.

தி. செல்வ கேசவராய முதலியார், பஞ்சலட்சணம்.

எம். ஏ. சேஷகிரி சாஸ்திரியார், திராவிட சப்ததத்துவம்.

சொர்ன கேசவலு நாயுடு (பதிப்பு), பாட்டியற் கொத்து.

சேனாவரையர் (உரை), தொல்காப்பியம், சொல்லதிகாரம்.

ச. சோமசுந்தர பாரதியார், தொல்காப்பிய ஆராய்ச்சி.

—தொல்காப்பியர் பொருட்படலம், புறத்திணையியலும் புதிய உரையும்.

—தொல்காப்பியர், பொருட்படலம், அகத்திணையிலும் புதிய உரையும்.

—தொல்காப்பியர் பொருட்படலம், மெய்ப்பாட்டியலும் புதிய உரையும்.

வ. தங்கைய நாடார் (பதிப்பு), தண்டியலங்காரம் வினாவிடை.

—(உரை), அகப்பொருள் விளக்கம்.

தி. தண்டபாணி, புறப்பொருள் கதைகள்.

ச. தண்டபாணி தேசிகர் (பதிப்பு), நன்னூல், சிவஞான சுவாமிகள் விருத்தியுரை.

தண்டி, தண்டியலங்காரம்.

தண்டபாணி சுவாமிகள், அறுவகை இலக்கணம், ஏழாம் இலக்கணம்.

தமிழ்ச் சங்கம் (பதிப்பு), மாறனலங்காரம், (பொருளியல் உரை).

தாண்டவராய முதலியார், இலக்கண வினாவிடை.

—(பதிப்பு), இலக்கணப் பஞ்சகம், (நன்னூல், அகப்பொருள், புறப்பொருள் சுருக்கம்).

சி. வை. தாமோதரம் பிள்ளையும் பிறரும் (பதிப்பு), இறையனாரகப் பொருள்-நக்கீரர் உரை.

—(பதிப்பு), தொல்காப்பியம்-சொல் சேனாவரையர் உரை.

—பிறரும் (பதிப்பு), வீரசோழியம்.

—(பதிப்பு), தொல்காப்பியம்-பொருள் நச்சினார்க்கினியர் உரை.

—(பதிப்பு), தொல்காப்பியம்-சொல் சேனாவரையர் உரை.

—(பதிப்பு), தொல்காப்பியம்-எழுத்து, நச்சினார்க்கினியர் உரை.

—(பதிப்பு), இறையனார் அகப்பொருள்.

—(பதிப்பு), இலக்கண விளக்கம்.

தாவீது யோசேப், தமிழ் இலக்கணத் தெளிவு.

தானியேல் ஜேசுதாஸ், தமிழ் ஆசிரியன்.

க. த. திருநாவுக்கரசு, தொல்காப்பிய நூலடைவு.

திருவேங்கடஐயர், (பதிப்பு), உவமான சங்கிரகம்.

மணி. திருநாவுக்கரசு முதலியார், இலக்கண இலக்கியத் திறவுகோல்.

—(பதிப்பு), புறப்பொருள் வெண்பாமாலை.

—(பதிப்பு), நன்னூல் மூலம்.

அ. திருமலை முத்துசாமி, யாப்பிலக்கணச் சுருக்கம்.

—(பதிப்பு), யாப்பருங்கலக்காரிகை.

திருப்பாற்கடல்நாதன் கவிராயர் (உரை), முத்துவீரியம்.

வே. துரைசாமி ஐயரும் பிறரும் (பதிப்பு), தொல்காப்பியம்—பொருள் இரண்டாம்பாகம், பேராசிரியர் உரை.

தெய்வசிகாமணி முதலியார், (பதிப்பு), நன்னூல், (விசாகப் பெருமாளையர் காண்டிகையும், சிவஞான சுவாமிகள் விருத்தியும்).

தெய்வச்சிலையார் (உரை), தொல்காப்பியம்-சொல்.

ஞா. தேவநேயன், திராவிடத்தாய்.

—சுட்டுவிளக்கம்.

—ஒப்பியன் மொழிநூல்.

தொல்காப்பியர், தொல்காப்பியம் எழுத்து-சொல்-பொருள்.

நக்கீரர் (உரை), இறையனார் அகப்பொருள்.

நச்சினார்க்கினியர், (உரை), தொல்காப்பியம், எழுத்து.

—(உரை), தொல்காப்பியம், சொல்.

—(உரை), தொல்காப்பியம்-செய்யுளியல்.

—(உரை), தொல்காப்பியம்-பொருள் (களவு, கற்பு, பொருளியல்).

—(உரை), தொல்காப்பியம்-பொருள் அகத்திணையியல்-புறத்திணையியல்.

—(உரை), தொல்காப்பியம் பொருளதிகாரம்.

சு. நடராஜன், இலக்கணத்தில் புதிய சிந்தனைகள்.

கா. நமச்சிவாய முதலியார், (பதிப்பு), நன்னூல்.

—(பதிப்பு), தொல்காப்பியம் எழுத்து. சொல் மூலம்.

—(பதிப்பு), தொல்காப்பியம், பொருள், பகுதி-1, இளம்பூரணர் உரை.

—(பதிப்பு), தொல்காப்பியம், சொல்லதிகாரம், இளம்பூரணர் உரை.

—(பதிப்பு), தொல்காப்பியம், எழுத்தும் சொல்லும்.

—சிற்றிலக்கண வினாவிடை.

நமச்சிவாயம் பிள்ளை, (பதிப்பு), வெண்பாப்பாட்டியல்.

நவநீத நடனார், கலித்துறைப் பாட்டியல் என்னும் நவநீதப்பாட்டியல்.

ம. ஆ. நாகமணி, (பதிப்பு), தொல்காப்பியப் பொருளதிகார மேற்கோள் விளக்க அகராதி முதலியன.

அ. கி நாயுடு, தொல்காப்பியர் கண்ட தமிழர் சமுதாயம்.

நாராயணஐயங்கார், (பதிப்பு), மாறனலங்காரம்.

நாற்கவிராச நம்பி, அகப்பொருள்.

ம. வே. பசுபதி, புத்துரை. யாப்பருங்கலக் காரிகை.

அ. கி. பரந்தாமனார், கவிஞராக.

ந. பலராமையர், நாடகவியல் உரை.

பவணந்தி, நன்னூல்.

ச. பவானந்தம் பிள்ளை, (பதிப்பு), யாப்பருங்கலம், பகுதி-1.

—(பதிப்பு), யாப்பருங்கலம், பகுதி-2

—(பதிப்பு), பேரகத்தியத் திரட்டு.

—(பதிப்பு), நன்னூல்.

—(பதிப்பு), தொல்காப்பியம்-பொருள், களவு, கற்பு, பொருளியல்.

—(பதிப்பு), தொல்காப்பியம்-பொருள், பேராசிரியர் உரை.

—(பதிப்பு), தொல்காப்பியம்-பொருள், (களவு, கற்பு, பொருளியல்), நச்சினார்க்கினியர் உரை.

—(பதிப்பு), தொல்காப்பியம்-பொருள் (அகத்திணை, புறத்திணை), நச்சினார்க்கினியர் உரை.

பொ. பாண்டித்துரைத்தேவர் (பதிப்பு), அகப்பொருள் விளக்கம்.

நா. பார்த்தசாரதி, சொல்லின் வளம்.

—சொல்லின் செல்வம்.

புத்தமித்திரர், வீரசோழியம்,

புலவர் அரசு, தொடர்மொழியிலக்கணம்.

—கல்லூரித் தமிழ் இலக்கணம்.

புலவர் குழந்தை, தொடையதிகாரம்.

—(உரை), தொல்காப்பியம், பொருளதிகாரம் முதற்பகுதி.

—தொல்காப்பியர் காலத் தமிழர்.

—யாப்பதிகாரம்.

புலியூர்க் கேசிகன், தொல்காப்பிய உரையில் காதற்கதைகள்.

—தொல்காப்பியம் (உரை).

—(பதிப்பு), புறப்பொருள் வெண்பாமாலை.

புன்னைவன நாதன், (பதிப்பு), தொல்காப்பியம்.

பெருந்தேவனார், (உரை), வீரசோழியம்,

சி. ஜே. பெஸ்க்கி, கொடுந்தமிழ்.

பேராசிரியர் (உரை), தொல்காப்பியம்-பொருளதிகாரம்.

பொற்கோ, இலக்கண உலகில் புதிய பார்வை.

பொன்னம்பலம் ராமநாதன், செந்தமிழ் இலக்கணம், பகுதி-1.

வ. பொன்னையா, தமிழ் இலக்கணமும் உரையமைப்பும்.

மோசசு. பொன்னையா, நன்னூல் ஆராய்ச்சித் தெளிவுரை.

ஜி. யூ. போப், இலக்கண நூல்.

—இலக்கண வினாவிடை.

—தமிழ் இலக்கணம் (A Tamil Handbook).

ம. மகாலிங்கையர், இலக்கணச் சுருக்கம்.

மழவை. மகாலிங்கையர், (பதிப்பு), தொல்காப்பியம்-எழுத்து, நச்சினார்க்கினியர் உரை.

மகாலிங்கையரும் பிறரும், (பதிப்பு), தொல்காப்பியம்–எழுத்து, நச்சினார்க்கினியர் உரை.

மயிலைநாதர் (உரை), நன்னூல்.

தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், தொல்காப்பியம்-சொல் (பதிப்பு), பி.சா. சுப்பிரமணிய சாஸ்திரி ஆங்கிலஉரை.

முத்துவீர உபாத்தியாயர், முத்துவீரியம்.

முத்துச் சிதம்பரம் பிள்ளை, யாப்பிலக்கணச் சுருக்கம்.

முத்து ராமலிங்கத்தேசிகன், பலதொடை விளக்கம்.

வே. முத்துசாமி ஐயர், தொல்காப்பியம் பொருளதிகார ஆராய்ச்சி.

பி. எஸ். டி. முத்து சுவாமிப் பிள்ளை, இலக்கண மணிமாலை.

—இலக்கணப் பிரயோக விளக்கம்.

ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை, நன்னூல் இலகுபோதம்.

—நன்னூல், உதாரண விளக்கம்.

மெய்கண்டதேவர், உரைமுக மாணுக்கன், பாயிரவிருத்தி மறுப்பு.

எஸ். ராஜம் (பதிப்பு), சந்தி குறியீட்டுவிளக்கம்.

—(பதிப்பு), தொல்காப்பியம் மூலம்.

இ. எஸ். வரதராஜ ஐயர், தொல்காப்பியம்-பொருள், (கற்பியல், பொருளியல் ஆங்கிலமொழிபெயர்ப்பு).

—தொல்காப்பியம்—பொருள் (அகத்திணையியல், களவியல் ஆங்கிலமொழிபெயர்ப்பு).

பி. வாசுதேவ முதலியார், இலக்கணச் சுருக்கம்,

விசாகப் பெருமாளையர், யாப்பிலக்கணம்.

—யாப்பிலக்கணவினவிடைச் சுருக்கம்.

—பாலபோத இலக்கணம்.

—நன்னூல்-காண்டிகை.

—தமிழ் இலக்கணம்.

—இலக்கணச் சுருக்க வினவிடை.

—அணியிலக்கணம்.

—(பதிப்பு), யாப்பருங்கலக் காரிகை.

—(உரை), நன்னூல்.

—(பதிப்பு), தண்டியலங்கார மூலமும் சுப்பிரமணிய தேசிகர் உரையும்.

விசாகப்பெருமாளையரும் பிறரும், (பதிப்பு), யாப்பருங்கலக் காரிகை.

விசுவநாத பிள்ளை, உவமான சங்கிரகம்.

—(பதிப்பு), நன்னூல் மூலம்.

வீரமாமுனிவர், தொன்னூல் விளக்கம்.

டி. வீரபத்திர முதலியார், விருத்தப்பாவியல்.

க. வீரகத்தி, சொல் இலக்கணத்தில் யாப்பின் செல்வாக்கு.

—இலக்கண விளக்கம்.

வீராசாமி முதலியார். (பதிப்பு), நன்னூல். அகப்பொருள், புறப்பொருள், யாப்பருங்கலம், காரிகை, தண்டியலங்காரம்.

—(பதிப்பு), நன்னூல் மூலம்.

வே. வேங்கடராஜலு ரெட்டியார், இலக்கணக் கட்டுரைகள்.

—குற்றியலுகரம்.

—நுண்பொருள் விளக்கம், (சொல்லதிகாரம்).

ந. மு. வேங்கடசாமி நாட்டார் (பதிப்பு), யாப்பருங்கலக் காரிகை.

எம். வேங்கடசாமி ஐயர், விருதிவிளக்கம்.

வேதகிரி முதலியார், (பதிப்பு), காரிகை.

—(பதிப்பு), தொன்னூல் விளக்கம்.

மே. வீ. வேணுகோபால் பிள்ளை, (பதிப்பு), தொல்காப்பியம் (சொல்), நச்சினார்க்கினியர் (உரை).

—(பதிப்பு), யாப்பருங்கலக்காரிகை.

—(பதிப்பு), யாப்பருங்கலம்.

ஆ. வேலுப்பிள்ளை, தமிழ் வரலாற்று இலக்கணம்.

க, வெள்ளைவாரணம் தொல்காப்பியம்-நன்னூல், எழுத்ததிகாரம்.

—தொல்காப்பியம்-நன்னூல், சொல்லதிகாரம்.

எஸ். வையாபுரிப் பிள்ளை, இலக்கணச் சிந்தனைகள்.

—(பதிப்பு), தொல்காப்பியம்-பொருளதிகாரம், முதற்பகுதி, நச்சினார்க்கினியர் உரை.

வைத்தியநாத தேசிகர், இலக்கண விளக்கம்.

ச. வைத்தியலிங்க பிள்ளை, (உரை), அகப்பொருள் விளக்கம்.

டபிள்யூ. ஜாய்ஸ், எஸ். சாமுவேல் பிள்ளை, தமிழ் நன்னூல்.

ஜான் லாசரஸ், தமிழ் இலக்கணம் (Tamil Grammar).

தாமஸ். ஜேசுதாஸ் கவிராயர், வாக்கிய லட்சணம்.

# முகவுரை

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவராய்ச் சிறப்புற்று விளங்கிய பேராசிரியர் டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளையவர்கள் தங்கள் அன்னையார் சொர்ணம்மாள் பெயரால் அறக்கட்டளை ஒன்றைச் சென்னைப் பல்கலைக்கழகத்தில் நிறுவியுள்ளார்கள். 1958-59 ஆம் ஆண்டுமுதல் அறிஞர் பலரால் ஆண்டுதோறும் இதன் சார்பில் சொற்பொழிவுகள் நிகழ்த்தப் பெற்றுவருகின்றன.

1973-74 ஆம் ஆண்டுக்கான இந்த அறக்கட்டளைச் சொற்பொழிவை முதுபெரும்புலவர் பேராசிரியர் அ. நடேச முதலியார் அவர்கள் நிகழ்த்தினார்கள். தவத்திரு ஞானியாரடிகளைக் குறித்து அவர்கள் மூன்று நாள்கள் நிகழ்த்திய சொற்பொழிவே இங்கு வெளியிடப் பெறுகிறது.

புலவர் அ. நடேச முதலியார் அவர்கள் கடலூரரை சார்ந்தவர். ஞானியாரடிகளின் திருமடத்திலேயே அடிகளாரிடம் பாடம் கேட்கும் பெருவாய்ப்பினைப் பெற்றவர். ஞானியார் திருமடத்தோடு பலகாலம் தொடர்புகொண்டிருந்த அவர் அடிகளாரைக் குறித்துப் பேசுவது மிகவும் பொருத்தமாகும்.

தவத்திரு ஞானியாரடிகள் திருக்கோவலூர் ஆதீனம் திருப்பாதிரிப்புலியூரில் ஐந்தாம் பட்டமாக விளங்கி அருளாட்சி செலுத்தியவர்கள். சமயமும் தமிழும் அடிகளாரால் நாடெங்கும் புத்துயிர் பெற்றுப் பரவின. அடிகளாரின் பேச்சாலும் தொண்டுகளாலும் பயன்மிகப் பெற்றோர் பலராவர். ஞானியாரடிகளாரின் தமிழ்த்தொண்டு, சமயத்தொண்டு, சமுதாயத்தொண்டு என்னும் முப்பொருளில் மூன்று நாள்கள் திரு. புலவர் அ. நடேச முதலியார் அவர்கள் பேசினார்கள். இச் சொற்பொழிவுத் தொகுதி தவத்திரு ஞானியாரடிகளை இன்றைய உலகமும் நன்கறிய அறிமுகம் செய்து வைப்பதாகும். அடிகளாரின் தன்னலமற்ற தொண்டுகளின் சிறப்பினை விளக்கிக் காட்டும் இந் நூல் அடிகளாரைப் பற்றிய ஒரு வரலாற்றுக் களஞ்சியமாகும்.

பதிப்பாசிரியர்.

# பொருளடக்கம்

# 1. தமிழ்த் தொண்டு

*முன்னுரை*

'கண்டுணர வல்லேனோ காட்டாயேல் இவ்வுலகில்
பண்டைமல ஆணவத்தாற் பாழ்பட்டேன்—தொண்டர்க்கு
வேண்டுநலம் கூட்டுவிக்கும் வித்தகனே ஆறுமுக
ஆண்டவனே செய்க அருள்.'

(ஞானியாரடிகள் குருதுதி)

திருவளரும் செந்தமிழ்நாடு சிறப்புற்று விளங்குதற்குரிய பல காரணங்களுள் அறவாணரும் அறிஞரும் எக்காலத்தும் நிலைத் திருந்து தொண்டாற்றியதே தலைசிறந்த காரணமாகும். நம் நாடு வரலாற்றுக்கு அப்பாற்பட்ட காலத்திருந்தே தண்ணளியும் ஒண் மதியும் பெற்ற தகைசால் சான்றோரையும் தமிழ் அறிஞரையும் பெற்று வளம் நிறைந்த மொழியையும், மனம் நிறைந்த பண்பையும் உடையதாய் வளர்ந்து வருகிறது. அத்தகைய சான்றோருள், 19-ம் நூற்றாண்டிற்றோன்றி இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் பல்லாற்றானும் பணிசெய்து, மொழியையும், சமயத்தையும் சமுதாயத்தையும் வாழ்விக்க வந்தவொரு நல்லாரைப் பற்றிய வரலாற்றுப் பேச்சினைப் பேசுவதால், எழுதுவதால் ஏன் நினைப்ப தாலும் கூட, இனிய பண்புகளும், தொண்டு உள்ளமும், மொழிப் பற்றும், சமயப் பற்றும், சமுதாயப் பற்றுகிய நாட்டுப் பற்றும் தாமே போதரும் என்பது உறுதி. அத்தகு நன்மைபெற எளியேனுக்கு இந்த வாய்ப்பினை நல்கிய சென்னைப் பல்கலைக் கழகத்துக்கும், இந் நிகழ்ச்சியில் என்னை ஈடுபடுத்திய அனைத்துச் சான்றோர்க்கும் என் நன்றி கலந்த வணக்கமுரியது.

**அடிகளாரின் வாழ்க்கை**

ஞானியாரடிகளின் தொண்டுகளைப்பற்றிப் பேசுமுன் அடி களாரின் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்பினையாவது முன்னே கூற வேண்டும்.

நாம் மொழியினையும் மொழிவளரும் நாட்டினையும் தாய்மொழி, தாய்நாடு என்றழைக்கிறோம். பிறந்த பொன்னாடும் பேசும் நன்

மொழியும் நற்றவத் தாயினும் நனி சிறந்தன. அதனுல்தான் நம் முன்னேர் 'தெய்வத் தமிழ்நாடு' என்று கூறுவர். தெய்வம் என்ற சொல் தமிழோடும் நாட்டோடும் பிணைந்து தெய்வத்தமிழ், தெய்வநாடு எனப் பிரிந்து பொருள்படும். அன்றியும் பின் முன்னகப் பிரித்துக் கூட்டினுல், தமிழ்த்தெய்வம், நாடுதெய்வம் எனவும் பொருள்படும். எனவே மக்களாகிய நமக்கு, வாழ்வுக்கு இடந்தந்த நாடும், அறிவு வளர்ச்சிக்கு முதலாய மொழியுமே தெய்வமாகும். நம்மைப் பெற்று எடுத்த தாய் எப்படி முதல் தெய்வமோ அப்படியே, எந்தாதை தாதைக்கும் எம் மனைக்குய இடந்தந்த நாட்டையும், மக்கள் வாழ்க்கையை யறிந்து செலுத்திக் குறிக்கோட்கு வழிகாட்டும் மொழியையும் நம்முன்னேர் தெய்வ மெனவே வழிபட்டனர்.

இத்தகு செந்தமிழ் நாட்டில் சீரும் சிறப்பு மிக்கதாய் அனைத்து வித வளனும் செறிந்தசோழ நன்னுட்டிலே வரலாற்றுச் சிறப்பு மிக்க ***திருநாகேச்சுரத்தில்*** 1873 மே பதினேழுக்குச் சரியான, ஸ்ரீமுக ஆண்டு வைகாசித் திங்கள் 4-ம் நாள் வியாழக்கிழமை பகல் 10 மணி யளவில், வீர சைவ நற்குடியில் ***அண்ணுமலையார்க்கும் பார்வதி யம்மையார்க்கும்*** நற்றவப் பயனுய் ***பழநியாண்டி*** என்ற பிள்ளைத் திருநாமத்தோடு அடிகளார் அவர்கள் தோன்றினுர்கள். தோற்றத் திலேயே ஒரு சிறப்பு, ***ஞானசம்பந்தர்*** முத்தி பெற்ற திரு நாளாம் வைகாசி மூலமே அடிகள் தோற்ற நாளாகவும் அமைந்தது. நல்ல நாள் நல்லது செய்யும். ஆகையால் பெற்றேர் பண்டைக்கால மரபுப்படி, மகனைத் தங்கள் குல குருவாகிய திருக்கோவலூர் ஆதீன அன்றைய குருமகா சந்நிதானமாகிய நாலாம்பட்டத்து, அடிகளாரின் அருளாசி பெறுதற்கு எடுத்துக்கொண்டு ***திருப் பாதிரிப்புலியூருக்கு*** வந்தனர். ஆதீனத்து அன்றைய தலைவராய் விளங்கிய அடிகளார், குழந்தையின் திருவுருவப்பொலிவு நோக்கி அருள் சுரந்து பெற்றேர்க்கு இக் குழந்தை இம் மடத்திலேயே வளரட்டும் என்று கூறி விடை கொடுத்தனுப்பினுர்கள். அன்றைய நிலை மடாலயங்களின் பொறுப்பு, அங்கு அருளாணை செலுத்தும் அறவோர்களின் திருவுள்ளம், அவர்கட்குச் சமுதாயத்தில் இருந்த கண்ணேட்டம், இவையெல்லாம் இந் நிகழ்ச்சியினை நமக்கு நினைவு படுத்தும். சமயச் சான்றேர் கடப்பாட்டுணர்வுடன் சமுதாயத்தில் ஈடுபடுவரேல் சமயம் செழிக்கும்; ஒழுக்கம் வளரும்; சமுதாயம் செப்பமுறும். சிறந்த அறவாணரும் அறிஞரும் அவர்களால் உருப் பெறுவர் என்பதனை இந்த வரலாறு உண்மைப்படுத்துகிறது.

நாலாம் பட்டத்தடிகள் குழந்தையை உடல் நலம், மனநலம், அறிவு நலம், சமய நலம் உடன் வளர வளர்த்துத் தாமே தாயாய், தந்தையாய், குருவாய், சுற்றமாய் விளங்கினுர்கள். அப்ப மூர்த்தி களுடைய திருவாக்கு ஒன்று இங்கு நினைவுக்கு வருகிறது.

"அப்பன் நீ அம்மை நீ ஐயனும் நீ
அன்புடைய மாமனும் மாமியும் நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ
ஒருகுலமும் சுற்றமும் ஓரூரும் நீ
துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய் நீ
துணையாய் என்நெஞ்சம் துறப்பிப்பாய் நீ
இப்பொன்நீ இம்மணிநீ இம்முத்துநீ
இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன் நீயே!"

என்ற திருவாக்கு எவ்வளவு உண்மை என்பது நம்மனோர் சிந்திக்கத்தக்கதாம்.

குழந்தை பழநியாண்டி பதினேழாண்டளவை வரையில் தாய் மொழியாந்தமிழ்ப்பாலோடு, தெலுங்குத் தேனும், வடமொழிக் கண்டும், கன்னடப்பாகும், இன்னிசைச்சாறுங் கூட்டி உண்டு களித்து, உயிர்தழைக்க, உளந்தழைக்க, உடல்தழைத்து, அன்பு அரும்பி, அறிவு மலர்ந்து, அறங்கனிந்த நல்வாழ்க்கை நிலை எய்தினர்கள்.

பதினேழாண்டளவையில், திருவருள் நிகழ்ச்சியால், நாலாம் பட்டத்தடிகள் சமாதிநிலை எய்தவே, அடிகள் திருக்கோவலூர் ஆதீன ஐந்தாம்பட்டத்துக் குருமகா சந்நிதானப் பொறுப்பேற்க வேண்டியதாயிற்று. இற்றை ஞான்று மடாதிபதிகளாய் வருவோர் இந் நிகழ்ச்சியை ஊன்றி நோக்கத்தகும். ஞானபீடத்தலைமை இளமை வயதில் பெறநேர்ந்தாலும், அவர்கள் வளர்ந்த முறையும் வளர்த்த முறையும் பிறழ்ந்த செயலுக்கும் தன்னலனுக்கும் இடம் கொடாதன்றோ? ஆதலால் இனிச் செயக்கடவதென்னென எண்ணிச் செயல்பட நினைந்து தன்னிலையிற்றுழாது, கடமை தவறுது, கட்டுப்பாட்டினின்றும் மீறுது, தான் பிறந்த பொன்னுட்டுக்கும், தான் பேசுந் தாய்மொழிக்கும் மேற்கொண்ட வாழ்க்கையின் நிலைக்கேற்ப சமயத்துக்கும் தம் வாழ்நாள் முழுதும் செயல்பட நினைந்து வாழ்ந்த முறையினைத்தான் இன்று மூன்று பிரிவாகப் பிரித்துப் பேச முற்படுகிறேன். இதனோடு அவர்கள் வாழ்ந்த காலவரலாற்றின் அடிப்படையில் முதலாவது தமிழ்த் தொண்டு என்ற தலைப்பில் சில சொல்வல்.

### கல்வியும் தொண்டும்

ஒருமகன் ஒருசெயலினை மேற்கொள்ளப்புகும்போது, அச் செயலைச் செய்தற்குரிய முழுத்தகுதியும் உடையனுய்த் தன்னை ஆக்கிக்கொளல் வேண்டும். மொழித்தொண்டு செய்யப்புகுவோன் மொழியின் வரலாறு, இலக்கணம், இலக்கியம், சமுதாயம், நாகரிகம், பொருளாதாரம், இவற்றை அறிய வேண்டுவதோடு, பிறமொழி நலன்களையும் நன்கறிந்து, தன் தாய்மொழியின் தனிச்சிறப்பினைப்

பிரித்தும், பெருமைப் படுத்தும், தொண்டு செய்யக் கடமைப் பட்டவனுகிருன். ஞானியாரடிகள் அருளாட்சிப் பொறுப்பினை மேற் கொண்டபோது அவர்களது வயது மிகமிக இளமை நிலை. நம் நாட்டு நற்சான்ருேர் வரலாற்றில் சிலர் அருட்டன்மையுடையராகவே அவதாரஞ் செய்தனர் என்றும், சிலர் இடையில் அருள்பெற்றனர் என்றும் அதனுல் அவர்கள் செயற்கருஞ் செயலைச் செய்தனர் என்றும் பேசப்படுவதைக் காண்கிருேம். ஆனுல் அடிகள் வரலாற்றில் அப்படி ஒன்றும் நிகழாது நம் போலவே மக்களாய்ப் பிறந்து வாழ்ந்து சிறப்புடைவாழ்வை மேற்கொண்டு, செய்யக் கூடிய செய்யவேண்டிய செயலையே செய்து, ஆனுல் நம்மால் செய்யமுடியாது வாழமுடியாது என்று நம்போலியரை ஓடாதபடி தடுத்து 'நீவிரும் வாழலாம்; வாழவே வேண்டும்' என வழிப்படுத்தின முறையைக் காண்கிருேம். தமிழ்த் தொண்டினை மேற்கொண்ட போது அவர்கள் மேற்கூறியாங்குத் தம்மை வளர்த்துக் கொண்டே தொண்டில் புகவேண்டும் என்று கருதி, தம் அறநிலையமாகிய மடா லயத்திலேயே வடமொழி தென்மொழியாசிரியர்களை வரும்படி செய்து கற்பன கற்ருர்கள். இடைவிடா உழைப்பால், சமய நுண்மாண் நுழைபுலமும், இன்பத் தமிழாக்க அறிவும், இசைத் தேனும் ஒருங்கமைந்த நன்மலர்ப்பருவம் பெற்ருர்கள்.

ஆங்கில அறிவுக்குப் பள்ளிப் படிப்பும், தமிழறிவுக்குத் திரு. சாமிநாதஐயரும், வடமொழி அறிவுக்குக் கிருஷ்ணமூர்த்தி ஐயரும், இசைப்பயிற்சிக்கு ஒரு நல்லாசிரியரும், தெலுங்கறிவுக்கு ஆதீனத் தலைவரும் துணை செய்தனர். அதனோடு சோதிடம், ஞானநூல், சாத்திரம், தோத்திரம், வரலாறு, ஆகமம் முதலான வற்றிலும், சீடர்கட்குத் தீக்ஷைசெய்ய வேண்டிய விதிகளும் திருக்கோயில், நித்தியநைமித்திக பூசைவிதிகள் முதலியவற்றையும் அறிந்து செயல்படவேண்டிய கட்டாயமும் அடிகட்கு ஏற்பட்டது. இத்தனை அறிவு நிரம்பிய நிலையில், அடிகள் மேற்கொண்ட தமிழ்த் தொண்டு ஐந்துவகைப்படும். அவையாவன:

1. தமிழ் மன்றங்கள்
2. பள்ளி நிறுவனம்
3. பாடம் சொல்லுதல்
4. விரிவுரை
5. மாணவர் ஆக்கம்

மேற்கூறிய ஐந்து பிரிவுகளிலும் அடிகள் ஆற்றிய தமிழ்த் தொண்டு மிகப்பயனுடையதாகவும், சிறப்புப் பெற்றும் வளர்ந்தோங் கலாயிற்று.

### *தமிழ் மன்றங்கள்வழித் தமிழ்த்தொண்டு*

முதன் முதலாக 1903-ல் அடிகளார் தம் அறப்பள்ளியாகிய மடாலயத்திலேயே 'வாணி விலாச சபையைத் தொடங்கினூர்கள். அதுகாலே வாரந்தோறும், சபை நிகழ்ச்சியில், சிறந்த தலைப்புகளில் அடிகளாரும், மாணவரும் பேசி, தம்மறிவையும் கேட்போர் அறிவையும், தமிழ்ப் பற்றையும், தமிழருமை, இனிமை, தொன்மை இவற்றையும் வளர்த்து வரலாயினர். ஆண்டு நிறைவில் தமிழ்ப் புலமை மிக்க சான்றோரை அழைத்துத் தலைமை தாங்கச் செய்தும், விரிவுரையாற்றச் செய்தும் அடிகளார் தமிழ்த் தொண்டாற்றினர் சபையில் தலைமை வகித்த பெரும் புலவர்களுள் குறிப்பிடத்தக்க வர்கள் ***பாண்டித்துரைத்தேவர், பண்டிதமணி கதிரேசச் செட்டியார், ந. மு.வேங்கடசாமி நாட்டார், கா. சுப்பிரமணியபிள்ளை*** போன்றவர்கள்.

பாண்டித்துரைத் தேவர் அவர்கள் அற நிலையத்துக்கு வந்திருந்த போது அடிகளார் தமிழ்ச் சங்கம் இருந்த மதுரையில் தேவர் அவர்கள் முயற்சியால் தமிழ்ச் சங்கம் நிறுவ வேண்டும் என்று கூறி ஆசியும் அருளினூர்கள். அதனுல் மதுரைத் தமிழ்ச் சங்கம் உருவாகித் தமிழ்த் தொண்டு செய்தமை தமிழுலகம் நன்கறியும்.

***தமிழவேள் உமாமகேசுரம் பிள்ளையும், பன்னீர் செல்வமும்*** அடிகள்பால் பேரன்புகொண்டவர்கள். அந்த அன்புப் பெருக்கைப் பயன்படுத்தித் தஞ்சை கருந்திட்டைக்குடியில் தமிழ்ச் சங்கம் நிறுவித் தொண்டுசெய்ய வற்புறுத்தினூர்கள். அவர்கள் முயற்சியால் முதலில், தமிழ்ப் பள்ளியாகத் தொடங்கிபின் பல்லாற்றானும் வளர்ந்து, தமிழ்க் கல்லூரியும் ஏற்படும் அளவுக்கு ஓங்கி வளர்ந்தது. அடிகளே தமிழ்ச் சங்க வெள்ளி விழாத் தலைமையேற்றுக் கல்லூரியையும் தொடங்கி வைத்துத் தமிழ்த் தொண்டு செய்தார்கள்.

### *பள்ளி நிறுவனங்கள்வழித் தமிழ்த்தொண்டு*

***திருப்பாதிரிப்புலியூர், அப்பமூர்த்திகள்*** கரையேறிய வரலாற்றுச் சிறப்புடைய திருத்தலமாகும். அப்பதியினை ***ஞானசம்பந்தப் பிள்ளையாரும், திருநாவுக்கரசரும்*** பாடிச் சிறப்பித் துள்ளனர் மூவர் முதலிகளால் பாடப்பெற்ற சிறப்புடைய திருக் கோயில்களுக்குத் திருப்பணிசெய்தலை சிவப்பணியாகக் கொண்ட நாட்டுக் கோட்டை நகரத்தாரில், கடிகாப்பட்டி ராமச்சந்திர, புரம் தி. சொ. குடும்பத்தினர் இத் திருப்பதிக்கு மிகச்சிறந்த திருப் பணியை மேற்கொண்டனர். வேதபாடசாலே, ஆகம பாடசாலே, தேவார பாடசாலே, பசு மடம், அன்னசத்திரம் முதலிய அறங் களையும் திருக்கோயில் திருப்பணியோடு செயல்பட அடிகளார் அந் நகரத்தார்க்கு உறுதுணையாய் இருந்தார்கள். அதுபோது,

அனைத்து அறங்களினும், ஆன்ற பெருமைதருவது கல்வி அறமே எனக்கூறி இளைஞர்கட்கு, தமிழ்க்கல்வி பயிற்றிவைக்க ஓர் அறக் கட்டளையை நிறுவச் செய்தார்கள். அது *பாடலேசர் தருமப் பாடசாலை* என்ற பெயரோடு தொடங்கப்பெற்றது. நகரத்தார் அப் பாடசாலையை அடிகளே பொறுப்பேற்றுத் தக்கமுறையில் நடத்த வேண்டும் என வேண்டிக்கொண்டனர். அடிகளும் அதனையேற்று தாமே முன்நின்று நடத்தினார்கள். இளஞ்சிறார்கள் முதல் பயில இடமளிக்கப்பட்டது. தாமே பாடஞ் சொல்லுதலும், தக்க தம் மாணவர்களைக் கொண்டே பாடஞ் சொல்லச் செய்தலும் ஆய தொண்டினை அடிகள் செய்துவந்தார்கள்.

### தொண்டின் ஆழம்

மாணவர் 300-க்கும் அதிகமாகப் பயிலத் தொடங்கின வளர்ச்சி நிலையில், சில தமிழ்மரபுகளை பள்ளியில் ஏற்பாடு செய்தார்கள். ஏழை மாணவர்க்குப் பகலில் இலவச உணவு, காலைக் கடவுள் வணக்கம், மாலைக் கடவுள் வாழ்த்து, வார வழிபாட்டு முறை, ஒழுக்கக் கல்வி, உடற்கல்வி, சமயக்கல்வி இவற்றோடு ஆங்கிலம், கணக்கு, விஞ்ஞானம். வரலாறு, நில இயல் ஆகிய உலகியற் கல்வி யும் பயிற்றுவிக்க ஏற்பாடு செய்தார்கள். அப்பள்ளியில் தொடக் கத்திற் பயின்ற பலருள் அடியேனும் ஒருவனுவேன். அடிகள் அப் பள்ளியில் தேர்ச்சி பெற்ற மாணவர்களுள் சிலரைத் தேர்ந்தெடுத்துப் பாண்டித்துரைத் தேவர் அமைத்து நடத்திய தமிழ்ச் சங்கத்து பிரவேச பண்டிதம், பாலபண்டிதம், பண்டிதமாகிய பாடத்திட்டங்களை மாணவர்க்கும் பாடஞ்சொல்லி, தேர்வுக்கு அனுப்புதல் செய்தார்கள்.

### பாடஞ் சொல்லும் முறை—தனித்தொண்டு

மாணவர்க்குப் பாடஞ்சொல்லும் முறையில் அடிகளார் தனிச் சிறப்புடைய பேராற்றல் உடையவர். அவரவர் தகுதிக்கேற்பப் பாடஞ்சொல்லுவார்கள். அவர்களிடம் இலக்கணம், இலக்கியம், புராணம், சாத்திரம், வடமொழி பயின்ற மாணவர் பலப்பலர். உயர் நிலைப்பள்ளி மாணவர், கல்லூரி மாணவர், தமிழாசிரியர்கள், வட மொழிப் பண்டிதர்கள் வரிசை வரிசையாக வந்து அவரவர்க் கேற்ற பாடங்களைக் கேட்டு மகிழ்ந்து செல்வர். துறவு நிலைபெற்ற தூயோர் ஆதலின், துறவிகள் பலர்வந்து அடிகளாருடைய மடத்தி லேயே தங்கித் தொண்டு செய்து கொண்டு பாடங்கேட்பர். அன்றி யும், வார உணவு பக்கத்து ஊர்களில் இல்லறத்தார்பால் ஏற்றுண்டு, பாடங்கேட்ட துறவிகளும் பலர். அன்றியும், இல்லறத்தாரில் பலர் அடிகளுடைய சீலம் நோன்பு செறிவு அறிவு நிலை கண்டு, அடித் தொண்டு பூண்டு பாடங்கேட்க அவாவி அவர்கட்கு ஒழிந்த நேரத் தில் வந்து பாடங்கேட்பதும் உண்டு.

அடிகளாருடைய திருவாக்கின் அருமை கருதி, தமிழரல்லாத பிறமொழியாளரும் வந்து பாடங்கேட்பதுண்டு. அடிகளார் வாழ்ந்த

காலம், சாதி சமயப்பிணக்குகள் முற்றும் நீங்காத காலம் ; ஏற்றத் தாழ்வுகள் காணும் சமுதாய நிலையுடைய காலம்; அக்காலத்தில் வேறு சமயத்தாராய, மகமதியர், கிறித்தவர் சமணர் போன்றவர்களும் வந்து பாடங் கேட்டதுண்டு, அம்மட்டோ அளவிலா மகிழ்ச்சியடைந்து அடிகளிடம் பாடங்கேட்டதால் தாங்களடைந்த தமிழறிவையும், பண்பையும், சமரச நிலையையும் வியந்து பாராட்டினதுண்டு.

***ஒரு நிகழ்ச்சி***

*1919-ல் வெளிநாட்டிலிருந்தும் உள் நாட்டில் வேறு வேறு இடங்களிலிருந்தும் 8 துறவிகள், அடிகள்பால் சிவஞானபோதம் பாடங் கேட்கப் புலிசைக்கு வந்து கூடினர். அவ்வந்தண்மைபூண்ட அறவாணர்கட்கு அன்ன சத்திரத்தில் பகலிரவு உணவும் பிற நலன்களும் அடிகளே அமைத்துக் கொடுத்துப் பாடம் சொன்னார்கள். காலை 7மணியளவில் தொடங்கி 9 மணியளவில் பாடம் நிறைவு பெறும். இதற்கு* முன்னே பயிலும் மாணவர் காலைக் கடன் முடித்து, துறவிகளானமையில் கடவுள் வழிபாடு முதலியன முடித்துப் படிக்க வருவார்கள். ஆனால் அடிகளார், தம்கடன் அனைத்தையும்,முடித்துக்கொள்வதோடு 6-30 மணிக்கே. திருவோலக்கத்தில் எழுந்தருளியிருந்து அன்று சொல்லவேண்டிய பகுதியை முன்னே படித்துக்கொண்டும் சிந்தித்துக்கொண்டும் இருப்பார்கள். ஒரு சமயம் **சிங்கப்பூரிலிருந்து** ஒருவர் படிக்க வந்திருந்தார் அவர்கள் ஐம்பது வயது நிரம்பியவர்கள். அடியேனிடம் கனிந்த கருணையுள்ளம் உடையவர்கள். நான் மிகமிக இளையன். எனினும், அறிந்த அறவாளர்களோடு சிவஞானபோதம் பயின்றுவருகின்றேன். ஞானியாரடிகள், அத்துறவிகளை மிகமிக உயர்ந்த நிலையில் நடத்துவார்கள். சொல்லும் பாடத்தில் ஒரு வினாவும் எழுப்பமாட்டார்கள். அவர்களிற் பலருக்கு விளங்காத பகுதிகளை, என்னை வினாவுமுகத்தால் மறுமுறையும் கூறி, அவர்கட்கு விளங்கவைப்பார்கள். அத்தனை மரியாதை உடையவர்கள்.

அன்று, சிங்கப்பூர் அடிகள் காலைக்கடன் முடித்து, சிவபூசை முதலியன மட்டும் செய்யாது, பாடங்கேட்க வந்து அமர்ந்தார்கள். தெய்வந்தொழுது, குருவணக்கம் சொல்லித்தான் பாடம் தொடங்கும். குரு வணக்கம் முடிந்ததும் அனைவர்க்கும் திருநீறு வழங்குவார்கள். அன்று, சிங்கப்பூர் அடிகள், கடன்களைமுடியாமல் வந்திருந்ததால் திருநீறு பெறத் தயங்கித் தூரத்தே நின்றார்கள். அடிகள் அடியாரை உற்று நோக்கி உடல் நலம் இல்லை போலும் என எண்ணித் தாமே அழைத்து 'அடிகளே திருநீறுதானே நம்மனோர்க்கு மருந்துமாவது ? ஆதலின் பெற்று மன நலமும் உடல் நலமும் பெறலாம் பெறுக' என ஆசி கூறி, திருநீற்றினை அடிகளார் கையில் கொடுக்காமல் தாமே அவர்தம் நெற்றியில் 'ஷண்முகா' எனத் தமக்கேயுரிய அன்புகனிந்த மந்திரத்தை ஓதிப் பூசினார்கள். சிங்கப்பூர் அடிகள் ஞானியாரடிகளின்

திருவுள்ளப்பாங்கினையும் ஆசானுய் அருட்குருவாய் இருந்து அறிவையும் அருளையும் பாலிக்கும் பான்மையினையும் நினைந்து நினைந்து உருகி அழுத வண்ணம் நாத்தழுதழுக்கக் கம்மிய குரலில் 'மன்னித்தருளல் வேண்டும்' என்று கூறித் திருவடி தொழுது எழுந்து பாடம் கேட்பதற்குரிய தமக்குரிய இடத்தில் இருந்தார்கள்.

ஞானியார் அடிகள் அன்று, பாடம்தொடங்குமுன், மாணவர்க்கு, நாட்கடன்கள் செய்யமாட்டாத நிலை ஏற்படும் போது, திருநீறு ஒன்றே சாலும். ***நாவுக்கரசர்***, காலை 5 மணியளவில் தமக்கையாரைச் சார்ந்தபோது உடல் நோயினுல் அல்லற்பட்டு வழிநடந்து வந்த அலுப்போடு அழுதுகொண்டே அம்மையாரின் திருவடியில் வீழ்ந்து வணங்கி நின்ருர்கள், அதுபோது அம்மையார் சீலமும் நோன்பும் உடையராகலின், தம்பியாராய ***தருமசேனர்க்கு*** திருவாளன் திருநீறு ஐந்தெழுத் தோதிக் கொடுத்தார்கள். உடல் பிணியும் மனக் குறையும் நீங்கித் தூயராய், அம்மையாரோடு ***திருவதிகை வீரட்டானத்தடிகள்*** திருக்கோயிலுக்குச் சென்ருர்கள் என்பது வரலாறு. ஆகையால் குறைபோக்குவதும் தூய்மை செய்வதும் திருநீறே என்று முன்னுரை கூறிச் சிங்கப்பூரடியார்க்கு உளத்தூய்மையும் உடற்றூய்மையும் அடையத் திருநீற்றின் பெருமையை ஆசாரிய மூர்த்திகளான அப்பமூர்த்திகளுடைய வரலாற்ருேடு பிணைத்துத் தன் ஆசாரிய மூர்த்தமாந் தன்மையையும் திருநீற்றின் பெருமையையும் விளக்கிஞர்கள். அந்நிகழ்ச்சி என்றும் மறக்கற்பாலதன்று. அன்று முதல் சிங்கப்பூரடிகள் ஞானியாரடிகளின் அணுக்கத் தொண்டராய்த் தலயாத்திரை செய்யும் போதும் உடன் சென்று அடிகட்குத் தொண்டு செய்யும் கடப்பாட்டினை மேற்கொண்டு ஒழுகினுர்கள். அத்தகு அருளுள்ளதோடு பாடஞ்சொல்லும் நல்லாசானுய் விளங்கினுர்கள்.

இந்தத் தமிழ் நாட்டில் அருளாளர்கள் நிறுவிய அறநிலயங்களாய மடாலங்களில் ஞானபீடம் ஏறி அருளாட்சி செலுத்திய, செலுத்தும், மடாதிபதிகளுள் ஞானியாரடிகள் போன்று தாமே பாடஞ் சொல்லியும், தாமே சொற்பொழிவாற்றியும், தாமே சபைகள் அமைத்தும், தாமே பாடசாலை நிறுவி இளைஞர்க்குத் தமிழறிவும் தமிழ்மரபும், தமிழ்ப்பற்றும் வளரச் செய்தும், வாழ்ந்த வாழ்கிற அறவாணர்களைக் காண்பது அரிது என்பதை யாவரும் உணர்வர். அங்ஙனம் தெளிந்த தமிழ் வளர்த்த செம்மல் ஞானியாரடிகள்.

***மாணவர்வழித் தொண்டு***

அடிகளாரிடத்தில், மாணவராவார் மூத்திறத்தினர். அடிகளார் தாமே அருளுள்ளத்தால் தேர்ந்தெடுக்கும் மாணவர் ஒரு பிரிவினர்; அடிகளாரிடம் பயில ஆவல் பூண்டு வந்து பயில்வோர் ஒரு திறத்தினர்; நற்பொழுது போக்காக வந்து சேர்ந்து சிறிதுசிறிதாக ஆர்வம் மிகுந்து தக்க மாணவராயினுர் ஒரு பிரிவினர்.

தாமே தேர்ந்தெடுக்கும் மாணவரை இளமை, ஆர்வம், அடக்கம், தெய்வசிந்தனை, ஆணை வழி நிற்றல், அருந்தொண்டாற்றல், பின் சமுதாயத்துக்கும், சமயத்துக்கும், மொழிக்கும் பயன்படும் தகுதி யுடைமை, நற்குடிப்பிறப்பு இவற்றையெல்லாம் உள்ளத்தடக்கிப் பலகால் சோதனை செய்தே தேர்ந்தெடுப்பார்கள். ஏழை செல்வர் என்ற வேற்றுமையோ, உயர்வு தாழ்வு என்ற உணர்வோ அடிகட்கு அறவே இல்லை. ஏழை மாணவர்க்கு, உணவு உடை முதலியன வழங்கும் அறச்செயலை அடிகள் ஐம்பது ஆண்டு கட்கு முன்பே செய்துகாட்டினார்கள். வளர்ச்சிக்குரிய தகுதி ஒன்றே அடிகளாரின் நோக்காயிருந்தது. அத்துறையில் அவர்கள் செய்த பணி அரசும் கூடச் செய்து பயனளிப்பது பின்பே தொடங்கியது.

அடிகள் மாணவர்களுடைய ஒழுக்கத்தில் குறிக்கோளோடு நோக்கம் செலுத்தி வந்தார்கள். அடங்காமை, ஒழுக்கக்கேடு, தெய்வ நிந்தனை இவற்றை அறவே மாணவர்களிடம் களைந்தார்கள். புறங்கூறல் எனும் பொய்யொழுக்கம் மாணவரிடம் தோன்றா வண்ணம் பாதுகாத்தார்கள். அடிகளாரிடம் பயின்ற மாணவர் குழாத்துள் தமிழ் நாட்டில் தலைசிறந்து விளங்கிய மாணவருட் சிலர் என்றும் நல்லொழுக்கமும் நல்லறிவும் நற்பண்பும் உடையராய் விளங்கியமை யாவரும் அறிவர். அவருட் சிலரைக் குறிப் பிடுவேன்.

துறவிகளுள் சிங்கப்பூர் அடிகள்
நீலமேக அடிகள் (காஞ்சீபுரம்)
ஷண்முகாநந்த அடிகள் (கரூர்)
இராமசாமி அடிகள் (காசி)
தக்ஷிணாமூர்த்தி அடிகள் (திருவிடைமருதூர்).

இல்லறத்தாருள் பேராசிரியர், மு. நடேச முதலியார் (திருச்சி)
தமிழ்ப் பெரியார், சச்சிதாநந்தம் பிள்ளை
புலவர் வடிவேல் முதலியார்
புலவர் துரைசாமி ஐயர்
M. உருத்திரசாமி ஐயர்.

இளைஞர்களுள் முதுபெரும்புலவர், அ. நடேச முதலியார்
புலவர் ந. ஆறுமுக முதலியார்
புலவர் மு. ராஜாக்கண்ணனார்.

இவர்களைத் தமிழ் உலகம் நன்கறியும். இங்ஙனமாக அடிகள் அற நிலயத்தில் இருந்துகொண்டே தமிழ் நாடு முழுதும் தம்மையே நோக்கத் தமிழ்த் தொண்டுகளைப் பள்ளி வாயிலாகவும், பாடம் சொல்லியும் வளர்த்தார்கள்.

*விரிவுரைத் தொண்டு*

அடிகளாரின் விரிவுரையாம் தமிழ்ச் சொற்பொழிவின் திறத்தினை வியவாதார், போற்ருதார், புகழாதார், அக்காலத்து யாரும் இலர் என்றே கூறலாம். புறஞ்சொல்லிப் பொய்த்துயிர் வாழும் போக்கிலி களும்கூடக் கேட்டு மகிழ்ந்த, திருந்திய செய்திகள் பல. அவர் காலத்திருந்த சிறந்த பேச்சாளர் அனைவரும் அடிகளாருடைய தமிழ்ப் பேச்சின் அடிச்சுவட்டைப் பற்றியே பேசினர். தொகை வகை, விரிவு, முடிவு என்ற அமைப்பினில் தலைப்பினைப் பிரித்துக் கொண்டு, கற்ருரும் கல்லாரும், சித்திரப்பாவையின் அத்தகவு அடங் கிக் கேட்கச்செய்யும் அவர்பாங்கு எங்கும் யாரிடமும் காணுத, கடைப் பிடிக்க முடியாத ஒரு தனிச் சிறப்பாகும். அவர்களுடைய அருளு டைய இன்பப் பேச்சின் திறத்திஞலேயே தமிழ்ப் புலமை பெற்ருேர் பலர் ; பேசப்பயின்ருேர் பலர் ; படிக்க முயன்ருேர் பலப்பலர்.

இலக்கிய நுட்பம், இலக்கணத் திட்பம், சொல்லடுக்கு, சுவை யான செய்திகள், இனிய ஓசை, அன்புகனிந்த இன்சொல், எடுப்பான தோற்றம், தெய்வசிந்தனை, மொழியின் ஆழ அகல நுட்பத் திறன், பல நூல் அறிவு, பலமொழிப் பயிற்சி, சாத்திர மேற் கோள், சரித்திரச் சான்று, சிறுகதைத் துணுக்கு, நகைச்சுவை விருந்து, அனைத்துக்கும் மேலாக அசையாது, அங்க சேஷ்டை ஒன்றுமின்றி, கோபதாபங்கட்கு இடங்கொடாது, அருளுருவத் திரு மேனியோடு கேட்பார் அனைவரும் தம்மையே நோக்கச் செய்யும் தண்ணளி, இடை இடையே, தம் உபாசனு மூர்த்தியின் திருமந்திர ஒலியாகிய '*ஷண்முகா*' என்ற திருமந்திர உச்சரிப்பு, கேட்போரை அன்போடு முன்னிலைப்படுத்தும் ***மெய்யன்பர்களே !*** என்று அழைக்கும் அருட்பிணைப்பு, இத்தனையும் ஒன்று சேர்ந்த இன்ப வெள்ளமாக அடிகளார் பேச்சு இருக்கும் என்பதுதான் நினைந்த வரையிலும் கேட்ட வரையிலும் உட்கொண்ட வரையிலும் கூறத்தகும்.

மேலாக, அங்கு வந்து கேட்போர் அவரவர் தகுதிக்கேற்ற அனுபவமும் அங்கேயே கூடும்படியும் அமைந்திருக்கும். புலமைத் திறம், நூலறிவு நுண்ணறிவு பட்டறிவு (அனுபவஅறிவு) என்ற முத்திறத்தாலும் வளர வேண்டிய ஒன்று. நூலறிவு என்பது பல மொழிப்பயிற்சியும் பலகலையறிவும் பெற்று வளர்வது. இவ்வாறு வளர்ந்த புலவரைப் 'பல்கலைக்குரிசில்' என்பார் சிவஞான முனிவர். நுண்ணறிவு என்பது எம்மொழியில் எக்கலையில் அறிவு பெற்ருலும் அதனை நுணுகி ஆய்ந்து, தன்னறிவாகத் தெளிதலும், அவ்வறிவின் தெளிவால் சிறப்பெய்தலும், அவ்வறிவின் ஆற்றலால், சொற்றிறத் தால் பிறர் நெஞ்சிற் பிறழாது நிறுத்தும் பண்புடையனுதலும் ஆகிய தனிநிலை பெறுதல். இதனை வள்ளுவப் பெருந்தகை, 'நுண்மாண் நுழைபுலம்' என்று கூறிச் சிறப்பித்துள்ளமையை நாமறிவோம். அறிதலும் தெளிதலும் அனுபவத்தின் பொருட்டன்றே! ஆதலின்,

அனுபவமில்லாத அறிவும் தெளிவும் தனக்கும் பயன்படா, பிறர்க்கும் பயன்தரா. ஏன் ? உயர்ந்தது என்று அறிந்து தெளிந்த ஒன்றனைத் தானே பெற்று இன்ப நலங்காண ஒருவன் பிறர்க்கு எங்ஙனம் அதனை உண்மைப் படுத்த முடியும். முடியா தன்றே ! அதனால்தான் ஒன்றனை உண்மைப் படுத்தவேண்டும் என்று முயல்வான் ஒருவன் கடைப்பிடிக்க வேண்டிய மூன்றனை முறையே, நூலறிவு, நுண்ணறிவு, அனுபவ அறிவு இவற்றால் உண்மைப் படுத்துக என்று அளவை நூலார் கூறினர். இதனை வடமொழியில் சுருதி, யுக்தி, அனுபவம் என்பர்.

இவ்வாறு வளர ஆர்வமுடையான் ஒருவன் மேற்கொள்ள வேண்டிய கடப்பாட்டினையும் நான்கு படிகளாக நம்முன்னோர் அமைத்துள்ளனர். அவை, கேட்டல், சிந்தித்தல், தெளிதல், அதன் கண் நிற்றல் (நிட்டைகூடல்) என்பார்கள். கற்றல், கேட்டலுள் அடங்கும். அதனால்தானே, 'கற்றிலனாயினும் கேட்க' என்ற வள்ளுவம் எழுந்தது. அடிகளார் பேசும்போது கேட்போர் பல நூலைக் கற்றவராகவும் கேட்டவராகவும் செய்வர். பேசுவதைக் கேட்கும்போதே சிந்தனையைத் தூண்டி தெளிவும் பெறுவர். கேட்போரின் தகுதிக்கேற்ப அப்போதே அங்கேயே அவ்வனுபவத்தில் நிற்பர். அத்தகைய சொல்லாற்றலும், தெளிந்த சிந்தனையும், பல்கலைப் பயிற்சியும், நுண்மாண் நுழைபுலமும் உடையராய், அடிகளார் மேற்கொண்ட துறவு நிலைக்கேற்ற அருட்பாங்கும், கேட்போர் அனை வரும் பயன்துய்க்க வேண்டும் என்ற பிறர் நலம் பேணும் பெற்றியும் அவர்கள் பேச்சுமுழுவதும் ததும்பிப் பொங்கிப் பூரணமாய் வழிந்தோடினதை அள்ளி அள்ளி உண்டு களித்து உளம்மகிழ்ந்து தம்மை மறந்து தருக்கி நின்றோர் பலப்பலர். அடிகளாரின் சொற்பெருக்கினைக் கேட்டு மகிழ்ந்தும் வியந்தும் பயன்துய்த்தும் பாராட்டிய பெரிய பேச்சாளர்கள் பலப்பலர்.

தமிழ் நாடு முழுதும் பேச்சாலும், எழுத்தாலும் கவர்ந்து, பாராட்டவும் போற்றவும் பெற்றுத் தமிழ்த் தென்றலைத் தந்து தமிழமைதியே உருவாய் வாழ்ந்த திரு.வி.க. என்றே அழைக்கப் பெறும் பெரியார் அவர்களே அடிகளுடைய பேச்சிலும் அறிவிலும் தொண்டிலும் ஈடுபட்டுப் போற்றிப் பணிந்தனர் என்றால் என்னென்பது? திரு.வி.க. அவர்கள் அடிகளின் பேச்சின் சிறப்பினைப் பலபடப் புகழ்ந்தும் பாராட்டியும் வியந்தும் கூறிய, எழுதிய உரை களில் சில இன்றும் அடிகளை நம்முன்னே நிறுத்தி இன்பத்தமிழ்த் தொண்டின் உருவாகக் காட்டும். அடிகளைப்பற்றித் திரு.வி.க. அவர்களின் நோக்கு :

"அடிகளின் ஆசி பெற்றவருட் சிறியேனும் ஒருவன் முருகன் சேவடி வருடி உருகும் ஈர நெஞ்சும், அவன் புகழ்பேசிஇனிக்கும் நன்னாவும், தண்மை பொழியும் செவ்விய நோக்கும், வெண்ணீறு

துதையும் நெற்றியும், மாணிக்கக்குழை பிறங்குஞ் செவியும், பொன்னொளிரும் மணிமார்பும், கருமை கதிர்விரிக்கும் திருமேனியும், 'ஷண்முகா, ஷண்முகா' என்று நீறளிக்கும் நீண்ட கையும் கொண்ட அடிகளார் திருவோலக்கப் பொலிவு என்னுள்ளத்தில் ஓவியம் எனப் பொலிந்து நிற்கிறது. அஃது எவர் உள்ளத்தையும் கவரும் எவர்க்கும் எளிதில் இன்பூட்டும்.........

"ஞானியார் சுவாமிகள் மாணவர்க்குப் பாடஞ் சொல்லும் போதும் சொற்பொழிவு நிகழ்த்தும்போதும் தொல்காப்பியனாராகவும். நக்கீரராகவும் திருவள்ளுவராகவும், இளங்கோ அடிகளாகவும், கச்சியப்பராகவும், கம்பராகவும், சேக்கிழாராகவும், வியாசராகவும், நீலகண்டராகவும், சிவஞான முனிவராகவும், பிறராகவும் முறைமுறையே விளங்கி, இலக்கிய இலக்கண சாத்திர நுட்பங்களை வெளியிடுவதைக் கேட்டுக்கேட்டுப் புலவர் ஆனார் பலர். பழம்புலவர் பலரும் ஞானியார் ஒருவரிடம் விளங்குதல் வியப்பன்றோ ?

"பத்தொன்பதாம் நூற்றாண்டில் நாவன்மையிற் சிறந்தவர் இருவர் என்று சொல்லப்பட்டனர். அவர் கிளாட்ஸ்டனும் சுரேந்திரநாதரும் ஆவர். அவ்விருவர்தம் நாவன்மை ஞானியார் நாவன்மையைக் கண்டதில்லை; கேட்டதில்லை ; கண்டிருப்பின் கேட்டிருப்பின் வணக்கஞ்செய்திருக்கும்."

அடிகளாரின் பேச்சுக்கு ஓர் உருவகச் சிறப்பு, "திருப்பாதிரிப் புலியூரில் வீற்றிருந்து அடியவர்க்கருள்புரியும் கோவலடிகள் கருமை பூத்த ஒரு பொறுமை மலை. அம்மலையின் உச்சியில் (மூளையில்) கலைமேகங்கள் பொழிந்த அறிவு மழை நீர் தேங்கித் தேங்கிப் புரண்டு புரண்டு திரண்டு பன்முகங் கொண்டெழுந்து முட்டி முடுகி வாயின் வழியே முழங்கி விரைந்து இடையீடில்லாச் சொற்பொழிவு அருவியாக இழிந்து பலதிறச் சுவை நுட்பப் பொருள்கள் மிதந்து சுழல, அன்பு வெள்ளப் பெருக்காய்ப் பரவிப் பரந்து அருள் அலை கொழித்துக் கொழித்து ஓடும். அருவி நீர் பருகப் போந்த புலி, கரடி, யானை, மான், பசு முதலியன, அருள் முழக்கில் எழும் இன்னொலி கேட்டு அதில் ஈடுபட்டுத் தத்தம் பகைமை மறந்து நிற்கும். கரை நீராடுவோர் வெள்ளத்தில் உறும் மின் விசையால் பிணி நீங்கப் பெறுவர்."

ஆய்வுத் துறையில் அருந்தொண்டாற்றிய பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையின் மதிப்பீட்டில் ஒருபகுதி :

"நாம் ஞானியார் சுவாமிகளிடம் காணும் சிறப்பியலாவது அவர்களுடைய பதிஞானமும் பக்தியுமாகும். 'தெய்வமொடு நிறையுந் திருக்கோயில்' என்று ஆசிரியர் சுந்தரம் பிள்ளையவர்கள்

> கூறுகின்றார்கள். தெய்வத்தொடு உடனுறையும் தெய்வமெனச் சுவாமிகளைக் கூறினால் அது மிகவும் பொருத்த முடையதாகவே தோன்றும். சாஸ்திர ஆராய்ச்சி, சாஸ்திர உபதேசம், சிவபூசை முதலிய சிறந்த செய்கைகளின் மயமாகவே அவர்களுடைய வாழ்க்கை இருந்து வருகிறது..............இறுதியாக நாமறிய வேண்டுவது உலகிலுள்ள மக்களுக்குச் சமயத் தொண்டு புரிவதே உண்மையான பக்தி என்று சுவாமிகள் கொண்டுள்ளமை. இச்சமயத் தொண்டுக்குப் பயன்படும் படியாகவே தமது சமய சாத்திர ஞானத்தையும் அறிவாற்றலையும் பக்குவஞ் செய்து சுவாமிகள் வைத்திருக்கிறார்கள். இத் தொண்டு முக்கியமாகப் பிரசங்கரூபமாகத் திகழ்கின்றது. இவ்வுயர்ந்த தொண்டிலே சுவாமிகள் ஈடுபட்டிருக்கும்போது யாதொரு விதமான உபாதியும் எவ்வகையினும் அவர்களை அணுக இடம் கொடுப்பதில்லை. அவர்களது பொன்மொழிகளைக் கேட்கும் பேறு பெற்றவர்கள் அறிவுநிரம்பிய தத்துவ ஞானியார் ஆவர்கள் என்பதில் தடையில்லை. நமது நாட்டில் சுவாமிகளைப் போன்ற பெரியோர்கள் சிலராவது இருப்பது பாலைவனத்திற்குள் பசும் புல்லின் திடர் காணுவது போல்வதாகும்."

இப்படியே அவர்கள் காலத்து உடன் வாழ்ந்த அறிஞர் பெருமக்களும், பிறரும் போற்றிப் பணிந்த நிலையினை எடுத்துக்காட்டின் பெருகும் என்பதற்காக இரண்டொன்று நினைவு படுத்தினேன்.

### முடிவுரை

இந் நிலையில் வாழ்ந்த தெய்வத் தன்மை நிறைந்த அடிகளார் தமிழ்த்தொண்டு, பல செல்வர்களையும், பல அறிஞர்களையும், பல இளைஞர்களையும், ஈர்த்துத் தமிழ்த் தொண்டில் ஈடுபடச் செய்தது. பல கழகங்களும், பள்ளிகளும், தோன்றின. அவர்கள் ஒருபல்கலைக் கழகப் பணியினைத் தாம் ஒருவராகவே நின்று பாடத்திட்டம் வகுத்துப் பயிலச் செய்து தகுதியும் உடையவராக்கிப் பயின்ற மாணவர்க்கும் அறிஞர்க்கும், அவர்களே முன்னின்று, தம் சொல்லாலேயே அலுவல்களும் வாங்கித்தந்து, வாழ்வை வளம்பெறவும் செய்தார்கள். அந்நிலையில் இஞ்ஞான்று அறநிலையத் தலைவர்களாய் வாழ்வோர் ஒரு சிறிது முயன்றனரேனும் நாடும் மொழியும், சமுதாயமும் ஒழுக்கத்தாலும், அறிவாலும், கட்டுப்பாட்டாலும், அன்புப்பணிவாலும், பண்பாலும் வளரும் என்பதும் உறுதி, அடிகளாரின் தமிழ்த்தொண்டு இச் செந்தமிழ் நாட்டுச் செல்வச்சிறார்கட்கும் பிறர்க்கும் பயன்படத் திருவருள் சுரப்பதாக.

# 2. சமயத் தொண்டு

***தெய்வக் கொள்கையும் தேறும் வழியும்***

அடிகளாரின் சமயத்தொண்டினைக் கூறுமுன் தமிழர் சமுதாயத்தின் சமய நிலைபற்றிச் சிறிது சிந்திக்கத் தகும். சமயம் என்பது தெய்வக்கொள்கை. தமிழ் நாட்டுத் தெய்வக் கொள்கையைப் பற்றிய ஆய்வுகள் நிகழ்ந்த வண்ணம் இருக்கிறது. எங்ஙனமாயினும், பண்டைத் தமிழ் நூல்களே, தமிழர்சமயம், நாகரிகம், ஒழுகலாறு, பழக்க வழக்கம், அரசியல் இவற்றைத் தெளிவு செய்வன. இது காறும் பெற்ற பெருநூல்களுள் தொல்காப்பியம் என்னும் இலக்கண இலக்கியமும், சங்கத் தமிழ்நூல்களும் பண்டைத்தமிழரின் தெய்வக் கொள்கையை ஒருவாறு புலப்படுத்துவன. அவற்றுள் மக்கள் வாழ்வியலை விளக்க வந்த தொல்காப்பியம், முன்னதாக, அவர்கள் பேசும் மொழியாந்தமிழ் மொழியின் இயல்பினை விளக்கி அம் மொழிபயிலும் மக்கள் வாழ்வியலைப் பொருளதிகாரத்தில் விளக்குகிறது. தமிழ் நாட்டுக்கு ஒரு தனிச்சிறப்பு, மொழித் தொடர்பால், நாட்டுக்குப் பெயர் ஏற்பட்டமையாகும். பிற நாடுகளில் வழங்கும் மொழிகளிற் பல, நாட்டுப் பெயரால் மொழிப்பெயர் பெற்றுள்ளமையை அறியலாம். ஆனல் நம் நாட்டுக்கு மாத்திரம், மொழியால் நாடுபெயர் பெற்று விளங்குகிறது. இஃது இப்போது ஏற்பட்ட அரசியல் சூழ்நிலையால் வந்ததன்று. பண்டைக்காலத்திலேயே,

‘ வடவேங்கடம் தென்குமரி யாயிடைத்
தமிழ் கூறும் நல்லுலகத்து, வழக்கும் செய்யுளும்
ஒப்ப நாடிப் புலந்தொகுத்தோன் ’

என்று தொல்காப்பியருக்கு பாயிரம் கூறின பனம்பாரனரே குறிப்பிடுகிருர்.

‘செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலம்’ என்பதும் நாமறிந்த ஒன்றுதான். மற்று, மொழித்தொடர்பால் நிலம் பெயர்பெற்று, அந்நிலத்தில் வாழும் மக்களும் அம்மொழித்தொடர்பாலேயே பெயர் பெற்றனர். தமிழர் என்பார், தமிழ் பயிலும் நாட்டில் பண்டைக்

காலத்திருந்தே வாழும் மக்கள் என்பதாகும். இவ்வாறு சிறப்புக்கூறுவது எற்றுக்கெனின் நம்முன்னோர் மக்கள் பேசிய மொழிக்கே ஏற்றம் கொடுத்து வழிவழிச் சிறந்தனர் என்பதனை நினைவூட்டுதற்காம். ஆகையால், மொழிவழிச்சிறந்த சமுதாயமாய தமிழர்களின் தெய்வக்கொள்கையை, சமயத்தை அத்தமிழ் நூல்கள் கொண்டே தெளிய வேண்டும். பிறமொழி கொண்டு தமிழர் சமயத்தையோ பிற நாகரிக ஒழுகலாறுகளையோ காட்டுவது, தமிழர் சமயமும் ஆகாது, அவர்கள் வரலாறும் ஆகாது என்பதனைத் தெளிவாக அறிந்துகொளல் வேண்டும். மற்றும் பிற்காலத்துப் பிறமொழித் தொடர்பும், பிற நாகரிகச் சமயத்தொடர்பும் ஏற்பட்ட ஞான்று, கலப்பால் பலப்பல மாறுதல்களும், சமய வேறுபாடுகளும் பழக்க வழக்கங்களும் இயல்பாகவே நுழைந்தன. ஏற்று அவையே நம் நாகரிகமாவும் நம் சமயக் கொள்கையாகவும் நம் பழக்க வழக்கமாகவும் வந்து விட்டன. பின்னர் வரலாற்று ஆசிரியர்கள், பிற மொழிவாணர் கண்டதையும் கேட்டதையும், எழுதி வைத்தனர். அதனையே ஆய்வுக்குரியனவாக் கொண்டு பிற்காலத்தார் பிறமொழித் தொடர்பினலும் இதுகாலை காணப்படும் பழக்க வழக்கங்களால், பிற்காலத்தெழுந்த நூல் ஆய்வினலும், தமிழர் கொள்கை முதலாயினவற்றை வடித்துக் கூறுவார் ஆயினர். ஆனல், பண்டைத்தமிழர்தம் தெய்வக்கொள்கை வழிபாடு முதலிய உண்மை நிலையைப் பண்டைத் தமிழ்நூல் கொண்டே தெளிய வேண்டும் ஆகையால், தமிழ் நாட்டுத்தமிழர் பழங்குடியிற் றேன்றிய அடிகளாரின் தெய்வக் கொள்கை நம்மனேர்க்கு ஓர் வழிகாட்டியாய் அமைவது என்பதனை ஈண்டுக் குறிப்பிடவே இம்முன்னுரையிற் சில கிளந்தேன்.

### சேயோன் வழிபாடு

தமிழ் மக்கள் மலை, காடு, வயல் கடற்கரை மக்கள் வாழிடமாகக் கொண்டு நானிலம் எனப் பெயர் கொடுத்து வழங்கினர். அவர்களது வாழ்விடத்துக்கேற்பவே ஒழுகலாறும், வழிபாடும் வளர்ந்து வந்தன. நானிலத்தில் முன்னதாக முதன்மையாக உள்ளது மலை நிலம். மலைக்குக் குறிஞ்சி என்றும்பெயர். குறிஞ்சி என்பது, மலை நிலத்துக்கும், மலைவாழ் மக்களது ஒழுகலாற்றுக்கும் ஒன்றிய பெயராம். அவர்களது வழிபாட்டுத்தெய்வத்தைப் பிணைத்தே நிலத்தையும் குறிப்பிடுகிறர் தொல்காப்பியர்.

'சேயோன் மேய மைவரை உலகம்.'

இங்கு ஓர் அழகினை அறியலாம், உலகம் என்பது தமிழில், நிலத்தையும், நிலத்து வாழ் மக்களையும், அம்மக்களிற் சிறந்தோரையும் குறிக்கும் சொல்லாகும்.

'முதற்றே உலகு'
'உலகத்தோடு ஒட்ட ஒழுகல்'
'எவ்வது உறைவது உலகம்'

என்பன நிலம், மக்கள், உயர்ந்தோர் என்ற பொருளில் அமைந்து விளங்கிச் சிறப்பிப்பதைத் திருக்குறளிற் கண்டு தெளியலாம்.

'உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்'
'உலகம் யாவையும் தாமுள ஆக்கலும்'

என்ற சேக்கிழார், கம்பர் வாக்குகளும், 'உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு பலர் புகழ் ஞயிறு' என்ற நக்கீரர் நன் மொழியும் இதனை வலியுறுத்துகின்றன. இங்ஙனம் தொல்காப் பியர் மலைவாழ் மக்கள் சேயோனை வழிபடும் முறையினைத் தொடர்புபடுத்திக் கூறினர்.

தமிழர்தம் வாழ்வுத் தொடக்கம் மலையும், சேயோன் வழி பாடும் உடையதாய்த் தொடர்ந்து விளங்கியது. உலகியலில் மக்கள் வாழ்வில் காணப்படும், காதலும் வீரமும் ஆகிய இரண்டும் தமிழ் நூல்களுள் அகம் புறம் எனக் காட்டப்படும். அதூஉம், நானில மக்கட்கும் தனித்தனியே பிரிந்து அவர்தம் வாழ்வுக் கேற்ப அமைந்துள்ளன. அப்படி அமைந்தபோது, குறிஞ்சி நிலமக்களாய மலைமக்கட்குப் புணர்ச்சி இன்பமாம் அக வாழ்வும், நிரை கவர்தலாம். வெட்சிப்போர் வீரமும் பேசப்படும். இவ்விரண்டற்கும் பேசப்படும் அகத்துறை புறத்துறை இயல்புகளைச் சங்கத் தமிழ் நூல்களிற் பரக்கக் காண்கிறோம், காந்தளும், வெட்சியும், கடம்பும், மராவும் மலைநிலப் பூக்கள்.

இவற்றையே, சேயோனை வழிபடும் மக்கள் அவனுக்குத் தூவி வழிபட்டார்கள் என்றறிகிறோம்.

'யாஅம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்

என்பது பரிபாடல் (5 : 78 — 81).

இதன்பால் சேயோனை வழிபடுவோர் விருப்பம் இவை எனத் தெளிவு செய்கிறார் பண்டைத் தமிழறிஞர் பெருமான்.

சேயோனை, அழகிய தமிழ்ச் சொல்லால் அழைத்தனர். அச் சொல்லின் அருமை பெருமைகளை உணர்ந்து உருகிஉருகி உளமகிழ்ந்து குளிர்ந்து பேசுகிறார் நக்கீரர் என்னும் நல்லிசைப் புலவர்.

'அரும் பெறல் மரபின் பெரும்பெயர் முருக.'

தமிழர் வழிவழி வழிபடும் தெய்வத்தின் திருப் பெயர் என்பதனை மரபின் பெரும்பெயர் என்றும், அப்பெயர் தமிழில்

பெறற்கரும் பேருய்ப் பெற்ற சொல் என்பதனை அரும்பெறற் பெயர் என்றும் சுட்டுகின்றார். அப்பெயர் முருகன் என்பதும் அவர்தம் முடிவு.

மக்களின் துன்ப விலக்கும், இன்பப்பேறும் அச் சேயோனும் முருகன் அளிக்கிறான் என்பது தமிழர்தம் கொள்கை. மக்கள் வாழ்வில் தலைசிறந்த உயர்வினை அவனே அளிக்கிறான் என்பது தமிழர்தம் முடிவு.

'முருகுறழப் பகைத்தலைச் சென்று'

என்ற சங்கச் சான்றோர் வாக்கு வீரத்துக்கும் பகை நீக்கற்கும் அம்முருகனே உவமையாகிறான் என்கிறார் அவ் வறிஞர்.

'முருகொத் தீயே முன்னியது முடித்தலின்'

என்ற சங்கச் செய்யுள், வேண்டுவார் வேண்டுவதை நல்கும் நல்லோன் முருகன் என்று ஓர் அரசனுக்கு உவமை கூறுகிறது.

'இருள்நிற முந்நீர் வளைஇய உலகத்து
ஒருநீ யாகித் தோன்ற விழுமிய
பெறல் அரும் பரிசில் நல்குமதி,'

என்று முருகன் பெறலரும் பரிசில் நல்குவான் என்கிறார் நக்கீரர் திருமுருகாற்றுப்படையில். எனவே தெளிந்த சிந்தையுடைய நம் தமிழர் பண்டை நாளில் குறிக்கோளோடு முருகனையே வாழ்வு வளம் பெறவும், வாழ்வின் குறிக்கோள் நிறைவுபெறவும் போற்றி வழிபட்டு வந்தனர் என்பதை இதுகாறும் கூறிய சில செய்தி களால் அறியலாம். அத்தகு சிறப்புமிக்க தமிழ்க்குடியிற் றோன்றிய நம்மடிகளாரும், முருகனையே வழிபடு கடவுளாகவும், முருகன் வழிபாடே தம் சமயக் கோட்பாடாகவும் கொண்டாழுகினார்கள். அதனோடு பிறந்த வீர சைவ மரபிற்கேற்பவும், ஏற்றுக் கொண்ட அறநிலையத் தலைமைப் பொறுப்பிற் கேற்பவும், அங்க லிங்கம் அணிந்த திருக்கோலத்தோடும் அதற்குரிய ஆகம விதிகள் அனைத்தையும் அறிந்து அனுட்டிக்கும் மரபோடு ஆசாரியனாய்த் தீக்ஷை செய்து சிவபூசை எழுந்தருளச் செய்யும் சிறப்பியல்போடும் விளங்கினார்கள்.

**அடிகளாரும் சமய ஈடுபாடும்**

அடிகளாரின் நல் வாழ்வு ஒரு தனிநிலை பெற்றது. அடிக ளார், மக்கள் வாழ்வில் தோன்றினராயினும். குழந்தைப் பருவத் திருந்து பிறர் போல், கல்விபயின்று, இளமைப்பருவத்து உண்பன உண்டு உடுப்பன உடுத்துத் துய்ப்பன துய்த்து, நல் லறமாம் இல்லறவாழ்வின் இன்பந்துய்த்து, உலக நிலையாமை

செல்வ நிலையாமை யாக்கை நிலையாமை யுணர்ந்து ஒழுக்கத்து நீத்தலாம் துறவம் பூண்ட தூய வாழ்விற்கு வந்தவர் அல்லர். ஆனல், அவர்தம் பிறப்பில் பண்டைத்தவப்பயன் கூட்டுவித்த ஊழ் முறைப்படி குழவிப் பருவத்தே தவமுனிவர் தண்ணளி யால் வளர்ந்து, இளமைப் பருவத்தே ஐம்புல வேடரின் அயராது, பொறி வாயில் ஐந்தவித்த பொய்தீர் ஒழுக்க நெறிநிற்கும் துறவறம் பூண்டதோடு, அறநிலையத் தலைமைப் பொறுப்பும் ஏற்று நடத்தும் கடப்பாடும் மேற்கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டது. நம் தமிழ் நாட்டுச் சமய அற நிலையங்கள் இரண்டு கடமைகளை நிறைவேற்றும் கடமையுடையன. ஒன்று துறவுநிலை பூண்டு நல் லொழுக்க முடையராய் நல்லறிவில் நாளுந் தலைப்பட்டு, அறனும் அன்பும் அருளும் பண்பும் அணிகலனய்ப் பூண்டு, அனைத்து யிரையும் ஒன்றெனக் கருதும் அறவாணராய் வாழ்வது. மற்றொன்று, 'நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற முதுசொற்படி, மக்கள் அனைவரையும் அருள்நோக்கோடு இம்மை மறுமை இன்பக் குறிக்கோளை எடுத்துக்கூறத் தன்னடிப்படுத்து நல்வாழ்வளிப்பது. இவ்விருநிலையும் பெற்றோரே ஆசாரியர், சமயாசாரியர், சமயத் தலைவர் எனப்படுவர். அங்ஙனம் அறந்தலைப்பட்டுத் தண்ணளி வழங்கற்கே, மடங்கட்கு ஆயிரம் ஆயிரம் பொருளுதவி செய்து அறக்கட்டளைகளை நிறுவி, நம் முன்னேர் அறநிலையங்களை வளர்த் தனர். அறங்களை, அந் நிலையத் தலைவர்களிடம் ஓம்பிப் பாது காக்க ஒப்படைத்தனர்.

இம் முறைப்பாட்டினை நன்குணர்ந்த சான்றோராம் நம் அடிகள், சமயத் தொண்டை எங்ஙனம் செய்வது எனப் பல கால் எண்ணி எண்ணி அதன்பால் ஈடுபட்டனர்.

சமய நெறி இருபிரிவினது. ஒருவன் ஒரு சமயத்திற் பிறந் தால் அச்சமயக் கொள்கையினை முற்றும் உணர்ந்து, முடிந்த வரையில் ஒழுகலாற்றில் நிற்பது, இஃதொன்று. மற்றொன்று, சமயத் தின் உண்மைகளைப் பிறரும் அறிந்து உய்திபெற எடுத்துரைப்பது சமய நிறுவனங்களில் தலைமை யேற்று நடத்தும் தலைவர்கள் தாங்கள் மேற்கொண்ட சமய நெறியில் தவறாது ஒழுகவும், தங்கள் பணியாம் சமயப் பிரசாரத்தைச் செய்யவும் கடமைப் பட்டுள்ளனர். அடிகளார், தம் பொறுப்புணர்ந்து சமய ஒழுக் கத்தில் தலைநின்று, கல்லாடையணிந்த துறவுகோலத் தூய்மை யோடு, நீறுதாங்கிய திருநுதலோடு, கண்டிகை யணிந்து, வீரசைவ மரபின்படி சிவலிங்க தாரணராய், இன்ப எளிய நோக்கு, அன்பு கெழுமிய இன்சொல்லும், அறம் வளர்க்கும் நெஞ்சும், ஆன்மா அனைத்துக்கும் இரங்கும் தன்னளியும் உடை யராய்த் தன்பால் வருவார் யாவராயினும், வேறுபாடு கருதாது அவரவர் வேண்டிய வேண்டியாங்கு எய்தத் தண்ணருள் சுரந்து வாழ்ந்தார்கள்.

'வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்
ஈண்டு முயலப் படும்'

என்ற அறமொழிப்படி அடிகள் சமயப்பணிகளைத் தவமாகவே மேற்கொண்டனர். அடிகளார் மேற்கொண்ட சமயத்தொண்டு நான்கு பிரிவினது:

1. சபை அமைத்தல்.
2. நாடு முழுதுஞ் சென்று ஆன்ம வளர்ச்சிக்குத் துணை புரிதல்.
3. தொண்டர்களை உருவாக்குதல்.
4. வழிபாடு, ஒழுக்கம், திருக்கோயிற்பணி, இவற்றைச் சமுதாயத்தோடு ஒன்றிப் பயனுடையதாக்கல்.

'ஆட்பாலவர்க்கு அருளும் வண்ணமும் ஆதிமாண்பும்'
கேட்பான் புகில் அளவில்லை கிளத்தல் வேண்டா'

என்ற திருவாக்கிற் கேற்ப. அடிகள் செய்த ஆன்மிகத் திருத் தொண்டாகிய சமயத் தொண்டினை இனைத்தென அளவிட்டுக் கூறிவிடமுடியாது. எனினும், எண்ணலும், எழுதலும் பேசலும் அளவுக்குட்பட்டது தானே. குறைவிலா நிறைவுடைய அடிக ளாரின் தொண்டினை ஏற்றபெற்றியாக எடுத்தியம்புவது தவருகாது.

***சமயத் தொண்டின் மையநிலை***

மக்கள் வளர்ச்சிமூன்று நிலை பெறுவது: ஒன்று உடல் வளர்ச்சி; இரண்டாவது உள்ள வளர்ச்சி; மூன்ருவது ஆன்ம வளர்ச்சி. இம் மூன்று வளர்ச்சியும் இயல்பாகவே பெற்றபோதுதான் மனிதன் முழு நிலை பெறுகிருன். உடல் வளர்ச்சி உணவு உடை இடம் ஒழுக்கம், இவற்ருல் வளர்வது. உள்ள வளர்ச்சி, கல்வி, கேள்வி, சார்பு இவற்ருல் பெறும் அறிவினுலும் பண்பினுலும் பெறுவது. ஆன்ம வளர்ச்சி, அன்பு அடக்கம், பிறர்நலம் பேணல், எவ்வுயிரும் ஈசன் பெருங்கோயில் என நினைந்தொழுகும் இரக்கம், பிறப்பின் அருமை தெளிந்து, பிறவி துன்பமானது பிறவாமை பேரின்பம் தருவது என்றுணர்ந்து, பிறவிக்கு வித்து அவா என உணர்ந்து அவா அறுத்து, ஆன்மநேய ஒருமைப்பாட்டினுல் அனைத் துயிரையும் ஒன்றெனக் கருதும் ஒருமைப்பாட்டினுல் ஊனினை ஒருக்கி உள்ளொளிபெருக்கும் தவநிலையில் தக்காங்கு ஒழுகுதலாற் பெறுவது. அடிகளார் இம்மூன்று வளர்ச்சியும் பெற்ற பெரியார் ஆகையாலும், ஏற்றுக்கொண்ட கடமை உணர்ச்சியாலும், முன்னை யதாய தமிழ்த் தொண்டையும், பின்னையதாய சமுதாயத் தொண் டையும், சமயத் தொண்டை மையமாக வைத்துச் செயல் படுவாராயினர்.

'எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்
முத்தர் மனமிருக்கும் மோனத்தே'

என்றபடி, அடிகள் மொழித் தொண்டினைச் செய்தாலும், சமுதாயத்தோடு பின்னிப் பிணைந்து பயன்பட்டாலும் ஆன்ம நலங்கருதிய சமயத் தொண்டின்பாலதாகவே அமையும்படி நிறுத்தினார்கள்.

### *சைவ சித்தாந்த சமாஜத் தோற்றம்*

இருள் சூழ்ந்து கிடந்த இத்தமிழ் நாட்டில் மொழிவழி நின்று தமிழர் சமுதாயத்தைச் சமய நெறியிற் புகுத்துவதற்குத் தொண்டுசெய்ய ஓர் அரிய அமைப்பினை அமைத்து, முறையாகச் செயல்படவேண்டும் என்று தமிழ்நாட்டில் அதுபோது வாழ்ந்த சிலபேரறிஞர்களும் அறவாணர்களும் கருதினார்கள். தமிழுலகு செய்த தவப்பயனாய்த் தோன்றி ஆரிருளில் அல்லற்பட்டார்க்கு' இளவள ஞாயிறு ஈடும் எடுப்புமின்றிக் கடல் முகட்டிற் காட்சியளிப்பதுபோல, அடிகளார் மேற்கொண்டு செலுத்தும் தமிழ்ப் பணியும் சமயப் பணியும் அவ்வான்றோர் உள்ளத்தையீர்த்தன அவர்கள், ஒருங்குகூடி, புலிசை வாழ் முனிபுங்கவராம் அடிகளாரிடம் வந்து தம் உள்ள விருப்பத்தை உவந்து கூறினர். அடிகளார் கேட்டருளி, **ஜே எம். நல்லசாமிப் பிள்ளை, நாகை வேதாசலம் பிள்ளை** (மறைமலையடிகள்), **தூத்துக்குடி முத்தையாப் பிள்ளை, சிவகுருநாதப் பிள்ளை** போன்ற பெருமக்களை உடன் வைத்து விசுவாவசு ஆண்டு ஆனித்திங்கள் (7—7—1905) '**சைவசித்தாந்த சமாஜம்**' என்ற சமய பேரவையை மடாலயத்திலேயே தோற்றுவித்தார்கள். அந்தப் பேரவை பல்லாற்றானும் செவ்வனே வளர்ந்து சமயப்பணி செய்வதற்கு உறுதுணையாய் இருந்து 12 ஆண்டுகள் பணியாற்றினார்கள்.

### *சமயச் சொற்பொழிவுகள்*

பேரவை நாடு முழுதும் நற்பணி யாற்றும் சிறப்பினையறிந்து சமய உண்மைகள், அறிஞர்மாட்டு மாத்திர மன்றிப், பொது மக்கட்கும், நகரங்களில் மாத்திர மன்றிப், பட்டிதொட்டிகட்கும் பரவவேண்டும். பரப்ப வேண்டும் எனக்கருதி, அடிகளார் அறிஞர்களையும் அன்பர்களையும் ஒன்று கூட்டி அமைத்த பேரவையின் இடைநின்ற பெருஞ்சொற்றொடரையே அமைத்துச் '**சித்தாந்தம்**' என்ற செந்தமிழ்ச் சமயத் திங்கள் இதழினை 1928ஆம் ஆண்டில் தொடங்கத் துணை செய்தார்கள். அஃதின்றும் ஏற்றம் பெற்றியாகச் சிறப்புடன் நற்பணியாற்றுகிறது. அடிகள் தம்மாணவர்களிற் சிலரைத் தேர்ந்தெடுத்து நாடு முழுவதும் சென்று சமயப் பணிசெய்யுமாறு பணித்தார்கள். நல்லொழுக்கம், சமயப்பற்று, சமய அறிவு, பேச்சுத்திறன், சமுதாய நலன் கருதும் பண்பு, தொண்டுள்ளம், பெரிய ஊதியங் கருதாத தன்னல மறுப்பு இவையுடையாரே சமயப் பிரசாரத்துக்கு இன்றியமையாதவர்கள் என்பது அடிக

ளாரின் முடிந்த திருவுள்ளம். அங்ஙனம் தேர்ந்தெடுத்தாரிற் சிலரை நினைவு படுத்துகிறேன். *மணம்பூண்டி குமாரசாமிப் பிள்ளை, சோழவல்லி பாலசுந்தர நயினர், திருக்கோவலூர் வடிவேல் முதலியார், திருவிடை மருதூர் தக்ஷிணாமூர்த்தி அடிகள்* முதலாயினோர் நாடுமுழுதும் சென்று, சைவ சமய உண்மைகளையும், ஜீவகாருண்ய ஒழுக்கத்தையும், தமிழின் தொன்மை இனிமை இவற்றையும் அவர்கட்கே உரிய இன்னிசையோடு, அருட்பாடல்களை ஓதிச் சமுதாயத்தைப் பிணைத்துச் சமய நற்றொண்டாற்றினர். அம்மாணவர்கள் செய்த பணியால் ஈர்க்கப் பட்ட சமுதாயத்தினர் அடிகளை நோக்கி ஆர்வத்தோடு என்று காண் போம், என்று அடிகளாரின் அருள்மொழி கேட்போம் என்று ஏக்கற்றுநின்றூர்கள். ஆர்வம், 'நண்பு என்னும் நாடாச் சிறப் பீனும்' என்ற அறமொழிப்படி செல்வர்கள், அறிஞர்கள், ஆங்காங்குள்ள சமய சீலர்கள், பேரவைகள், சங்கங்கள் அடிக ளாரை அழைக்க முன்வந்தன. அடிகளார் தம் தொண்டினை நாடு முழுதும் பரப்பவேண்டும் நல்லுள்ளத்தாலும், சமயப் பேரரு ளார்கள் அருள்பெற்ற திருத்தலங்களைச் சென்று கண்டு வணங்க வேண்டும் என்ற ஆர்வத்தாலும் அவ் வழைப்புக் கிணங்கிப் புறப் படுவாராயினர்.

### *மரபும் கட்டுப்பாடும்*

அடிகள் வெளிச் செல்வதானல் சில கட்டுப்பாடுகள் உண்டு. மடாலயத் தலைவர், வீரசைவ மரபுக்கு ஆசாரியர், அவர்கள் மரபின் படி வெளியில் புறப்படுவதாயின் சிவிகையூர்ந்து செல்லவேண்டும். தாமே, தம் குருமூர்த்தியின் திருக்கோயில் வழிபாட்டுக்குச் செல்வதானலும் சிவிகையிற்ருன் செல்லவேண்டும். அடிகள் அம்மரபினை விட, விலக, மறுக்க மனமில்லாதவர்கள்; அதனைக் காக்க வேண்டும் என்ற உறுதியும் உடையவர்கள். இங்கு ஒரு நிகழ்ச்சி யினைக் குறிப்பிட வேண்டும். அடிகளின் சமயத் தொண்டினை நன்றறிந்த *மலேயா, சிங்கப்பூர், தென்னுபிரிக்கா* போன்ற வெளிநாட்டு நந்தமிழர் அடிகளை அழைத்து வணங்கி அருள்பெற வேண்டும் என்று துடித்தனர்; துணிந்தும் செயல்பட்டனர், அவர்களுள், தென்னுப்பிரிக்காவிலிருந்து வந்த *ராமசாமி நாயுடு, திரு.வி.க.*வை உடனழைத்துக்கொண்டு வந்து, அடிகளாரைக் *காஞ்சிபுரத்தில்* சந்தித்துத் தம் கருத்தினை வெளியிட்டார். அது போது, அருளுள்ளம் மறுப்பதற்கும் இடந்தராது, கட்டுப்பாட்டி னின்றும் விலகுதற்கும் உடன்படாது, சிந்தனையில் ஆழ்ந்து உறுதியாக, மரபு காத்தலில் தலைநின்று, நாயுடு அவர்கட்கு, எங்கள் நிலையை 'முதலியார் அவர்கள் அறிவார்கள்' என்று அருள்மொழி பகர்ந்து முதலியார் அவர்களையும் மேற்கொண்டு முயற்சி செய்யாது நிறுத்திவிட்டார்கள்.

### தெய்வ நினைவும் அன்பின் பெருக்கும்

திருத்தொண்டர் புராணம் கூறும் தொண்டர்கள் வரலாற்றில் உறுதியினாலேயே வெற்றி பெற்ற தொண்டுகள் இறைவனருளைக் கூட்டுவித்ததாக நாம் படிக்கிறோம். தமிழ் நூல்களில், வீரம் விளைத்த செய்திகள் பல வருகின்றன. அவற்றின் அடிப்படை உண்மையை ஆய்ந்து திருவள்ளுவர், வீரச் சிறப்பினைப் பேராண்மை என்ற சொல்லாற் குறிப்பிடுகிறார். அப்பேராண்மை யையும் நுணுகி ஆய்ந்து சிறப்பும் கூறுகிறார்.

'பேராண்மை என்ப தறுகண் ஒன்றுற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு.'

மன உறுதியே பேராண்மை, பகைவனுக்குத் தீங்குநேரும் போது அவனுக்கிரங்கி அவனைக் காத்தளித்தல் அப்பேராண் மையின் சிறந்த செயல் என்பது அறிஞர் பெருமானின் உலகியல் நோக்கிய கருத்து.

மற்று உண்மை இயலில் பேராண்மை பற்றிய செய்தி யொன்றும் கூறுகிறார்.

'பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறனொன்றோ ஆன்ற ஒழுக்கு'

என்பது. ஒழுக்கத்து நின்றார், இன்ப நலனிலும், பிறன் பொருளை விரும்பும் அவாவிலும் மனஞ் செல்லாது நிறுத்தும் உறுதியே உயிர்க்கு வலிமையூட்டும் பேராண்மை என்றும் அஃதொன்றே ஆன்ற ஒழுக்கமும் உறுதிப்பயனும் ஆகும், என்றும் வரையறை செய்கிறார்.

உலகியலிலும் உண்மையியலிலும் பேராண்மை என்பது மன உறுதியையும், ஆன்ம பலத்தையும் குறிக்கின்றது. திருவருட் பேற்றிற்கு உறுதி ஒன்றே இன்றியமையாதது. ஆகையால் மேற் கொண்ட கடமைகளை உறுதியோடு செய்ய முற்படும்போது உறுதி தளராது மரபுபிறழாது செயல் மேற்கொண்டார்கள். அடிகள் சிவிகை யூர்ந்து துறவிகளும் மாணவரும் புடைசூழ யாத்திரைக்குச் செல்லும்போது திருத்தலங்கள் தோறும், திருக் கோயில்களிலும் அவைக்களங்களிலும், பொது மன்றங்களிலும் சமயப்பணியை அன்பர்கள் அனைவர்க்கும் எடுத்துரைப்பார்கள். பன்னூறு பல்லாயிரம் மக்கள், அடிகளை வரவேற்று வழிபாடு செய்து அவர்கள் அருள் மொழியைக் காத்திருந்து கேட்கும் முறையே ஒரு தெய்வ நினைவையும், அன்பின் பெருக் கையும் வெளிப்படுத்தும். அடியேன், ***திருப்பேரூர், சாந்தலிங்க அடிகளார் திருமடத்துத் தலைவர் மாணிக்க அடிகளார்*** அமைத்து நடாத்திவந்த சத்வித்யா சன்மார்க்க சங்கத்து ஆண்டு நிறைவிற்கு, ஞானியாரடிகள் தலைமை தாங்க எழுந்தருளின போது தொண்டு செய்யும் கடப்பாட்டோடும் தமிழ் பயிலும்

கடமையோடும் உடன்செல்லும் வாய்ப்பினைப் பெற்றேன். அடிகள் *பேரூர்* செல்லும் வாய்ப்பினைக் கொண்டு, கொங்கு நாட்டு ஏழுதிருத்தலங்களையும், அந்நாட்டில் சிறந்து விளங்கும் அறநிலையங்களையும் கண்டு மகிழ்ந்து, ஆங்காங்கே சமயத் தொண்டு செய்ததையும், கொங்கு நாட்டு மக்கள் அடிகளாரிடம் காட்டிய பக்தி வெள்ளத்தையும் நேரில் அனுபவித்தவன் நான். அதுபோது கொங்கு நாட்டில் தலைசிறந்து விளங்கிய, *இரத்தின சபாபதி முதலியார்*, *இரத்தினசபாபதிக் கவுண்டர்*, C. K. *சுப்பிர மணிய முதலியார்*, C. M. *இராமச்சந்திரஞ் செட்டியார்* போன்ற பெருமக்கள் கொங்கு நாடு முழுதும் அடிகள் தொண்டு செய்ய வழிவகுத்தும் செல்லுமிடங்கட்கெல்லாம் வசதி செய்தும் மக்களைத் திரளாகக் கூட்டியும் அடிகளை முழுதும் பயன்படுத்திக் கொண்டனர்.

### *பேரறிஞர் பெற்ற பயன்*

தொண்டை நன்னாட்டில் அடிகளார் சமயத் தொண்டிற்குச் சென்றஞான்று, தொண்டை நாட்டுத் தலைநகராம் *காஞ்சியில்* தங்கித் அடிகளார் செய்த தொண்டும், வழிபாடும், வரலாற்றுச் சிறப்புடையான. *சிவசாமி தேசிகர்*, *வச்சிரவேல் முதலியார்*, *திருஞானசம்பந்த முதலியார்*, *மாணிக்க வாசக முதலியார்* (மணிமொழியார்) முதலிய அறிஞர்களும் *நமச்சிவாய முதலியார்* போன்ற அன்பர்களும் கூடி, *மெய்கண்டார் கழகம்*, *ஞானியார் கழகம்* அமைத்து, அடிகளாரிடம், சாத்திரம் புராணம் இவை களைப் பாடங் கேட்டுப் பயன் பெற்றனர். பலமுறை தொண்டை நாட்டுத் தலங்கட்கு அன்பர்கள் வேண்டும் போதெல்லாம் எழுந் தருளிச் சொற்பொழிவாலும் வழிபாட்டாலும் மக்களைச் சமய நெறியில் செலுத்திப் பணிசெய்தார்கள். சென்னையில் அடிகள் செய்த தொண்டினையும், வழிபாட்டினையும், உடனிருந்து தொண் டாற்றிய சைவ சித்தாந்த சமயஜத்தினரும், *திரு. வி. க.* போன்ற பெரியோர்களும், *சச்சிதாநந்தம் பிள்ளை* போன்ற சைவ மெய்யன் பர்களும், சைவ சித்தாந்த சமாஜச் செயலளராய்ப் பல்லாண்டு பணியாற்றிய, *பாலசுப்பிரமணிய முதலியாரும்* பிறரும், இற்றை ஞான்றும் வாழும் நல்லறிஞர்களும் நன்கறிவர். நடுநாட்டில் *திருவண்ணெய்நல்லூர்* திருவருட்டுறையிலும், *திருக்கோவ லூரிலும்*, *முதுகுன்றத்திலும்* *பெண்ணாகடத்திலும்*, அடிகள் செய்த தொண்டு, வரலாற்றுச் சிறப்புடையது. சோழ நாட்டுச் சமயத் தொண்டில், நடுமையமாக, *திருச்சிராப்பள்ளியும் தஞ்சையும்* இடம் பெற்றன. *தி. மூ. நாராயணசாமிப் பிள்ளையும் பரமசிவம் பிள்ளையும் ந. மு. வேங்கடசாமி நாட்டாரும் மு. நடேச முதலியாரும்*, அடிகள் தொண்டுக்கு உடனிருந்து சிறப்புச் செய்து, பல்லிடங்கட்கும் உடனிருந்து பயன் பெற் றனர்; மக்களையும் பயனடையச் செய்தனர்.

தஞ்சையில், த.வே. உமாமகேசுவரம் பிள்ளை, ஐயாசாமிப் பிள்ளை, பன்னீர்ச்செல்வம், கவியரசு வேங்கடாசலம் பிள்ளை, பண்டித உலகநாத பிள்ளை, கோவிந்தராஜ நாட்டார், நீ. கந்தசாமிப் பிள்ளை போன்ற பெருமக்கள் உடனிருந்து எங்கும் சிவமயமாய், சிவசிந்தை மிளிரச் செய்து அடிகளாரின் சமயத் தொண்டினைப் பரந்து பயன்படச் செய்தனர். மஞ்சக் கொல்லை ராமசாமி முதலியார் குடும்பத்தினர் அடிகள் பால் ஆராக்காதல் கொண்டு நாகைக்கு அழைத்து அங்கிருந்து பல இடங்களிலும், அடிகளின் சமயத் தொண்டினைச் சிறக்கச் செய்தனர்.

பாவலர் போற்றிய பேராளர்

அடிகள் பாண்டி நாட்டுப் பணியை மேற்கொண்டபோது தூத்துக்குடி சிவகுருநாதப் பிள்ளை, கா. சுப்பிரமணியப் பிள்ளை, நெல்லையப்ப பிள்ளை, திருவரங்கம் பிள்ளை சுப்பையா பிள்ளை இவர்களும். அம்பாசமுத்திரம் நடராஜ முதலியார் தென்காசி அருணகிரி அவர்கள் முதலியோர் அடிகட்கு உடனிருந்து சமயத் தொண்டினைச் சிறப்பித்தார்கள். மதுரையில் P.T. ராஜன் அவர்கள் குடும்பத்தினரும் சிதம்பர பாரதியும் மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவர்களும் உடனிருந்து, சமயத் தொண்டினை வளர்ச்சிசெய்தனர்.

புதுவை மாநிலம் சென்றபோது, அமைச்சராயிருந்த முத்தையா முதலியார், பழநிசாமி முதலியார், தமிழறிஞர் துரைசாமி முதலியார் முதலியோர் அடிகளாரின் தொண்டுக்கு உடனிருந்தனர். அடிகளார் தொண்டினை மனமாரப் பாராட்டி அது போது பெருங்கவிஞர்களாய் விளங்கிய, புலவரேறு வரதநஞ்சையப் பிள்ளை பண்டித கந்தசாமி பிள்ளை, கவியரசு வேங்கடாசலம் பிள்ளை, கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, நாமக்கல் கவிஞர் ராமலிங்கம் பிள்ளை, சுப்புரத்தினம் என்னும் பாவேந்தர் பாரதிதாசன் இவர்கள் அடிகள்பால் ஆரா அன்பு கொண்டு போற்றினர்.

காலச் சூழல்

அடிகள் காலம் சமுதாய விழிப்புணர்ச்சி இல்லாத காலம், திரு. வி. க. போன்ற சமரச உள்ளம் படைத்தவர்களும், மறைமலையடிகள் போன்ற சமயச்சீர்திருத்தச் செம்மல்களும், ஈ. வே. ராமசாமிப் பெரியார் போன்ற சமுதாயச் சீர்திருத்தக்காரர்களும், கா. சுப்பிரமணிய பிள்ளை, பூர்ணலிங்கம் பிள்ளை, பா, வே. மாணிக்க நாயகர் போன்ற மொழிச் சீர்திருத்தக்காரர்களும், இன்னும் பலவகை நிலையினரும் வாழ்ந்த காலம்.

திரு.வி.க. மறைமலையடிகள், ஈ. வே. ரா, இவர்கள் மடங்கள் என்றால் அருவருப்பும், வெறுப்பும் உடையவர்கள்.

ஆனால் இத்தனை வேறுபாடுடைய அத்தனைத் தொண்டர்களும் அடிகளிடத்தில் தனியன்பு செலுத்தினார்கள் என்றால் அவர்கள் தொண்டினை என் சொல்வது.

### *மாற்றுக் கருத்தாளரும் மதிக்கும் மாண்பு*

சமயம் கூறும் கடவுட் கொள்கையையும், திருக்கோயில்களையும் திருமடங்களையும், ஏன் திருமேனிகளையுமே வெறுத்துப் பொது மேடைகளில் பேசியும், எழுதியும் சீர்திருத்தம் கூறிவந்தவர் ஈ.வே.ரா. அவர்கள், ஈரோடு வந்தபோது பெரியார் அவர்களே அடிகளை வரவேற்று வழிபாடு செய்து, அவர்களது அறநிலையத்தில் எழுந்தருளச் செய்தார், 'குடியரசு' என்ற செய்தித்தாளையும் தொடங்கவைத்து, 'அன்பு' என்ற தலைப்பில் மூன்று மணி நேரம் சொற்பொழிவு நிகழ்த்தவும் செய்வித்தார். அடிகளாரின் அருமை பெருமைகளையும், அடிகள் போன்ற நற்றொண்டுபுரியும் நல்ல துறவி களால்தான் நாடு நலமடையும் என்றும் மனமார வணங்கி நன்றி கூறினார்கள். அதுபோது அடிகளிடம் பாடம் கேட்டுக் கொண்டும் தொண்டு செய்துகொண்டும் உடனுறைந்த மாணவர்களுள் யானும் ஒருவன். போலிச் சைவத்தை வெறுத்த மறைமலையடிகள், ஞானியார் அடிகளை வணங்கித் தம் அறநிலையத்திற்கே எழுந்தருளச்செய்து போற்றினார்கள். மறைமலையடிகள் போற்றிய மடாதிபதி, ஞானியார ரடிகளே. அவர்கள் சென்று வழிபட்ட தமிழ்நாட்டு மாடலயமும், ஞானியாரடிகள் மடாலயம் ஒன்றே என்று கூறின் மிகையன்று. அவ்வாறு வீறுகொண்ட உள்ளமும் உவந்து ஏற்கும்படி செய்தது அடிகளாருடைய சமயத் தொண்டு.

திரு.வி.க. ஒரு சமயம், அடிகளாருடைய சமரச சமயக் கொள் கையையும், துறவுநிலைக்கேற்ற அருளுள்ளத்தையும் முற்றும் உணர்ந்து யாரையும் விழுந்து வணங்குவது மனிதநிலைக்கு இழிவானது என்ற துணிவான கருத்தைத் தாமே மறந்து விழுந்து வணங்கித் திருநீறு பெற்றுப் பூசிப் பொலிந்தார்கள். அதனை, திரு.வி.க. அவர்களே, அவர்களுடைய அன்பர்கள் வினவும் போது விளக்கம் கொடுத்த செய்தி, அடிகளைப்பற்றி திரு.வி.க. எழுதிய எழுத் தோவியத்தில் பரக்கக் காணலாம்.

இங்ஙனமாகத் தமிழ்நாடு முழுவதும் சென்று, அதுபோது மலையாள நாட்டோடு பிணைந்திருந்த நாஞ்சில் நாடும் சென்று அங்குள்ள நன்மக்களாய, பன்னிருகைப் பெருமாள் முதலியார், ஆறுமுக முதலியார், மகாலிங்க முதலியார் முதலியோர் துணையால் தமிழ்த் தொண்டும், சமயத் தொண்டும் செய்து திரும்பினார்கள். அடிகள், எத்தனை மாறுபட்ட கருத்துடையவர் களிடத்தும் அருளுள்ளம் கொண்டவராய் அணைத்து, விருப்பு வெறுப்பின்றி நடந்ததால், அவர்களுடைய தொண்டும் சிறந்தது;

பயனும் பெருகிற்று. அதனை விரிப்பிற் பெருகும். யான் உடனுறை பேறு பெற்றவனாகையால், அலைஅலையாக முன்வந்து நின்று, எதனைக் கூறுவது எதனை எழுதுவது என்று திசைதெரியாமல் அந் நினைவலைகள் மோதுகின்றன. ஒரு சோறு பதம் பார்த்தாற் போது மன்றோ? நிற்க.

### அடிகளாரும் அறப்பணிகளும்

சமயச் சொற்பொழிவு மாத்திரமன்றி அடிகளே முன்னின்று நடத்திய சில அறப்பணிகளும் உண்டு. அடிகள் மேற்கொண்ட மடாலயத் திருத் தொண்டினைச் சிறக்கச் செய்ய, தம்முதல் குருமூர்த்திகள் எழுந்தருளியுள்ள திருக்கோவலூர் மடத்தையும், பின்னர், *திருப்பாதிரிப்புலியூர்த் திருமடத்தையும், திருக்கோவலூர் ஆதீனத்தைச் சார்ந்த முதுகுன்றம் கல்மடத்தையும்* செப்பனிட்டு, அறக்கட்டளைகளைத் திறம்படச் செய்தார்கள். ஆரணிக்கடுத்த, *சத்திய விசயமங்கலத்து உள்ள திருமடத்தையும்,* அதனைச் சார்ந்த திருக்கோயிலையும் அடிகளே ஆங்கு எழுந்தருளியிருந்து செப்பனிட்டு அறம் நிறுவினார்கள். *திருப்பாதிரிப் புலியூர் அருள்மிகு பாடலேசர் திருக்கோயில்* அறங்காவலராகப் பணியேற்று, நாள் வழிபாடு, சிறப்பு வழிபாடு, பெருவிழா முதலியன எவ்வாறு நடைபெற வேண்டும் என்று விதித்து, மற்றைத் திருக்கோயில்கள் அவ் வண்ணம், நடைபெற முன்மாதிரியாகச் செய்து காட்டினார்கள். அன்றியும் பெருவிழாக் காலங்களில் கூடுகின்ற அன்பர்கள் அடியார்கள், பொதுமக்கள் சமய அறிவினைப் பெறுதற்கு, திருமடத் திலும், திருக்கோயிலிலும், சமய அரங்கமைத்து, தக்க சமய அறிஞர்களை யழைத்துப் பேசச் செய்து, சமய உண்மைகளைப் பரப்பினார்கள். அந்நாள்தொட்டு இன்றுகாறும், பல இடங்களில், விழாக்காலங்களில், சமயச் சொற்பொழிவு நிகழ்வது அடிகள் தொடங்கி வைத்த வழக்கே ஆகும்.

விழாக் காலங்களில், திருவுலாக் கொள்ளும் மூர்த்திகட்குப் பின்னிருந்து சிறந்த இசைவாணர்களாய ஓதுவா மூர்த்திகளை யழைத்துத் தேவார திருவாசக, திருப்புகழ் இன்னிசைப் பாடல் களைப் பாடச் செய்து, பக்திச் சுவையையும், அருட்பாடலின் அருமையையும் ஊட்டி வளர்த்தார்கள். இங்ஙனம் அடிகள் எந்த எந்தத் துறையில் சமயம் வளரும், வளர்க்கவேண்டும் என்பதனை மிக நுணுகி ஆய்ந்து செல்வர்களைப் பயன்படுத்தியும், அறிஞர்களைத் துணைக்கொண்டும், அருளை முன்னிறுத்தியும் பணிசெய்தார்கள். அடிகளார் பெரிய கோயில் எனப்படும் *தில்லைச்சிதம்பரம்* போன்ற திருத்தலங்களில் நடைபெறும் பெருவிழாக்களுக்குச் சிவிகையூர்ந்து சென்று ஆங்குள்ள அறநிலையங்களிலும், திருக்கோயிலிலும் சமயப் பேரவைகளில், தலைமை தாங்கிச் சமய உண்மைகளை மக்கட்கு விளக்கின செய்தி நாடறிந்த ஒன்று. அடிகளின் தலைமையிற் பெருமக்கள் பேசினால், அவர்களது அரிய உரைகட்கு முத்தாய்ப்பு

வைத்து முடிவுரை கூறும் அழகும், ஆசிகூறும் அருட்பாங்கும், என்றும் மறத்தற்பாலதன்று. திருத்திப் பணிகொள்ளும் பாங்கில் அன்பு ததும்புமே தவிரக் குற்ற உணர்வு ஒருசிறிதும் இராது. அதனுல் பேறுபெற்றவர் பலர். ஔவை துரைசாமிப்பிள்ளை. கிருபானந்த வாரியார், சைவப் பெரியார் சச்சிதாநந்தம் பிள்ளை, வச்சிரவேல் முதலியார், தண்டபாணி தேசிகர் போன்ற பெருமக்களை நினைவு படுத்தலாம். அடிகள்பால் அளவிலாப் பத்தி பூண்டு ஒழுகிய திரிசிர புரம் மு. நடேச முதலியார், திருச்சியில் அடிகளை அமரச் செய்து, கல்லூரி மாணவர்க்கும் மற்றவர்க்கும் பாடம் சொல்லச் செய்தும் பயன்கொண்ட செய்தி மிகமிக உயர்ந்த ஒன்றும்.

'ஒருநெறிய மனம் வைத்துணர் ஞானசம்பந்தன்
[உரைசெய்த
திரு நெறிய தமிழ்! என்றும்.

'சலம் பூவொடு தூப மறந்தறிறேன்
தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்' என்றும்

'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும்
[ஞானசம்பந்தன்'

'நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன் நாவுக்கரையன்'

என்றும், மூவர் முதலிகள் அருளிய திருப்பாடல்களின் உண்மையனுபவம் அடிகளார்பால் மிக்கொளிர்ந்ததை நாமறிய லாம். அடிகளார் சைவ சித்தாந்தப் பேருண்மைகளிற் பிடிப்பும் தெளிவும் உடையவர்கள்; தமிழ்த்தெய்வமாம் முருகனிடத்தில் பக்தியும், உபாசனையும் அனுபவமும் உடையவர்கள். முருகனைத் தாம் வழிபடுதெய்வமாகவும், குருவாகவும் அனுபவித்தவர்கள். சைவசித்தாந்தம் இறைவன் குருவாக எழுந்தருளி ஆட்கொள்ளு கிறன் என்பதனை வலியுறுத்தல் காணலாம். 'குருவாய் வருவாய் அருள்வாய் குகனே' என்பது அனுபூதி பெற்று அனுபூதி சொன்ன அருணகிரி திருவாக்கு,

'திருவெணீ றணிகள் வாழி தெய்வகண் டிகைத்தார் வாழி
பரவினர்க் கருளும் பஞ்சாசக் கரம்பகர் பவளம் வாழி
மருமலர்ச் சரணம் வாழி; மணிபுயக் குவளை வாழி;
அருள்வழி விழிஎங் கோமான் ஆறுமா முகனும் வாழி'

என்பது அவர்கள் வழிபடும் தெவமும் குருவுமாய முருகப் பெருமானே.

அடிகள் உறுதியாக நம்பி அருள் பெற்று உய்ந்த, உலகுக்குக் காட்டிய உண்மை நிகழ்ச்சிகளும் உண்டு. அடிகள், ஒருமுறை, அயர்வால் அடிதவறி, விழுந்து, கால்

முறிவு ஏற்பட்டபோது, அறுவை சிகிச்சையாலும், மருந்தி ஞலும், பயனற்றுப் போயிற்று. அடிகள் மனமுருகி, அன்பு மீதூறி அழுதுஅழுது, முருகனடியே சிந்தை செய்து, குருதுதி என்று நாள்தோறும், ஒரு பாவினல் வழிபட்டு வந் தார்கள். துதிமுடிவில், முறிவு கூடி, எழுந்து நடந்து, பல பணிகளையும், பல்லாண்டுகள் செய்து வாழலாயிற்று. இஃது அவர்கள் சொந்த அனுபவம். அன்பர்கட்கு அருள் செய்து, இடர் நீக்கிய செய்திகள் பலப்பல. அவற்றைக் கூறின் மிகும். அஃது ஒன்றே அடிகளாரின் அருள் அனுபவத்துக்கும் சமயப் பணிக்கும் தன்னை ஆளாக்கிக் கொள்வார் எத்தகுதி யுடையராதல் வேண்டும் என்பதற்கும் போதுமானது. அடிகளின் சமயத்தொண்டு நின்று நிலவுகிறது.

# 3. சமுதாயத் தொண்டு

"தவமே புரிந்திலன் தண்மலரிட்டு முட்டா திறைஞ்சேன்
அவமே புரிந்த அருவினை யேன்நின் அன்ப ருள்ளாம்
சிவமே பெருந்திரு எய்திற்றி லேன்நின் திருவடிக்காம்
பவமே அருளு கண்டாய் அடியேற்கு எம்பரம்பரனே!"
—திருவாசகம்.

***சமுதாயத் தொண்டும் அடிகளார் நோக்கும்***

தமிழ்த் தொண்டும் சமயத் தொண்டும் எங்கே சேர்வது, யாருக்குப் பயன்தருவது, அது சமுதாயம். சமுதாயம் என்பது கூட்டம், அஃதோர்உடம்பு. உடம்பிலுள்ள பலவுறுப்புகள் போலச் சமுதாயத்திலுள்ள பல பிரிவினர். கண், காது, நாசி, நாக்கு, தோல் போன்ற ஐந்து அறிவு உறுப்புகளும், தலை, கை, கால், போன்ற செயலுறுப்புகளும், மனம், அறிவு போன்ற உள்ளுறுப்புகளும், இவற்றால் ஏற்படும் விருப்பு வெறுப்புகளும், இன்பதுன்பங்களும், உயர்வு தாழ்வுகளும், அத்தனையும் கூடியது தானே உடம்பு. அது போலவே, சமுதாயத்திலும், சமுதாய உடம்பிலும், இத்தனை உறுப்புப் போன்றவர்களும் கூடி இயங்கும் போதுதான் சமுதாய உடம்பும் திறம்படவும், சிறப்பாகவும் இயங்க முடியும். இப்படித்தான் சமுதாயம் ஏற்பட்ட நாள் தொடங்கி இன்றுவரை இயங்கி வருகிறது. சமுதாய அமைப்பும் அப்படித்தான் அமையும். ஓர் உறுப்பு செய்கிற செயலை மற்றோர் உறுப்பு செய்யமுடியாது உடலில். ஆனால், அதனைத்துறுப்பும் நன்றாக இயங்கினாலன்றி, உடம்பு, நலம்பெறாது. ஓர் உறுப்புக் குறையினும், செயல்படாது போயினும் அவ்வுடம்பு முழுத்தன்மை யுடையதும் ஆகாது. அதுபோலவே, சமுதாய உடம்பிலும்; ஒரு பிரிவினர் செயலற்றுப் போவராயின் சமுதாய உடலும் செயல்படாது; சீரழிந்துபோம். இந்த உண்மை யடிப்படையை உணர்ந்த சான்றோர், சமுதாயத்தில் எத்திறத்தில் செயல்படுவாரையும் குறைவுடையராகக் கருதுவதில்லை. ஆனால், புறஞ் சென்று செயல்படுதற்குரிய கால், அனைத்தையும் கண்டு காட்டுகிற கண்ணுக்கு எந்த வகையிலும் குறைவுடையதன்று, அனைத்தையும் செய்து முடிக்கிற கைக்கு, அச்செயலினைத் தொழிற்படுத்துதற்கு உதவுகிற அறிவு எந்த விதத்திலும் குறைவுடைய தன்று; அங்ஙனமே

அத்தனை உறுப்புகளும் சமுதாயமாய் நின்று உடலியக்கம் நடைபெறுகிறது. அதுபோலவே, மனிதசமுதாயமும், அவ்வவ் வுறுப்பனையர் அனைவரும் சேர்ந்தே சமுதாயம் இயங்குகின்றது. அதனால்தான் ஒரு சமுதாயம் வளர்வதும் வாழ்வதும், இன்பம் நுகர்வதும் துன்பநிலை பெறுவதும், உயர்வடைவதும், தாழ்ந்துபடுவதும், உறுப்பனையார் அனைவருடைய ஒருங்கிணைந்த ஒழுங்குபட்ட நிலையினைப் பொறுத்ததாக அமைகிறது. இவ்வுண்மை நிலையுணர்ந்த அடிகள் தம் நிலைமையினையும், தாம் சமுதாயத்தில் எவ்வுறுப்பாய் நின்று பிற அனைத்துறுப்புக்கும் துணைசெய்ய வேண்டும் என்பதையும் நன்குணர்ந்தவர்கள். அந்த நிலையில், தாம் எந்த உறுப்பாய்ச் சமுதாயத்தில் இருந்தாலும், பிறவுறுப்பனையாரைக் குறையாக மனத்தாலும் நினையாத குணப்பெருங்குன்றாய் அடிகள் வாழ்ந்தார்கள். தில்லைத் திருக் கூத்தனைக் கண்டு களித்த திருத் தொண்டர் எங்ஙனம் கண்டு களித்தார் என்று கூறவந்த சேக்கிழார் பெருமான்,

"ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள
அளப்பருங் கரணங்கள் நான்கும்
சிந்தையே யாகக் குணமொரு மூன்றும்
திருந்து சாத்துவிக மேயாக
இந்துவாழ் சடையான் ஆடும் ஆநந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்த பேரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்"

என்று அருளுகிறார்கள். அதுபோல அடிகள், சமுதாயமாய அனைத்துறுப்பும் தத்தம் தொழிலை திறம்படச் செய்யவும் அதனால் அனைத்து நலனையும் பெற்று மகிழவும் வேண்டும்; அதே நேரத்தில், உடலிடம் கொண்ட உயிர் மாறிலாமகிழ்ச்சியில் மலர்வது போல அனைத்துறுப்பாய் வாழ்வார் ஆன்ம நலம் ஒன்றாய் மகிழ்ச்சியில் மலரவேண்டும் என்றும் கருதிச் சமுதாயத் தொண்டு ஆற்றிய அருட் பெருந்தகையாவார்கள்.

சமுதாயமன்றி மொழியில்லை; சமுதாயமன்றிச் சமயம் இல்லை; சமுதாயமன்றித் தொண்டும் இல்லை. ஆகையால், மொழியோ, சமயமோ, அன்றி வேறு எந்தப் பொது நலத் தொண்டாயினும் சமுதாயத்தை நோக்கியே செயல்படவேண்டும். தொண்டு என்பதுதான் என்ன? ஒரு மனிதன் தான் வாழும் சமுதாயத்தில் ஏதாவது ஒரு துறையில் மிக்கிருப்பானாயின், அவன் தன் சிறப்பினைப் பெரிதெனக் கருதாது தன்னோடு வாழும் சமுதாயமும் அந்நலனைப் பெறவேண்டும் என்று இரங்கி, தானே முன்வந்து, தன்னலம் ஒருசிறிதும் கருதாத தூய உள்ளத்தோடு, சமுதாய நலனையே குறிக்கோளாகக் கொண்டு, உடல் பொருள் ஆவியால் முயன்று தொழிற்படுவது. மேற்கூறிய முறையில், உடலளவால், பொரு

ளளவால் உயிர் ஆற்றலால், அனைத்தையும் தொண்டுக்கே எனச் செயல்பட்ட, ஆன்றவிந்தடங்கிய சான்றோரைத்தான் தொண்டர் எனக் கூறினர். இப்பேருண்மையினைத் தொண்டர் புராணம் விரித்துக் கூறுகிறது. தொண்டர் புராணத்துக்கு முதல் நூலாய் அமைந்த திருத்தொண்டத் தொகை விரித்த திருவாளர், சிவத் தொண்டு, சிவனடியார் தொண்டு கூடியவர்களனைவரையும் தொகுத்துக்கூறி அமையாது, 'அப்பாலும் அடிச்சார்ந்தார் அடி யார்க்கும் அடியேன்' என்று ஒருதொடர் கூறுகிறார்கள். அத் தொடர்க்குச் சமயநெறி நின்று சேக்கிழார் போன்ற பெருமக்கள் விளக்கமும் கூறியுள்ளனர். அத்தொடர், சிவனடித் தொண்டும் சிவனடியார் தொண்டுமே அன்றி, அப்பாலும் சமுதாய நலன் பேணிக்காத்துப் பிறவா நெறியாம் பேறு பெற்ற தொண்டர் கட்கும் அடியேன் என்று பொருள் விரிப்பினும் பொருந்தும் என்றே கருதுகிறேன். குறிக்கோளை — பிறவிப்பயனை — பிறவாப் பெருவாழ்வையடைதற்கு, எத்துறையிற் சென்றாலும் இலக்கு ஒன்றாய் — பேறு ஒன்றாய் அமையின் அது சாலுமன்றே. ஆகை யால் அடிகள் மொழிவழி நின்றும், சமய வழி நின்றும், தொண் டாற்றியகாலை, அத்தொண்டுகள் கீழ்மட்டததிலுள்ள சமுதாயத் திற்குப் பயன்பட வேண்டும்; அப்போதுதான் தொண்டு சிறக்கும் என்றே பாடுபட்டார்கள். இனி, அவர்கள் செய்த சமுதாயத் திருத்தொண்டிற் சில எடுத்துக்காட்டுவல்:

### சைவர் மாநாடு

தொண்டு செயக் கருதுவார் முத்திறத்தினர். ஒன்று தனித்துத் தம்மாலியன்றதைத் தாமே செய்வது. மற்றொன்று தன்னொத்தார் அனைவரையும் ஒன்று கூட்டி ஒத்த மனத்தராய் நின்று செயல் படுவது. பிறிதொன்று தன் வழிப்பட்டாரோடும், தன் வழிப்படுத்தும் தொண்டிற் புகுவது. இந்நிலையினை இன்றும் அரசியலிலும், அறிவிய லிலும் ஆன்ம இயலிலும் செயல்படுவதைக் காணலாம். ஆனால் அச்செயல்கள் இதுகாலை, தன்னலனையே கருதிச் செயல் படுதலால் பயன்படுவதும் இல்லை; பயனளிப்பதும் இல்லை. ஆனால் அடிகள் சமுதாயத் தொண்டினைக் குறிக்கொண்டபோது, இரு நிலையினை மேற்கொண்டார்கள். தம்மாலியன்ற தொண்டினையும் செய்தார்கள்; தம்மொத்தாரை ஒன்றுகூட்டி, ஒருமனப்பட்ட முடிவை உருவாக்கி, அனைவரும் ஒரு துறையில் நின்று தொண்டு செய்யவும் முயன்று பயன் கண்டார்கள். 1929, மேத் திங்களில் சைவர் மாநாடு என்று ஒன்று தொடங்கி, வட வேங்கடம் தென் குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகத்துத் தமிழ்ப் பேரறிஞர், சமய உண்மை கண்டோர், சமயப் பற்றுடையோர் அனைவரையும் ஆயிரம் ஆயிரம் பேர் திரளும்படி ஒன்று கூட்டினார்கள். அது காலை, தம் திருமடத்திலேயே அனைவரையும் வரவேற்று, மறை மலையடிகள் தலைமையில் ஐந்துநாள் பேரவைப் பெருவிழாவை நடத்தினார்கள். அதுகாலை வாழ்ந்த நன்மக்களனைவரும் அடிக

ளாரின் அழைப்பைத் தலைமேற்கொண்டு கூடி, அமைதியும், தகுதியும், வேறுபாடின்மையும், மொழிக்கும் சமுதாயத்துக்கும் நன்மை விளைக்கக் கூடியனவும், பிறசமயமொழிக் காழ்ப்பு வேறுபாடு கருதாமையும், உயர்ந்தனவே உள்ளும் உயர் நோக்கமும் உடைய பல முடிவுகளைச் செய்யும்படி அடிகள் முன்னின்று முடித்தார்கள். அம்முடிபினை, ஆன்றோர் பலரும் ஏற்று அவ்வண்ணமே நாடு முழுதும் நற்றொண்டு புரியலாயினர். சமுதாயத்தில் அன்று முதற்கொண்டு மொழிப்பற்றும் சமய வளர்ச்சியும் தக்காங்கு வளர்ந்து வரலாயின. திருக்கோயில் வழி பாடு, வழிபாட்டு முறை, ஆகம முடிவுகள், தமிழ் முறைகள், தமிழ் நூல்களில் ஏற்புடையன போன்ற ஆய்வுரைகளும் முடிபுகளும் நிகழ்ந்தன. அன்றைய தொடக்கமும் தமிழ்ச் சமுதாயத்துக்குச் சிறந்த நன்னாளாய் அமைந்தது.

### வரவும் வாழ்த்தும்

அடிகள் சிவிகை ஊர்ந்து செல்லிடங்களில் இடைப்பட்ட சிற்றூர்களில், எடுத்துச் செல்வார் ஓய்வு பெறுதற்காக, சிவிகையை இறக்குவார்கள். அதுபோது அச்சிற்றூரிலுள்ள பொதுமக்கள் அடிகளைக் காணவும் வழிபடவும் வந்து கூடுவர். அடிகள் அன் போடு வரவேற்று, அவரவர்கட்குரிய இன்மொழிகூறி, குடும்ப நலன்முதல் வினவி, அறவுரை, அன்புரை, அறிவுரை ஆன்ற அருளுரையும் வழங்கித் திருநீற்றுச் செல்வமும் தந்து வாழ்த்து வார்கள். மக்கள் அளவிலா மகிழ்ச்சியால் அடிகள் புறப்படும் போது, முன்னும் பின்னுமாக நெடுந்தூரம் உடன்வந்து பிரியா விடை பெற்றுச் செல்வதே ஓர் அருமைக் காட்சியாகும்.

சில சிற்றூர்களில் அடிகள் அவ்வழியாக வருகிறார்கள் என் பதனை முன்கூட்டியே அறிந்து, பொதுமக்கள், விழாக்கோலம் கொள்வார்கள். காவணம் அமைத்து, வாழை கமுகு மாவிலைத் தோரணம், தூக்கு, நிறைகுடம், பாலியாம் மங்கலம் அமைத்து, இன்னியம் இசைக்க, அரஅர முழக்கத்தோடு ஆண்களும் பெண் களும் ஒன்றுகூடி கண்ட சருக்கரை, தேங்காய், பழம், முதலிய கை யுறை ஏந்தி அடிகளை ஊர்வலமாக் கொண்டு, மனைதோறும், தூபதீபம் காட்டி வழிபடும் காட்சியும், அடிகள் அச்சிற்றூரில் இறங்கி அடியவர்க்கருளும் தெய்வத்தன்மையும் காணுங்கால் இனியொரு கால் இத்தமிழ் நாட்டில் இதுபோல் என்று காண்போம் என்ற எண்ணம் ஏக்கற்று நிற்கிறது. அத்தகைய திருத்தொண்டின் மூலம் அடிகள் மக்களைப் பிணைத்து, நல்ல சிந்தனை, நல்லடக்கம் நற்பண்புகளையும், மக்களுக்கு வழங்கி வாழ்த்தினார்கள்.

### திருவருள் தொண்டு

ஓர்கால் அடிகள் வழிச்செல்லும்போது, வழியிடைப்பட்ட சிற்றூர் ஒன்றில் பொதுமக்கள் வேண்டுகோட்கிணங்கித் தங்கி

னார்கள். அன்று பகல் மாகேசுரபூசையும் வழிபாடும் முடிந்தது. பகலுணவுக்குப்பின் அச்சிற்றூரில் உள்ள செல்வக் குடியில், ஒரு குலத்துக்கொருமகனாய்த் தோன்றிய ஓர் இளைஞர்க்குத் திருமணம் ஆகிப் பல்லாண்டு கழிந்தும் மகப்பேறின்றி மனக் குறையால் வாடி என் செய்வது என்று அறியாது பலவாறு கவன்று அடிகளாரிடம்அவருடைய சுற்றத்தாரும் அவரும் வந்து அடிபணிந்து குறையிரந்து நின்றனர். அடிகள் திருவுளம்பற்றி அருளுரை வழங்கிகொண்டே வரும்போது சுழன்றுசுழன்று, அவருக்கு ஆறுதல் கூறும் அன்பு மொழியும் அடையாலம் என்ற ஆர்வமொழியும் கலந்து கலந்து, இடையே அச்சிற்றூர் மக்கள் பேசும், இல்லத்துப் பழ மொழி ஒன்றைக் கூறினார்கள். 'சட்டியில் இருந்தால்தானே அகப்பையில் வரும்' என்பது நீவிர் அறிந்த பழமொழிதானே என்றார்கள். அனைவரும் 'ஆமாம்' என்பது போல அமைந்து கேட்டனர். அதற்கு, அடிகள், சட்டி என்பது, நம்முடைய தமிழ் மக்கள், வழிபட்டுவந்த திருமுருகனுக்குரிய நன்னாளாகும். சட்டி யிலுருத்தலாவது, நம் தமிழ்க் குடியிற் பிறந்த மக்கள் அனைவரும் திருமுருகனுக்குரிய நன்னாளாம் அன்று, தூய நிலையில் நோன்பிருத்த லாகும். அவ்வவாறு சஷ்டித்திருநாளில் முருகனை வழிபட்டு நோன்பிருந்தால் தானே அகப்பையில் வரும் என்பது. அகம் என்றால் வயிறு; பை என்பது கருப்பை; வரும் என்பது நன்மகவு தோன்றும் என்று பொருள். எனவே, நம் தமிழ் முருகனை வழி பட்டு சஷ்டி நன்னாளில் நோன்பிருந்து நன்மகப்பேறு அவனரு ளால் பெறலாம். இஃதுறுதி என்று அருள் வழங்கித் திருநீறு நல்கினார்கள். அங்ஙனமே அச்செல்வக் குடிமகன் நோன்பிருந்து நன்மகப் பேறடைந்து அன்றுமுதல் அடிகளிடம் அன்பு செலுத்தி வழிவழி யடியாரானமை நாங்கள் அறிவோம். இந்நிகழ்ச்சியில், நம்நாட்டுப் பழமொழிகள் எவ்வளவு ஆழமான, புறப்பொருளோடு உட்பொருளும் உடையதாய், தகுதிக்கேற்பப் பொருள் படுகிறது— பயன்படுகிறது என்பதனை அடிகள் வாயிலாக அறிகிறோம். அடிகள், தன்னடைந்தார்க்கும், தன்பால் அன்பு பூண்டார்க்குமே யன்றிப் பொதுமக்கட்கும், திருமடம் பயன்படவேண்டும் என்னும் திருவுள்ளம் உடையவர்கள். சமயம், கல்வி இவற்றுக்கு மாத்திரம் அறநிலையங்கள் இடமாவதன்றி, வேறு சமுதாயப் பணிகட்கும் இடமாக அமையவேண்டும் என்ற நோக்குடையவர்கள். மடாதி பதிகள், சமயத்தொண்டே, தமிழ்த்தொண்டேயன்றிச் சமுதாயத் தொண்டும் செய்யக் கடமைப்பட்டவர்கள் என்ற கோட்பா டுடையவர்கள். அடிகளார் தம் திருமடத்தில், பல அன்பர்கட்குத் தாமே முன்னின்று திருமணம் செய்து வைத்துள்ளார்கள். பல அன்பர்களுடைய வேண்டுகோட் கிணங்கி, அப்பெருங்குடி மக்களின் திருமணத்திற்கு எழுந்தருளி வாழ்த்தியுள்ளார். அவர் களுடைய, நிறைவுநாள் கூட, ***அரங்சாமி முதலியார் திருமகள் காமாட்சி அம்மையாரின்*** திருமணத்திற்குச் சென்று திரும்புகாலை நிகழ்ந்தது என்பதனைத் தமிழ் உலகம் நன்கறியும். அன்றியும்,

சிலபல பெரிய குடும்பங்களில், பல்லாண்டுகள் தீராமல் இருந்த பகமை, வழக்கு, பிரிவினை முதலிய குடும்பச் சூழலை விலக்கி நல்லுணர்வு தோன்றச் செய்து வாழவைப்பார்கள். நெருங்கி நிறை மனமுடையராய் வாழ்வார்க்குச் சிறிதுசிறிதாகத் தெய்வ உணர்வை ஊட்டி அவர்களைச் சிவபூசைச் செல்வர்களாக்கு வார்கள். தம்பால் அன்பூண்டொழுகும் செல்வப்பெருங்குடி மக்களைச் செல்வ நிலையாமைகாட்டி அறவழியிலும் அறிவு வழியி லும் சமயச் சார்பிலும் பொருள்வழங்கச் செய்து பொதுநலத்தில் அவர்களை ஈடுபடச் செய்வார்கள். இப்படி அடிகள் பூண்ட அற வினைகள்பலப்பல; அடிகள் செய்த தொண்டு எண்ணிலடங்கா; எழுத்திலடங்கா.

### திருவாக்கின் செழுமை

இனி அடிகள் திருவாக்கின் செழுமை குறித்து நான் ஒன்று கூறக் கடமைப்பட்டவனுவேன். சுவைத்திறம் பலப்பல; சுவைப் போர் திறமும் பலப்பல. ஆகையால், அடியேனுடைய சுவைத் திறமும் ஒருவயையாகத்தானே இருக்கும். அடிகள் தமிழ்ப்பாலை ஊட்டி உரம் உண்டாக்கிச் சமய உண்மைகள் என்னும் உணர் வினைத் தந்து உயிர் தழைக்கச்செய்த தாயினும் இனிய தண்ணளி அடியேனுக்களித்தவர்கள். அவர்களை நினைதொறும்நினைதொறும் உள்ளம் இனிக்கும்; தளிர்க்கும்; உயிரினிக்கும் தளிர்க்கும். அன்பர்கள் முன்னே ஒன்று சொல்லி மகிழ விரும்பு கிறேன். அடிகள் பிற சமய அறிஞர்களைப் போலச் சமயக் குறியீட்டுச் சொற்களைப் பேசியும், எடுத்துக்காட்டியும் மயங்க வைக்க மாட்டார்கள். கேட்பவர்கள் உளம் தெளிவு பெற வேண்டும், உண்மையும் உயர்ந்ததுமாகவும் இருக்கவேண்டும், அவர்கள் வாழ்விலேயே அமைத்துக் காணவும் வேண்டும் என்றே கருதிப் பேசுவார்கள்; விளக்குவார்கள். ஓர் எடுத்துக் காட்டு. ***திருவெண்ணெய் நல்லூர் சின்னசாமி ரெட்டியார்*** அவர்களுடைய வேண்டுகோளின்படி சமயப் பேரவை நடந்தது. அங்கு ஆயிரக்கணக்கான அன்பர்களும் பொதுமக்களும் அடிகள் தலைமையில் கூடினர். அடிகள் திருவருட்டுறையில் பேசினுர்கள். அதுபோது சைவசமயப் பேருண்மைகளை விளக்க வேண்டி வந்தது. மூன்று குணம், மூன்று மலம், மூன்று பொருள் இவற்றின் நிலை விளக்க வேண்டும். அடிகள், சிவபெருமானுக்குரிய திரு வுருவச் சிறப்பினைத் தொடங்கிப் பொதுமக்கட்கு உருவச் சிறப்பை யாவரும் வியக்க, அம்மையப்பருடைய ஓருருவத் திருமேனியை அம்மை, கருமை; அப்பர், செம்மை; அவர் அணிந்துள்ள திருநீறு வெண்மை; கருமையும் செம்மையும் வெண்மையும் சேர்ந்த திருமேனியுடைப் பெருமானை நாம் வணங்கு கிறேம் என்ற போது, அத்திருவுருவமே அனைவருடைய உளத்திலும் பதியவைத்தார்கள். அவ்வுருவத்தினின்றும், கருமை

செம்மை, வெண்மை என்ற மூன்று நிறங்களையும், தாமசம், ராஜசம், சாத்துவிகம் என்ற மூன்று குணங்கட்கு அழைத்துச் சென்றார்கள். அடுத்து, அறியாமைக் கருமையும், அறிவு அறியாமை இரண்டுங் கூடிய செம்மையும், தூய அறிவே வடிவான வெண்மையையும் பிணைத்துக் காட்டினார்கள். அறியாமையே வடிவாகிய மலத்தையும், அறிவு அறியாமையுடைய உயிரையும் தூய அறிவினனாகிய பதியை யும் உண்மைப்படுத்தினார்கள். இடைநின்ற உயிர்கள், அறியாமை யினின்றும் நீங்கி அறிவே வடிவினனாகிய இறையருள்பெறுதல் வேண்டும். இதுவே சைவத்தின், ஏன் அனைத்துச் சமயத்தினுடைய கொள்கையுமாகும். கூறும் மொழியால், வழியால், செயற்பாட் டினால், வேறுவேறாகக் கருதப்படுவதேயன்றிப் பொருளால் பொருட் பேற்றால் ஒன்றேயாம் என்று, அடிகட்கே உரிய ஆற்றலோடு கூடிய அருள்மொழியால் விளக்கம்செய்து, '*சிவ*' என்ற சொல் லில் இத்தனை அரும் பொருளும் பொதிந்து கிடப்பதை வடமொழி, சாத்திரம், தோத்திரம் இவற்றுள் மேற்கோள் காட்டி நிறுத்தினார்கள்.

'எவ்வெவர் கோட் படுபொருள் ஐந்தெழுத்தின்
அடக்கியவற் றியல்பு காட்டி'

'அறுவகைச் சமயத்தோர்க்கும் அவவவர் பொருளாய்
வேறாம் குறியதும் உடைத்தாய்.'

'அறிவவன் உருவமாகும் அருளவன் சத்தியாகும்'

என்ற அறிவுநூற் பொருளையும் முன்னோர் மொழிபொருளேயன்றி யவர்மொழியும் பொன்னேபோற் போற்றும் கடப்பாட்டில் நின்று அடிகள் செய்த பேருதவித்தெளிவு, அங்குக் கூடியிருந்த அறிவுப் பெருமக்களுடைய உள்ளத்தைக் கவர்ந்து பல்லாண்டுகள் நிலைத் திருந்தது. பொதுமக்களுடைய பெருமகிழ்ச்சி, வெள்ளப் பெருக் காய்க் கரைபுரண்டோடியது. அத்தனை அழகும் அருமையும் ஆழமும் உடையதாய் சமய நுண்மாண் நுழைபுலத்தால் சமுதாயத் துக்குத் தொண்டுசெய்த பெருமை அடிகட்கேயுரியது ஒன்றாம்.

### *அடிகளார் பெற்ற பேறு*

அடிகளார் காலத்துச் சமயப்பேரவைகளும், தமிழ்க் கழகங் களும் அடிகள் தலைமையைப் பெறாதன இல்லை என்றே சொல் லலாம். அடிகளார் சொற்பொழிவைக் கேட்காத அறிஞர்களும் ஆன்றோர்களும் இலர். அடிகள் தலைமையில் பேசவேண்டும், அடிகளார் ஆசிபெற வேண்டும் என்று அறிஞர்களும், பொதுமக் களும் ஏக்கற்றுக் காத்துக்கிடந்தனர். அடிகளாரிடம் நான் படித் தவன் என்றும், அடிகளார்க்கு வேண்டியவன் என்றும் சொல்வதில் பெருமைப்பட்டனர். அடிகளாருடைய திருமுகம் பெற்றுப் பலர் பல அலுவலகங்களிலும், பள்ளிகளிலும், தொழிற்கூடங்களிலும்

இடம்பெற்று வாழ்ந்தனர். அடிகளார் சிலருக்கு நேர்முகமாகவே துணைசெய்வதும் உண்டு. அடிகளார் நன்றிக்கடப்பாட்டில் மிக்கூன்றியவர்கள். இளமையில் தாம் பயின்ற ஆசிரியருடைய குடும்பத்திற்குப் பல்லாற்ருனும், உதவிசெய்து காத்துவந்தார்கள். அடிகளார் செய்யும் உதவி பிறர் அறிய வேண்டும் என்ற அடிப்படையில் அன்று. கடப்பாட்டுணர்வும் சமுதாய நலனுமே குறிக்கோளாகக் கொண்டது. இத்தகைய எடுத்துக்காட்டுகள் எண்ணற்றன. அதனுல் அடிகள் வாழ்ந்த காலத்தில், அடிகளார்க்கு இருந்த நன்மதிப்பும், புகழும், பிற மடாதிபதிகளையும் கவர்ந்தன. அந்த அந்த அறநிலையத் தலைவர்களும், அடிகளாரிடம் பேரன்பும் பெருமதிப்பும் உடையவர்களானுர்கள்.அடிகள் திருமடத்தில் நிகழும் சிறப்பு நிகழ்ச்சிக்குப் பிறகு அறநிலையங்களிலிருந்து சிறந்த பரிசுகளும் பிறவும் அந்த அந்த மடங்களிலிருந்து பிரதிநிதிகள் கொணர்ந்து சிறப்புச் செய்தனர். திருவாவடுதுறை மடத்துத் தலைவர்கள், அடிகளாரிடம் பேரன்பு காட்டி ஒழுகினுர்கள். ஓர்கால் சந்திக்க வேண்டும் என்ற எண்ணமும் இருந்தது. திருவருள்கூட்டி வைக்கவில்லை. இங்ஙனமாக அடிகளின் திருத்தொண்டு பல்வகைப்பட்ட மக்களையும் ஈர்த்துப் பணிகொண்டது.

அடிகள் வீரசைவ நன்மகனுய், வீரசைவ நல்லொழுக்கம் பூண்டு, ஆசாரியனுய், வீரசைவ மடத்துத்தலைவராய் பொறுப்பேற்றிருந்தாலும், அனைத்துச் சமயத்தாரிடமும், அன்புகாட்டி ஒழுகினுர்கள். கம்பராமாயணம், திருவாய்மொழி, அதனுரைகள, படிகள், ஸ்ரீசூக்தி, ஆசாரிய இருதயம், ஈடு இவற்றிலிருந்து மேற்கோள்காட்டி, அடிகள் ஸ்ரீ வைணவ உண்மைகளைக் கூறக்கேட்ட வைணவர் வியந்ததுண்டு. அந்நிகழ்ச்சி திருவரங்கம் பெரிய கோயிலிலேயே நடந்தது. சீதாகல்யாணம் என்ற தலைப்பில் அடிகள் பேசின போது, வைணவப் பெருமக்கள் தம்மை மறந்து, இப்படி இனி எப்போது யார்வாயிற் கேட்கமுடியும் என்று வியந்து பாராட்டினர். பல கிருத்துவ போதகர்கட்கு, சிவஞான போதம் முதலிய சமயப் பெருநூல்களை அவர்களும் உளங்குளிர ஏற்கும்படி சொல்வதைக் கேட்டு, அன்பு செலுத்தினேர் பலர். மகம்மதிய நண்பர்கட்கு, சமயப் பொதுக்கருத்துகளையும், சைவசமயப் பொதுத்தன்மையையும், விளக்கிக் கூறின சான்றும் உண்டு. அதனுல், அடிகள்பால் அன்புபூண்டொழுகிய இஸ்லாமிய நண்பர்களும் பலர். இப்படியாக அடிகள் சமய சமரசநோக்கும் சமுதாயப் பணியும் செய்து வழிகாட்டினுர்கள்.

அரசியல் அறிவில், காந்தீய ஒருமைப்பாட்டு உணர்வுடையவர்கள். கதர் அணிதல், மதுவிலக்கு, தீண்டாமை ஒழித்தல், உயிர்க்கொலையால் பலிகொடுத்தலை நீக்குதல் இத்தகைய பணிகளை அடிகள் உளமாரப் போற்றிக் கடைப்பிடித்தார்கள்.

### அடிகளாரின் மொழிக் கொள்கை

மொழித் துறையில், தாய்மொழியாந் தமிழின் தூய்மை, தனிமை, மென்மை, இனிமை, தொன்மை இவற்றின் சிறப்பியல்புகள் குன்றாது வளரவேண்டும், வளர்க்க வேண்டும் என்ற நியதி உடையவர்கள். பிறமொழிக் கலப்புக் கூடாது, ஆனால் பிறமொழி அறிவு இன்றி யமையாதது என்ற கோட்பாடு உடையவர்கள்.

1938–ல் இந்தி மொழித் திணிப்பு வந்தகாலத்தில், அடிகள், தம் கருத்தினை அரசியல் நோக்கின்றிப் பொதுநோக்கோடு, மொழி வேற்றுமை கருதாது இந்தியை நம் மக்கள் தாமே விரும்பிக் கற்கலாம். ஆனால் கட்டாயம் கூடாது. அதனால் பிணக்கும், தாய் மொழிக்குக் கேடும் வரும் என்று கனிந்துரைத்தார்கள்.

ஆங்கிலத்தைப் பற்றி, உலக அறிவும், அரசியல் அறிவும், பிற நாட்டுத் தொடர்பும், பல நாகரிக, பல மொழி பேசும், பல நாட் டாரோடு பழகுதற்கும் ஆங்கிலம் நம் இளைஞர் பயில்வது இன்றி யமையாதது. உலக விஞ்ஞானிகளினுடைய, அறிவனைத்தையும் நாம் பெறவேண்டும் எனில், நம் நாட்டு இளைஞர்கள் ஆங்கிலத்தில் அறிவு பெறவேண்டும் என்று ஓர்கால கல்லூரி மாணவர்க்கும், பல் கலைக்கழக மாணவர்க்கும் அருளுரை வழங்கினார்கள்.

### பல்துறைப் புலமையும் பீடும்

இப்படியாக அனைத்துத் துறையிலும், துறைபோய ஆன்றவிந் தடங்கிய சான்றோராய், எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழும் துறவோராய், அறுபத்தொன்பதாண்டு வாழ்வுபெற்ற நிறைநாட் செல்வராய், ஐம்பத்திரண்டாண்டு திருமடத்திற்கு அருளாட்சி செலுத்திய அருளசராய், அன்பருக்கன்பராய், அறிஞருக்கு அறிஞ ராய், அருளாளர்க்கு அருளாளராய், ஏழைக்கிரங்கும் ஏழை பங்கா ளராய், இளைஞர்கட்கு வழிகாட்டியாய், எல்லோர்க்கும் நல்லவராய் வாழ்ந்தார்கள்.

அடிகள் ஒரு துறவி; அடிகள் ஒரு நல்லாசிரியர்; அடிகள் ஒரு நூலாசிரியர்; அடிகள் ஓர் உரையாசிரியர்; அடிகள் ஒரு போதகா சிரியர்; அடிகள் ஒரு ஞானாசிரியர்; அடிகள் ஒரு சொற்பொழிவுப் பேராற்றலாளர்; அடிகள் ஓர் அரசியல் ஞானி; அடிகள் ஒரு சமுதாயத்தொண்டர்; அடிகள் ஒரு சமயப் பேரறிஞர்; அடிகள் ஒரு சமரச சன்மார்க்கத்தன்மையர்; அடிகள் ஒரு ஆன்மநேய ஒருமைப் பாட்டுரிமையாளர்; அடிகள் ஒரு மக்கட்பிறப்பில் தோன்றிய தெய்வம்; அடிகள் தமிழர் பெற்ற செல்வம்; அடிகள் என்றும் பிறவா இறவாப் பெருநிலைபெற்ற பெருவாழ்வினர் என்று இவ்வா றெல்லாம் கூறுவது மிகையாகாது.

எனவே இத்தனைத் தகுதியும் சிறப்பும் நிறைவும் பெற்று வாழ்ந்த பெருந்தகையை நாம் பெற்றேம் என்ற பெருமை இத்தமிழகத்துக்கும் தமிழர்க்கும் உண்டு. அடிகளாரின் மொழித்தொண்டினையும், சமயத்தொண்டினையும் நாமும், அடிகளைப் போன்ற அறநிலையத் தலைவர்களும் ஏற்ற பெற்றியாகக் கடைப்பிடித் தொழுகினல் சமுதாயம், சமயம், மொழி மேன்மையுறும், அஃதொன்றே அடிகளார் நினைவாக நாம் செய்யத்தக்கது.

'சிந்தை இடையரு அன்பும் திருமேனிதனில் அசைவும்
கந்தை மிகையாம் கருத்தும் கையில் உழவாரப் படையும்'

என்று காட்டுவார்கள் அப்ப மூர்த்திகள். கடலினின்றும் கரையேறித் தோன்றுத்துணை நாதரைத் தொழுது, **திருவதிகைக்கு** எழுந்தருளும் கோலத்தை,

'தூய வெண்ணீறு துதைந்த பொன் மேனியும் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவரு சிந்தையும் நைந்துருகிப்
பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச் செஞ்சொல்
மேய செவ்வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே'

என்று போற்றுவார்கள். அஃதே போன்று அடிகளார் அனைவர்க்கும் தெய்வ சிந்தனை உண்டாக்கும் திருவுருவத் திருக்கோலத்தோடு உருகிஉருகி நெக்குநெக்கு உள்ளுடைந்து கசிந்திட்டு அசும்பூறும் உழுவல் அன்பிற் பழவடிமைத் திறம்பூண்டு பாடிய, நாமும் கசிந்து பாடவேண்டும் என்பதற்காக வழிகாட்டிய, என்றும் மறக்க முடியாத திருமுறைப் பாடல்களிற் சிலவும், திருப்பாடல்களிற் சிலவும் கூறி நிறுத்துகிறேன்.

**திருச்சிற்றம்பலம்**

'என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே இவ்விருங்கடல் வையத்து
முன்னை நீபுரி நல்வினைப் பயனிடை முழுமணித் தரளங்கள்
மன்னு காவிரிசூழ் திருவலஞ் சுழிவாணனை வாயாரப்
பன்னி ஆதரித்து ஏத்தியும் பாடியும் வழிபடும் அதனுலே.'

'நீ நாளும் நன்னெஞ்சே நினைகண்டாய் யாரறிவார்
சாநாளும் வாழ்நாளும் சாய்க்காட்டெம் பெருமாற்கே
பூநாளும் தலைசுமக்கப் புகழ்நாமம் செவி கேட்க
நாநாளும் நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே.'

—ஞானசம்பந்தர்

'இன்றெனக் கருளி இருள்கடிந்து உள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்
நீயலாற் பிறிது மற்றின்மை

சென்றுசென்று அணுவாய்த் தேய்ந்துதேய்ந்து ஒன்றும்
திருப்பெருந் துறையுறை சிவனே.

ஒன்றுநீ யல்லை அன்றியொன் றில்லை
யாருன்னை அறியகிற்பாரே !'

' அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் எனையாட்கொண்ட போதே கொண்டிலையோ
இன்றோர் இடையூறு எனக்குண்டோ எண்தோள் முக்கண் [எம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே.

—திருவாசகம்

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியைக்
கரையிலாக் கருணை மாகடலை
மற்றவர் அறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மனமணி விளக்கை
செற்றவர் புரங்கள் செற்றஎம் சிவனைத்
திருவீழி மிழலை வீற்றிருந்த
கொற்றவன் தன்னைக் கண்டுகண்டு உள்ளம்
குளிர என்கண் குளிர்ந்தனவே

—திருவிசைப்பா

' அபசார நிந்தைபட் டுழலாதே
அறியாத வஞ்சரைக் குறியாதே
உபதேச மந்திரப் பொருளாலே
உனைநான் நினைந்தருள் பெறுவேனோ
இபமா முகன்றனுக் கிளையோனே
இமவான் மடந்தை உத்தமி பாலா
செபமாலை தந்தசத் குருநாதா
திருவா வினன்குடிப் பெருமாளே.'

—திருப்புகழ்

சோமகிரணப் பெருங்கருணை சுரந்த முகங்கள் ஓராறும்
சுருதிவழுத்தும் பன்னிரண்டு தோளும் நீபத்தொடை [மார்பும்
காமநிறச் செம்பட்டாடை காட்சிமருவரும் சிறு சதங்கை
கலித்த உபயத் திருத்தாளும் கடையேன் துதிக்கப் [பணிப்பாயே

சேமநிதியே சுரர்பதியே தெய்வத் தருவே மலர்மருவே
செறிபூரணமே ஆரணமே சிறியேன் உயிருக்
[கோருயிரே
பூமனறியாப் பிரணவத்தின் பொருளைப் பகரும் பூங்கிளியே
புனித நிறைந்த செவ்வேளே போரூர் முருகப்
[பெருமானே!

இல்லறத்தா னல்லேன் இயற்கைத் துறவியல்லேன்
நல்லறத்து ஞானியல்லேன் நாயினேன்—சொல்லறத்துள்
ஒன்றேனு மல்லேன் உயர்ந்த திருப்போரூரா
என்றே நான் ஈடேறு வேன்.

ஏதுபிழை செய்தாலும் ஏழையே னுக்கிரங்கித்
தீது புரியாத தெய்வமே—நீதி
தழைக்கின்ற போரூர்த் தனிமுருகா நாயேன்
பிழைக்கின்ற ஆறுநீ பேசி.

—சிதம்பர சுவாமிகள்

மூவிரு முகங்கள் போற்றி
முகம்பொழி கருணைபோற்றி
ஏவரும் துதிக்க நின்ற
ஈராறு தோள்போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேள்
மலரடி போற்றி அன்னான்
சேவலும் மயிலும் போற்றி
திருக்கைவேல் போற்றி போற்றி!

அருவமும் உருவும் ஆகி
அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப்
பிழம்பதோர் மேனி யாகிக்
கருணைகூர் முகங்கள் ஆறும்
கரங்கள்பன் னிரண்டும் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங்கு
உதித்தனன் உலகம் உய்ய.

ஆறிரு தடந்தோள் வாழ்க
அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க
குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க
யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க
வாழ்கஇப் புவன மெல்லாம்!

—கச்சியப்பர்

சீர்திருக் கோவலூர்தனில் ஆறுமாமுக தேசிகர் என்னப்
பேரிகை சீவகருணை வைராகம் பிரமஞானம் சிவபக்தி
ஈரிரண்டு ஈதோர் மேனிகொண் டென்றன் எண்ணிலி
[ஊர்களும் பேர்கள்
ஆருருவமும் தீர்த்து ஆண்டமா குருவே ஆறுமாமுக தயாநிதியே.

திருவெண்ணீ றணிகள் வாழி தெய்வ கண்டிகைத் தார்வாழி
பரவினர்க் கருளும் பஞ்சாக் கரம்பகர் பவளம் வாழி
மருமலர்ச் சரணம் வாழி மணிபுயக் குவளை வாழி
அருள்வழி விழியெங் கோமான் ஆறுமா முகனும் வாழி.

—குருவணக்கம்

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய் கதியாய் விதியாய்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.

—அருணகிரிநாதர்

# 4. தொண்டுகளின் தொகுப்பு

***சமூக நிலை***

அடிகள் வாழ்ந்த காலத்து, அயலார் ஆட்சியில் சமூகம் தன்னிலை யறியாது, பிறமொழி மோகத்திலும், பிறநாகரிக வேட்கை யிலும், அகப்பட்டுத் தமிழ்நாட்டின் பண்டைய பண்பாடு, மொழி நலம் அறியாது கிடந்தது. உண்மைநிலையில் நின்று உணர்த்துவார் இன்றி, அரசியல் குழப்பமும், சமயப்போரும், மொழி வெறியும், அலைத்துக் கொண்டிருந்த நாளது. அதனால், தமிழர் சமுதாயம், தம் முடைய உண்மையான பண்டைநிலை உணர்த்துவாரின்றிக் கண்ட தையும் கேட்டதையும் கடைப்பிடிக்க வேண்டிய நிலையில் இருந்தது. ஆனால், பாலைவனத்தில் ஒரு பசுமரம் போல, அடிகள் அதுகாலை தோன்றினார்கள். அடிகளுடைய ஒழுக்கமும், சமுதாயப் பற்றும், இரக்க குணமும், சமுதாயத்தைத் திருப்புவதற்கும், திருத்துவதற்கும் பெரிதும் பயன்பட்டன.

அடிகள் தம்முடைய சில கட்டுப்பாட்டு முறைகளை விடாப் பிடியாக வைத்துக் கொண்டிருந்ததே அடிகளுக்குப் பேருதவியாக வும் அமைந்தது; சிவிகை ஊர்தல், பிறரிடம் உண்ணாமை, சிவபூசை செய்தல், பலர்முன் வழிபாடு செய்தல் இவை, சமுதாயத்தில், ஓர் உயர்ந்த எண்ணத்தையும், கவர்ச்சியையும் உண்டாக்கின.

மனிதன் காலத்துக்கேற்ற முறையில் வாழ்வியலை மேற்கொள்ளு கிறான். சான்றோரும், அன்றைய சமுதாய நிலைக்கேற்ப, தம்மை மாற்றி அமைத்துக்கொண்டு தொண்டு செய்கிறார்கள்; செய்ய வேண்டும். ஆனால், ஒருவர், சிலர், தம் தனித்தன்மையால், எப்படிப் பட்ட நிலையிலும், வளைந்து கொடுக்காமலும், மாற்றமடையாமலும், தம் நிலையிலிருந்தே சமுதாயத்தை இழுத்துத் திருத்துகிறார்கள். அடிகள், அந்தச் சிலருள் ஒருவராய் விளங்கினவர். ஒரு மேற்கோள் (நிகழ்ச்சி உடனிருந்து கண்டது):

அடிகள், கொங்கு நாட்டுப் பயணம் மேற்கொண்ட போது கோவைக்குச் சிவிகையில் எழுந்தருளினார்கள். அதுபோது கோவை யில், திருவினர்கள், ரத்தின சபாபதி முதலியார், ரத்தின சபாபதிக் கவுண்டர், C. K. சுப்பிரமணிய முதலியார், C. M. இராமச்சந்திரன் செட்டியார், கிருஷ்ணசாமிச் செட்டியார், செங்கோட்டைய முதலி

யார் முதலிய அறிஞர்களும், செல்வர்களும் அடிகளார்பால் பேரன்பு காட்டி உடனுறைந்து சிறப்புச் செய்ததோடு, பல்லாயிர மக்கட்குப் பயன்படும்படி ஆங்காங்கே அடிகளை எழுந்தருளச் செய்து, அடிகளின் அருளுரைகளைச் சமூகத்துக்கு வாரி வழங்க வழிசெய்தனர், இறுதியில், அடிகளைச் கோவைப் பெருநகரில் பேருலாக் காட்சி (பட்டினப் பிரவேசம்) செய்து கண்டுகளிக்க எண்ணி, பெரிய. பல்லக்கு சேவை செய்ய வேண்டும், பலவகை உலகியல் ஆடம் பரங்களோடு உலாக்காட்சி நடைபெறச் செய்ய வேண்டும் என்று அடிகளாரிடம் விண்ணப்பித்தனர். அடிகள், அவர்களுடைய அன் பின் பெருக்கினைக் கண்டு மகிழ்ந்து சில உரை பகர்ந்தார்கள். அவை பின்வருமாறு :

''நான் சிவிகையில் வருவது ஒரு மரபு மாத்திரம் அன்று. எல்லா மாய் எங்கும் நிறைந்துள்ள முருகப்பெருமானுக்கு நான் அடியன். அவனையன்றி எனக்கென்று ஒருபொருளும், ஒருசிறப்பும், இல்லை. சிவிகையில் அப்பெருமானை எழுந்தருளச் செய்து, அவனடிக்கீழ் அடியேன் இருந்து வருவதாக மரபும், உண்மையும் உள்ளது.உலகம் மடாதிபதி சிவிகையில் வருகிறார் என்று நினைக்கிறது. ஆகையால் அடியேனுக்கு என்று ஒரு சிறப்பும் தனித்து வேண்டா. எல்லாம் முருகனுக்குச் செய்வோம் அவனுக்கு ஒப்பனை செய்து, வழிபாடு செய்து சமுதாயத்துக்கு நன்மை பெருகி அருள்நெறியில் நிறுத்தத் திருத்தப் பணிகொள்வதே, பணிசெய்வதே என்போன்றார் கடமை. அங்ஙனம் செய்வோமே'' என்று கூறினார்கள். கேட்ட அன்பர்கள் அடிகளின் தெளிவுரையால் கட்டுண்டு, அங்ஙனமே திருவிழாக் கோலமாக மாற்றித் தெய்வ மணங்கமழச் செய்தார்கள். அந்நிகழ்ச்சி இன்றும் கோவையில் பேசப்படுவதை அறியலாம். அங்ஙனமாகச் சிவிகையூர்வது எற்றுக்கு என்பதையும், அவர்கள் மேற்கொள்ள வேண்டிய பணி என்ன என்பதையும் குறிக்கொண்டு காத்தார்கள்.

***அடிகளார் காட்டிய மாற்றங்கள்***

சமுதாயக் கேடுகளை நீங்குவதற்குச் சிலர், தாமே சென்று தொண்டு செய்வர். புலாலுணவு, மது உண்ணல், சாதிவேற்றுமை போன்ற சமுதாயக்கேடுகளை நீக்கத் தொண்டுள்ளம் உடையவர்கள் அரசியலிலும், சமுதாய இயலிலும் தாமே முன்சென்று தொண்டு செய்வதைக் காண்கிறோம். அடிகள், மணம்பூண்டி, குமாரசாமிப் பிள்ளை, வடிவேல் முதலியார், தக்ஷிணாமூர்த்தி அடிகள் போன்ற மாணவர்களைக் கொண்டு, நாட்டில், பட்டி தொட்டிகளில் எல்லாம் சென்று தீண்டாமை விலக்கு, மதுவிலக்கு, புலாலுண்ணாமைஇவற்றை எடுத்துச் சொல்லிச் சமுதாயம் திருந்த வழிசெய்தார்கள், அவர்கள், சென்று திருத்திய ஊர்களுக்கு, அடிகள் செல்லும்போது, மக்கள், திரள்திரளாக வந்து, தமக்கு வழிகாட்டிய சான்றோரின், குரு நாதர் இவர் என வழிபடுவதைத் கண்டு, அவர்கட்கு அடிகள் ஆசியுரை கூறி அருளுவார்கள்.

### ஒரு நிகழ்ச்சி

தில்லைச் சிதம்பரத்தில், திருநாளைப் போவார் மரபில் வந்த, சகசா நந்தா என்ற துறவி, ஓமகுளத்தின், தென்கரையில், மடம் ஒன்று நிறுவி, மிகச்சிறந்த முறையில், தாழ்த்தப்பட்ட மக்கட்கு, சமய உணர்வு, ஒழுக்க மேன்மை, புலாலுண்ணாமை, கள்ளுண்ணாமை முதலிய உயர் நலங்காட்டி வளர்த்து வந்தார்கள். அடிகளார், அவர்களிடம் நிறைந்த பற்றும், மதிப்பும் உடையவர்கள். சகசா நந்தாஅவர்கள், காந்தியவழியில் ஸ்ரீராமகிருஷ்ணர் போதனையில் ஈடு பாடுடையவர், அன்றியும், தமிழறிவும், வேதாந்தக் கொள்கையும் உடையவர். அடிகள், அனைத்தையும் அறிந்து, அவர்பால் ஈடுபாடு டையவர்களாய், அவர்கள் தொண்டினைப் பெரிதென மதித்து அவர்களைத் தம் மடலாயத்துக்கு வரச்செய்து, வாழ்த்திப் போற்றி னார்கள். சகசாநந்தா அவர்கள் அடிகளாரின் பரந்த உள்ளத்தை யும், அவர்களுடைய முன்னேற்றக் கருத்துகளையும், கண்டு, அடிகளுக்கே உரிமை பூண்டு ஒழுகினார்கள். சகசாநந்தா தொண்டு' இன்று, சிதம்பரத்தில், மிக உயர்ந்தநிலையில் விளங்குவதற்கும். அடிகளின் ஆசியே காரணம் என்னலாம்.

### எளியவர் தொடர்பு

அடிகள், செல்வர்களையும் பயன்படுத்துவார்கள்; எளியவர்கட் குப் பயன்படுவார்கள். அடிகள், எளியவர்பால் காட்டும் கருணை, இரண்டு பிரிவினது. ஒன்று, அப்பொழுதைய பசிக்கு உணவு, இடைக்கு உடையளிப்பது. மற்றொன்று, எளிமை நீங்க, கல்வி கற்பித்து, என்றும் வறுமையினின்றும் பாதுகாப்பது. அடிகள், ஏழ்மை யுடையவர்களைச் சாதிப்பாகுபாட்டில் காண்பதில்லை. அவர்கள், மேற்கொண்ட மடாதிபதிகளின் நிலைக்கேற்பத் தம்முடைய, சிஷ்ய பரம்பரையிலுள்ள எளிய சிறுர்களைப் பெற்றோர் மூலமாக வரச் செய்து, உணவு முதலாயின ஏற்பாடு செய்தும் பகலுணவு மாத்திரம் கொடுத்தும், செல்வர்களைக் கொண்டு உடை முதலியன வழங்கியும் ஸ்ரீ பாடலேசர் தருமப்பாடசாலையில் படிக்குமாறு செய்து வந்தார்கள். அதனால், சாதி, சமய, வேறுபாடு நீங்கி, வறுமைப் பிணிதவிர்ந்து, நல்வாழ்வு பெற்றோர், இன்றும் பன்னூறு மாணவர்கள் உள்ளனர். அடிகளாருடைய உயர்ந்த, பரந்த மனப்பாங்கினை உணர்ந்த உயர் குடி மக்களும், அடிகளாருடைய, திருவருளுக்கு உரியரானோரும் உண்டு. திருப்பாதிரிப்புலியூருக்கடுத்த, உயர்ந்த திவ்ய தேசம் என்று வைணவர்களால் போற்றப்படும் திருவகீந்திரபுரத்தில், ஐயங்கார் குடும்பங்கள் பல. அவர்கள் வேதாந்த தேசிகர் காலத்தி லிருந்து, வடகலை தென்கலை பயின்று மேம்பட்ட வழிவழி மரபினர். அவர்கள் பலர், அடிகளாரிடம் உதவிவேண்டியும் அடிகள் போதிக்கும் பள்ளியில் பயிலக் கருதியும் வந்தனர். அடிகள் அவர்கட்கு இடம் தந்து, உதவியும் செய்தருளினார்கள். அதனால் மேம்பட்ட வாழ்வு பெற்றோர் பலர். அவர்கள், திரு. சீனுவாசன்,

திரு. வரதாசாரி போன்றவர்கள் கல்வித்துறையிலும், அலுவல் துறையிலும் அகில இந்திய புகழ்பெற்றுர்கள். அப்படி அடிகளா ருடைய திருவுள்ளம் பரந்து விளங்கியது.

***சமய வேறுபாடின்மை***

நம் நாட்டில் பெரிதும் இன்று காண்பது, இஸ்லாமியம், கிருத்தவம் என்ற பிறசமயங்களும், இந்து சமயம் என்ற சைவ வைணவு சமயங்களுமே. இவற்றுள், சைவ வைணவசமயம், இந்து சமயம் என்ற ஒன்றில் வந்து விடுவதால் அவற்றின் வேறுபாட்டு ணர்வு பெரிதும் காண்பதில்லை. ஆனல், இஸ்லாமியத்தையும், கிருத்துவத்தையும், புறச்சமயங்களாக இந்துக்கள் நினைப்பார்கள். அவர்களைப் புற இனத்தவராகக் கூடச் சமயவாதிகள் நினைப்பதுண்டு. மொழியால், நாட்டால், ஒன்றுபட்ட நிலையிலும், சமயத்தால் பிறராக நினைப்பது தவறு என்பது அடிகளின் கொள்கை. தெய்வம் உண்டு என்ற கொள்கை உடையவர் அனைவரும், ஒரு சமய வாதிகளே என்பது அடிகளின் முடிந்த முடிபு. பெயர் வேற்றுமையால், துறை வேறுபாட்டால், பொருள் முடிபு வேருய் விடாது என்பது அடிகளின் கருத்து. அதனை,'அப்பாலும் அடிச்சார்ந்தார்' என்ற போது காட்டியுள் ளேன். அடிகளிடம் சமய வேற்றுமை இல்லை என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு. அடிகளிடம் பற்றுள்ளமுடைய பல கிருத்துவ நண்பர்கள் படிக்கவும், அறவுரை அறிவுரை கேட்கவும் வருவார்கள். அவர்களுள், ஏசுதாஸ், என்ற பங்குதாரரும் (Father) மரியதாஸ், என்ற ஒருவரும் அடிக்கடி வருவார்கள்; பாடமும் கேட்பார்கள். அவர்களுள் மரியதாஸ் என்பவர், புதுக்கோட்டை அரசினர் பயிற்சிக் கல்லூரி முதல்வராகப் பணியாற்றினர். ஏசுதாஸ், திருக் கோவலூரர் வட்டப் பங்குதாரராய்ப் பணியாற்றினர். இவர்கள் இருவரும், சிறந்த மாணர்களாகப் பயின்றனர். ஆனல், இவர்கட்கு உள்ளத்தில் ஓர் அச்சம். இந்து சமயத் தலைமையிடம் மடம்; சமயத் தலைவர் அடிகள். நம்மை எப்படி அடிகள் நினைப்பாரோ, அங்கு வரும் மாணரும் பிறரும் என்ன நினைப்பரோ என்று தங்களுக் குள்ளேயே கவன்று படிக்க வரும்போது, அஞ்சிக் கூசி, வணங்கி ஒரு ஓரத்தில் நிற்பார்கள். பிற மாணவர்களாய நாங்களும் அவர்களை நோக்குவதுண்டு. அப்போது எங்கட்கெல்லாம், ஒருவகை யான பெருமிதம் ஏற்படும். அடிகள் ஒருநாள், சிவஞானபோத வகுப்பில், சென்னையிலிருந்து திருமடத்திற்கு வந்திருந்த திரு. குப்புசாமி முதலியார், திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் இவர் களிடத்திலும், அங்குள்ள பிற புதியவர்களிடத்திலும் அவ்விரு வரையும், அழைத்து முன்னிருக்கச் செய்து, அவர்கள் பெயர்களையும் கூறி, 'இவர்கள் இருவரும் சிவஞானபோதம் கேட்கின்றனர். சிவனடி யார் பெருமையையும், சிவன் பெருமையையும், கிருத்துவ சமயத்தில் இருந்து கொண்டே அறிந்தும் அனுபவித்தும் வரும், அப்பாலும் அடிச்சார்ந்த அன்பர்கள்' என்று கூறினர்கள். அப்போது அங்கு

உள்ள எங்கள் அனைவர்க்கும், அடிகளாருடைய சமய சமரச நோக்கும், அடிகளின் தெய்வக் கொள்கையும் வியப்பையும் பெருமையையும் உண்டாக்கின. இப்படிப் பல நிகழ்ச்சிகள்.

மடாதிபதிகளாய் வாழ்ந்தமையால், பிறர்போலத் தாமே சென்று செய்யவேண்டிய தொண்டுகளைத் தம்மிடம் வருவோர்பால் காட்டும் அன்பினாலும், பண்பினாலும், பண்பட்ட இன்சொல்லாலும், நடந்து காட்டும் செயலாலுமே, சமுதாயத் தொண்டினை அடிகள் மேற் கொண்டார்கள்.

### சொல்லாற்றலால் சமுதாயப் பிணிப்பு

ஒரு பேரவையில் பேசவருபவர்கள், அவையினரை விளிக்கும் போது, சீமான்களே ! சீமாட்டிகளே ! என்பர். ஒருசிலர், பெரியோர் களே, தாய்மார்களே! என்பர். வேறுசிலர், தோழர்களே! தோழிகளே! என்பர். மற்றும் சிலர் சகோதரர்களே ! சகோதரிகளே ! என்பார்கள். ஆனால், அடிகள் அவையோரை அழைக்கும் போது, 'மெய்யன்பர் களே !' என்றே எப்போதும், எங்கும் அழைப்பார்கள். இது குறித்து ஒருசமயம், அடிகளாரிடம் நிகழ்ந்த நிகழ்ச்சி நினைவிற்கு வருகிறது.

அடிகள், இதுபோது குளிர்தண்டலை என்று பெயருடைய குளித் தலைக்கு எழுந்தருளினார்கள். அவ்வூர், கடம்பந்துறை என்ற அகண்ட காவிரியின் தென்கரையில் உள்ள திருப்பதி. அங்கு சுப்பிரமணிய முதலியார் என்ற வழக்கறிஞர் சமயப் பற்றுடையாராய் விளங்கினார். அங்கே உயர்நிலைப் பள்ளியில், திரு. நரசிம்ம ஐயர், திரு. வேங்கட சுப்பையா என்ற தமிழாசிரியர்கள் இருந்தனர். இருவரும் தமிழ்ச் சங்கப் பால பண்டித தேர்வு பெற்றவர்கள், திரு. இராமசாமி ஐயர் என்பவர், வடமொழி தென்மொழி வல்லுநராய்ச் சமய அறிவு பெற்று, சிவபூசை முதலிய ஒழுக்க நெறியில் தலைசிறந்து விளங்கினார். இவர்கள் அடிகளை வரவேற்று உயர்நிலைப்பள்ளியில் சொற்பொழிவு நிகழ்த்தச் செய்தனர். அதுபோது, அடிகள், மெய்யன்பர்களே ! என்றழைத்து மூன்று மணி நேரம் அரிய, இலக்கிய நயம் கலந்த கம்பராமாயணப் பேச்சு நிகழ்த்தினார்கள். அப்போது, நிறைவில் தமிழறிஞர், திரு. சுந்தரராஜலு நாயுடு என்பவர், அடிகட்கு வணக்கமும் நன்றியும் கூறும்முகத்தான், அடிகள் அழைக்கும் மெய்யன்பர்களே என்ற விளி தனக்கு ஓர் உருக்கத்தை யுண்டாக் கிற்று என்று கூறிமுடித்தார். பின்னர்,அன்பர்கள் உடன்வர அடிகள், திருமடத்திற்கு எழுந்தருளினபோது, அன்பர்கள் அனைவர்க்கும், விளங்க வேண்டி மெய்யன்பர்களே ! என்றழைப்பதன் உட் பொருளைக் கூறினார்கள். அது பின்வருமாறு:

"பேசுபவன், தன் உணர்வையும். தன்னியல்பையும், தான் சமுதாயத்தில் எந்நிலையில் இருப்பவன் என்பதையும், அவர்களோடு தனக்கு எந்தவகையில் தொடர்பு என்பதையும், அவன் அழைக்கும்

விளிச்சொல்லே காட்டவேண்டும்.நான் ஒரு சமய நோக்குடையவன்; கேட்பவர்கள், பல சமயத்தவர் இருப்பர்; முதிர்ந்தோரும், இளையரும் இருப்பர். ஆண்களும் பெண்களும் இருப்பர். கற்றறிந்த நன்மக்களும், கல்லாதவரும் இருப்பர். அனைவர்க்கும் ஏற்புடைய விளியாக அமைந்தால் நல்லது. அதனுல் மெய்யன்பர்களே என்பது பொருந்துவதாக உள்ளது. மற்றென்று. பேசுபவன் அனைவரையும் உண்மையாக நேசிக்க வேண்டும். பேரவையில், இவர் உற்ருர், இவர் நண்பர், இவர் பெரியர், இவர் சிறியர் என்ற வேறுபல வேறுபாடுகள் பேசுபவனுக்கு இருக்கக் கூடாது. ஏன், அவன் பேச்சு, அனைவர்க்குமே அன்றி ஒருசிலர்க்கு மட்டும் அன்று. ஆகையால் அனைவரையும் உள்ளடக்கிய விளியாக மெய்யன்பர்களே என்பது உள்ளது. மற்றும் ஒன்று, யான் பூண்டுள்ள கோலம்; சிவசின்னங்கள் அணிந்த சைவக்கோலம். சிவன் உண்மை அன்பு வடிவினராய் உள்ளான் என்பது அனைவரும் அறிந்த ஒன்று, அந்த அன்பு அனைத்துயிரிலும் உள்ளது. என்னைப் போன்றவர்கள் அனைத்துயிரிலும் ஆண்டவனைக் காணவேண்டும் என்பது விதி. ஆகையால் கேட்கின்ற அனைவரிடமும் அந்த உண்மை அன்பு உண்டு என்பதனை முழுதும் புலப்படுத்தும் விளியாக மெய்யன்பர்களே என்பது தெளிவு செய்கிறது. எனவே, சமய உண்மைக்கும், உலகியல் தன்மைக்கும், என்னைப் போன்றவர்கள் வேறுபாடின்றிக் கடைப்பிடிக்க வேண்டிய முறைக்கும் ஏற்றதாக மெய்யன்பர்களே என்ற விளியைக் கையாள்கிரேம்'' என்று கூறினர்கள். கேட்ட நல்லோர் மிக மகிழ்ந்தனர்.

அடிகளுடைய பேச்சின் படிவம் ஒன்று காட்டவேண்டும் என்பது எனது அவா. அடியேன் அடித்தொண்டு செய்து கொண்டிருக்கும் போது, அடிகட்கும் திரு. வி. கவுக்கும் நெருங்கிய தொடர்பால், வடலூர் வள்ளலாரைப் பற்றிய பேச்சு அடிக்கடி நிகழும். ஒரு முறை அடிகள் வடலூருக்கு எழுந்தருளி, வடலூர் வள்ளற் பெருமான் காட்டிய சன்மார்க்கம் என்பதுபற்றி அருளுரை வழங்கினர்கள்.

***அடிகள் உரை*** (சன்மார்க்கம் என்ற தலைப்பின் தொடக்கம்) மாத்திரம்

"மெய்யன்பர்களே! இன்று நாம் பார்வதிபுரம் என்ற பழைய பெயருடைய வடலூர் என்று இதுபோது வழங்கும் உத்தரஞான சிதம்பரத்தில் கூடியுள்ளோம். தென்கைலாயம் என வழங்கும் தில்லைச் சிதம்பரத்திற்கு வடக்கே, மெய்ஞ்ஞான சபையாக அமைக்கப்பட்டதால் உத்தரஞான சிதம்பரம் என்ற பெயர் இராமலிங்க அடிகளால் இவ்விடத்திற்குச் சூட்டப்பட்டது. வடலூர் என்பது, தில்லைச் சிதம்பரத்திற்கு வடக்கே ஞானபூமியாக உள்ளது என்ற பொருளையுடையது. இந்த ஞானபூமியில் நாம் சில உண்மைகளைச் சிந்திப்போமாக; உலக வாழ்வை மேற்கொண்ட

நாம், சிலநெறிமுறைகளைக் கடைப்பிடித்து ஒழுக வேண்டும். அந்த நெறிமுறைகளை நாமே தேடிக் கொள்வதா ! அன்றி நம் முன்னோர் காட்டிய நெறியில் செல்வதா ! என்ற போது, நாம் எதனையும் நாமே அறிதற்குரிய அறிவும், ஆற்றலும் இலோம் ஆகையால், சான்றோர் சென்ற நெறிகளைத்தான் நாம் கடைப்பிடிக்க வேண்டும். நெறி, வழி என்பன நம் தமிழ்ச் சொற்கள். மார்க்கம் என்பது வடமொழி. நன்னெறி, நல்வழி என்ற தமிழ் நூல்களை அன்பர்கள் அறிவீர்கள், அவைகள், நாம் உலகில் எப்படி வாழவேண்டும் என்பதனைக் கூறுகின்றன. நம்முடைய உயிர் உய்திபெறுதற்குரிய வழியைக் கூறுவதும் நன்னெறிதான். அது உலகியல் கூறும் நெறியை விட உயர்ந்த நெறி ஆகையால், பெரு நெறி என்று பெயர். 'பெரு நெறி பிடித்து ஒழுகவேண்டும்' என்பது அடிகள் திருவாக்கு. இந்தப் பெரு நெறியை, நமக்குக் குருவாய் வந்து வழிகாட்டிய ஞானசம்பந்தப் பிள்ளையார் 'திருநெறிய தமிழ்' என்று அருளியிருக்கிறார்கள். நம் வள்ளற் பெருமான் ஞானசம்பந்தப் பிள்ளையாரைக் குருவாக வழி பட்டார். அவரினும், திருத்தணிகைப் பெருமானைச் சிறுகாலே ஆட் கொண்ட தேவ தேவனை வணங்கினார்கள். நம் தமிழ்நாட்டு நன்மக்கள், நமக்குப் பெருநெறியாகிய திருநெறி நம்முன்னோர் காட்டிய நன்னெறியாம் நல்வழி. நமக்குமுன்னோர் யார்? அது அளவு கடந்து செல்லும்; கால வரம்பின்றி, இட வரம்பின்றி நீண்டு செல் லும். சுருங்கச் சொல்லின், நாம் முதற்குருவாகிய, சிவபெருமானிடத் திருந்து வழிவழியாக, நமக்குரிய வழிகாட்டிகளாகிய குருமார்களைப் பெற்று அவர்கள் செல்லும் வழியில் நடந்து வருகிறோம். சிவபெரு மானுக்கு நந்தி என்று ஒரு பெயர் உண்டு என்பது நமக்குத் தெரியும் அப்பரம முதற்குரு, நமக்கெல்லாம், இப்படி வாழ வேண்டும் என் றும், வாழ்ந்து அவனடிப் பேற்றையடைய வேண்டும் என்றும் கூறிய நெறி குரு நெறி. குருவாகிய பெரியவன் சொன்ன நெறியாத லால் பெரு நெறி; நாமடைய வேண்டிய செல்வமாம் சிவஞானம் பேற்றையடையச் செய்யும் நெறியாகையால், திருநெறி. இந் நெறியே நாம் உண்மையாக அடையக்கூடிய நெறியாம். அதனால் உண்மைநெறி. உண்மையாகிய சத்தியத்தை அடையக்கூடிய நெறி; நெறி மார்க்கம். சத்தை அடையக்கூடிய நம் தமிழ்த் திரு நெறியாம், பெருநெறியே சன்மார்க்கம், இதனைத் திருமூலர் கூறிய,

'சைவ சமயத் தனிநாயகன் நந்தி
உய்வைத் தரச்செய்த ஒருநெறி தானுண்டு
தெய்வத் தமிழ்நெறி தானதுவே சன்மார்க்கம்
வையத் தவர்க்கு வருத்துரைத் தானே !

என்ற திருமந்திரத்தால் அறியலாம். ஆகவே மெய்யன்பர்களே சன்மார்க்கம், நம் முதற்குரவனாகிய சிவபெருமானால் உபதேசிக்கப் பட்டு, திருமூலர் வழியாக நம் வள்ளற் பெருமான் இராமலிங்க அடிகள் எடுத்துக்கூற வழிவழியாக வருகிறது.

***அடிகளாரின் அரிய கருத்துக்களடங்கிய சில உபதேச மொழிகள்***

(1) மக்களாகிய நாம் இருபெருஞ் செல்வமுடையவர்கள்: இம்மை இன்பமும், மறுமை வாழ்வும் உடையவர்கள். பிறப்பில் நம் பிக்கை உடையவர்கள், வினைப்பயனிலும் நம்பிக்கையுடைய வர்களாவர். வினைப்பயனை அனுபவிக்கவே பிறப்பு வருகிறது. இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம் என்ற எண்ணம் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக நம்மனோர் அனுபவத்தால் அறிந்தது. இம்மை இன்பத்தையும், மறுமை வாழ்வையும் மக்கள் அடைந்தே தீரவேண்டும், இவ்விரண்டையும் அடைவதற்குரிய வழியில் நடவாதவனை '*இரண்டும் கெட்டான்*' என்று கூறுவதை உலகியலில் பழமொழியாகக்கூட நாம் கேட்கலாம். பழ மொழி அனுபவம் நிறைந்த ஆன்றோர் கூறிய சொல். நம் மணிவாசகப் பெருமான் 'இரண்டு மிலித் தனியனேற்கே' என்று கூறி யுள்ளமை அறியலாம்.

(2) நந் தமிழ் நாட்டில் சில உண்மைகளை நம்முடைய பெரியோர்கள் குறிப்பினாலும் சொல்லிவைத்துள்ளார்கள். மக்களுடைய வாழ் வில் தம்முடைய வாழ்வினை இரண்டு பிரிவினதாக அமைத்துக் கொள்ள வேண்டும். முதலாவதாக, உடல் நிலை உயிர் நிலை இரண்டனையும் அறிந்து வாழ வேண்டும். மற்றொன்று, உடபோடு கூடிவரும் உயிர், தனக்குத் தலைவனை யறியும் அறிவு பெற வேண்டும். எப்படி உடலின்பத்தினை உயிரின்பமாக அனுபவிக்கிறோமோ அப்படியே உயிர் இன்பத்தினைக் கடவுள் இன்பமாக அனுபவிக்க வேண்டும். சடமாகிய உடம்புக்கு இன்ப துன்பம் இல்லை. ஆனால் உடலையின்றி, உடற் கூட்டுற வின்றி உயிர் இன்ப மடைவதில்லை, அதுபோலவே இறைவன் எல்லாமாய், எங்குமாய் இருப்பவன். அவனுக்கு விருப்பு வெறுப்பு இன்ப துன்பம் இல்லை. உயிர் அவனையறிந்து, அடை கின்ற அறிவின்பமே இறை இன்பம் என்பது, அ என்ற எழுத்து முதல் எழுத்து; முதலெழுத்தாதலால் இறைவனைக் குறிக்கும் எழுத்தாகும், அகரமுதலானை அணியாப்பனூரானை என்பது ஞான சம்பந்தர் திருவாக்கு, உ என்பது, உயிரைக் குறிக்கும் எழுத்து. நம் முன்னோர், ஒன்றிரண்டு மூன்று முதலிய எண்களுக்கு உயிர் எழுத்துக்களையும் மெய்யெழுத்துக்களை யுமே கருவியாகக் கண்டனர். அவற்றுள் அ என்பது எட்டு என்ற எண்ணைக் குறிக்கும்; உ, என்பது இரண்டு என்ற எண்ணைக் குறிக்கும். எவன் ஒருவன், மிக அறிவிலியாய் இருக்கிறானோ அவனை உலகோர் எட்டு இரண்டு அறியாதவன் என்பார்கள். எவன் ஒருவன், தன்னையும் அறியானாய்த் தலை வனையும் அறியாதவனாகிறானோ அவன், எட்டும் இரண்டும் அறியாதவனாகிறான். அதாவது, அகரமாகிய அனைத்துயிர்க்கும் முதல்வனாய இறைவனையும், உகரமாகிய உயிராகிய தன்னையும்

அறியாதவன்; அறிவிலி என்பது பொருள். இதனை மணிவாசகப் பெருமான்,

" எட்டும் இரண்டும் அறியாத என்னையே
பட்டி மண்டபம் ஏற்றினை ஏற்றினை "

என்று கூறியுள்ளமையால் நாம் நன்கறியலாம் என்று விளக்கு வார்கள். இப்படிப் பலப்பல.

*சொற் பொருள் விளக்கும் பாங்குக்கு ஓர் எடுத்துக் காட்டு*

மெய்யன்பர்களே ! நாம் உலக வாழ்வில் மக்களாகப் பிறந்திருக் கிறோம். எண்ணிலாத நெடுங் காலம் எண்ணிலாத பல பிறவி எடுத்து இங்கு அவை நீங்கி இம்மானுடத்தில் வந்து வாழ்வு பெற் றுள்ளோம். நம்முடைய ஆசாரிய மூர்த்திகளுள் பெரியவர்களாய் விளங்கின அப்பமூர்த்திகளும் ' வாய்த்தது நம் தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின் ' என்று நமக்கு உபதேசம் செய்தருளியிருக்கிறார்கள்.

' அரிது அரிது மானுட ராதலரிது !' 'எண்ணரிய பிறவிதனில் மானுடப் பிறவிதான் யாதினும் அரிது அரிது ' காண் ' என்பன ஆன்றோர் வாக்குகள். அத்தகைய அரிய பிறவியை எடுத்த நாம் செலுத்த வேண்டியதும் பெற வேண்டியதுமாகிய இரண்டு உண்டு, நாம் அனைவரிடத்தும் அனைத்து உயிரிடத்தும் அன்பு செலுத்த வேண்டும். நம்மினும், பெரியோரிடத்துப் பணிந்து அறிவு பெற வேண்டும். அன்பைச் செலுத்தி அறிவைப் பெறுதலே பிறவியின் பயன். எந்த அளவு, பயன் கருதாது, தொடர்பு கருதாது அனைத் துயிரிடத்தும் அன்பைச் செலுத்துகிறோமோ அந்த அளவு நாம் இன்ப மடைகிறோம்.

" அன்புற் றமர்ந்த வழக் கென்ப வையகத்து
இன்புற்றார் எய்தும் சிறப்பு "

என்பது பொய்யா மொழி யன்றோ. அன்பு வளர்ச்சி அருளாக மாற்ற மடையும். அருள் இறைவனுடைய ஆற்றல். அதனை நம்மிடத் திருந்தே வளர்த்துக் கொள்ள நமக்கு இறைவன் வாய்ப்புடைய இந்த மனிதப் பிறவியை அருளி யிருக்கிறான். இந்த வாய்ப்பினை நாமிழத்தல் கூடாது. அதனால்தான் திருமூலர்,

" அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிந்திலார்
அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருப் பாரே "

என்றருளினார். அன்பு என்பது உயிரிடத்து அமைந்துள்ள இறை வனுடைய அருட் பண்பு. விறகினிடத்து அமைந்துள்ள நெருப்

பிணைக் கடைதலால் வெளிப்படுவதுபோல பிறர் துன்பங்கண்ட போது இரங்கி உதவி செய்யும் செயலால் அவ்வன்பின் முதிர்ச்சி யாகிய அருட் பண்பு வெளிப்படும். அங்ஙனம் வெளிப்படும் அருட் பண்பினை நம்மனோர்க்கு வெளிப் படையாகக் குறிக்கொண்டு காக்க வேண்டும் என்ற அருள் உள்ளத்தால், மந்திர மொழியாகிய ஐந்தெழுத்தில் இரண்டாவது எழுத்தாகிய ‘ வ ’ என்ற எழுத்தால் சான்றோர் குறித்துள்ளார்கள். அதனை நாம் அடைவதற்கு முயற்சிக்க வேண்டும். அப்போதுதான் அறிவு வடிவமாகிய ஆண்டவனைக் காணவும் அனுபவிக்கவும் முடியும்.

“ அவனருளே கண்ணுகக் காணின் அல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணுதே ”

என்பது திருநாவுக்கரசர் பெருமான் திருவாக்கு. ஆகையால் நாம் அவனருளைப் பெறுவதற்குப் பாத்திரமாய் விடுவோமானல் நமக்கு அவனுந்தன்மை அடைய முடியும். அறிவே அவன் வடிவம். உலகியலில், ‘ சத்திய ஞானம் ’ என்பார்கள் ; சத்தாய் இருக்கிற இறைவன் தடையிலா அறிவாய் உள்ளான் என்பது அதன் பொருள்

‘ அறிவு அவன் உருவமாகும், அருள் அவன் சத்தியாகும் ’ என்பது சிவஞான சித்தியார். அதனல், அறிவைப் பெற நாம் முயற்சி செய்ய வேண்டும். அறிவுதான் உயர்வைக் கொடுப்பதும் உயர்வாக; உள்ளது. அறிவுதான் அனைத்தினும் உயர்ந்தது, அனைத்தினு. உயர்ந்த இறைவன் அறிவு வடிவமாயுள்ளான்.

“ உயர் வற உயர்நலம் உடையவன்
மயர்வற மதி நலம் அருளினன் ”

என்று நம்மாழ்வாரும் அருளிச் செய்தார். எல்லாச் சமயத்தார்க்கும் ஒப்ப முடிந்த கருத்து, இறைவன் அறிவே (ஞானமே) வடிவாய் இருக்கிறுன் என்பது. இருளினின்றும் நாம் ஒளி பெற்ற போது அனைத்துப் பொருளையும் காணுமாப்போல அறியாமை இருட்டு நீங்கினபோது, நாமே அனைத்தையும் அறியும் அறிவாந் தன்மை பெறுகிறோம். அதனைத்தான் நம் முன்னோர் சிவமாந்தன்மை பெறுதல் என்றும், சிவப் பேறு என்றும், முத்தி என்றும், வீடுபேறு என்றும் கூறினர். நாம் அறிவைப் பெற்றுல் வேறு பெற வேண்டியது ஒன்றில்லை. அதனை நமக்கு உலகியல் கூறிப் பொருளிது என்று கூறவந்த திருவள்ளுவ நாயனர், ‘அறிவுடையார் எல்லாம் உடையார்’ என்று கூறினர். அதனல் அத்தடையிலா ஞானப் பேற்றை உணர்த்த ‘ சி ’ என்ற எழுத்தால் குறிப்பிட்டுள்ளனர். எனவே, சி, வ, என்ற இரண்டும் எழுத்தும், நமக்கு ஞானத்தையும் அருளையும்

குறிக்கும் என்பதனை இதுகாறும் நாமறிந்தோம். இதனைத்தான் நம் முன்னோர்கள், இளைஞர்கட்குச் சொல்லும்போது,

'நம்முடைய கடமை நம் பையனுக்கு இரண்டெழுத்து சொல்லிக் கொடுத்தால் போதும்' என்று பண்டைக் காலத்தில் சொல்லிப் போந்தனர். இன்றும் நம்மிடையே அந்த வழக்கு உளதாயினும், அதன் உட்பொருள் இத்தனைப் பெருமையுடையது என்பதனை நாமறிதல் வேண்டும். எனவே, சிவ என்ற இரண்டெழுத்தினைப் பயின்றால், அருளும் அறிவும் வடிவமான அம்மையப்பருடைய திருவருளைப் பெற்றுய்யலாம் என்று அருளுரை வழங்குவார்கள்.

இப்படியே அடிகளார் சமய உண்மைகள், சமுதாயத்தில் எப்படி வேரூன்றித் தழைத்து வளர்ந்து காலப் போக்கில் பொரு ளற்றுப் போய்விட்டதனை மீண்டும் புதுப்பித்து வழிகாட்டினார்கள் என்பதனை எண்ணற்ற விளக்கங்களால் கூறலாம். இனி அடிகளாரைப் பற்றிய சில குறிப்புக்கள் கொடுக்க எண்ணுகிறேன்.

அடிகள் சமுதாயக் கண்ணோட்டத்தில், ஒருவரே பலவகை நிலையில் காட்சியளித்தார்கள். அவரவர் நிலைக்கேற்பவும் அவரவர் விருப்பத்திற் கேற்பவும் பயன்பட்டார்கள். நற் செயல்கள் அனைத் திலும், அவர்கள் தொடர்பு அன்பர்கட்கு உண்டு. இழப்பாகிய இறப்புக்கு மாத்திரம், எவ்வளவு கண்ணனையார் ஆயினும், செல்வதோ, இரங்கல் எழுதுவதோ அறவே தவிர்த்தார்கள். அடிகள் இறப்பினை உயிர்க்கு ஓய்வு என்று கருதுபவர்கள். ஆகையால், துறவு நிலைக்கேற்பத் திருமடத்தில் உள்ளவர்கட்கு மரணம் ஏற்படினும் மரணத்திற்கு முன்னரே அப்புறப்படுத்தி ஆவன செய்து, அடிகள் கலந்து கொள்ளவே மாட்டார்கள். அதனை இறுதிவரை கடைப் பிடித்தார்கள். அடிகளுடைய இறுதி நிலையும்கூட அவர்கள் திருவுள்ளப்படியே திருமடத்தில் நிகழாது போயிற்று. அடிகள், வழி பாட்டின் முடிவில், ஆதிசங்கரர் அருளிய சுப்பிரமணிய புஜங்கம், கந்த புராணம், திருப்போரூர் சந்நிதிமுறை கட, கேந, முண்டக, தைத்ரீய, ஈசாவாசிய, சாந்தோக்கிய உப நிடதங்களில் உள்ள மந்திரங்கள், கந்தரலங்காரம், கந்த ரநுபூதி முதலிய நூல்களிலிருந்து மந்திரங்களையும், பக்திப் பாடல்களையும், திருமுறைகளில் கனிந்த பாடல்களையும் மனமுருகிப் பாடி, கண்ணீருகுத்து நெஞ்ச நெக்குருகி நிற்பார்கள். அதுபோது இறுதியாக, உயிர் நீங்குந் தறுவாயில் தனக்கு எந்த விதமான, பற்றும், பற்றுடையாரும் உடனிருக்க லாகாது என்று, முருகப் பெருமானுடைய திருவருளை வேண்டு வார்கள். அவர்கள் வேண்டும் அருட் பாடல்களில் பல நினைவுக்கு வருகின்றன. ஒன்று,

" கூகா என என்கிளை கூடி அழப்
போகா வகை மெய்ப்பொருள் பேசியவா

நாசாசல வேலவ நாலுகவித்
தியாகா சுரலோக சிகாமணியே"

என்ற திருப்பாட்டு அடிகள் வழிபாட்டின் முடிவில் கூறும் அருட் பாட்டு. அடிகட்கு அங்ஙனமே, திருவருட்பேறு கிடைத்தமை அனைவரும் அறிவர்.

அடிகளார், தாம் வாழ்ந்த காலத்தில் தமக்குப் பின்னால் வரன் முறையாகப் பேசவும் பாடஞ் சொல்லவும் மாணவர்களை உருவாக் கினார்கள். அடிகள் பாடஞ் சொல்வதற்கு முன், தம் வழிபடு தெய்வத்தை வணங்கி, ஒரு பாடலை இறுதியில் சொல்லித்தான் பாடந் தொடங்குவார்கள்,

" தந்தைதாய் ஆவானும் சார்கதியிங் காவானும்
அந்தமிலா இன்பநமக் காவானும்—எந்தமுயிர்
தானாகு வானும் சரணாகு வானும் உயிர்க்
கோனாகு வானும் குரு "

என்ற பாடல்தான் அது. அவர்கள் தம் குருவை வணங்கித் தம்மிடம் பயிலும் மாணவர்கள் தம் குருவை இப்படி வழிபடவேண்டும் என்பதனைக் காட்டும் பாங்கு அது.

உரைக்கப்படும் பொருள் உள்ளத் தமைத்து விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து கொள்வோன் கொள்வகை யறிந்து, கோட்டமில் மனத்து நூல் கொடுக்க வேண்டும் என்ற போதகாசிரியர் இலக்கணம் அடிகளிடம் அப்படியே மிளிரும். பாடம் சொல்லும்போது, தன்னுரையானும் பிற நூலானும் ஐயம் அகல, கருத்துரை பதவுரை கூறித் தெளிவு செய்யும் முறையும், ஒரு பாட்டுக்குப் பாடஞ் சொல்லி முடிந்ததும், அப்பாட்டினைக் கேட்ட மாணவனைப் படிக்கச் சொல்லி, அவன் படிக்கும் பாங்கிலேயே, விளங்குகிற தன்மையும் விளங்கா இடமும் அறிந்து விளங்கா இடத்தை மறுமுறையும் விளக்கிக் கூறும் பாங்கும், இக் காலத்தில் காண முடியாத ஒன்றாகும். அதனால் அடிகள் ஒரு நல்லாசானாக, விளங்கினார்கள். அவர்கள்பால் பயின்ற நன்மாணாக்கர் நாட்டில் பாடஞ் சொல்லும் பாங்கில் மரபுகாத்தனர். பண்டைக் குரு குலத்தில் மாணவர் எப்படிப் பயிலவேண்டுமோ அப்படி அடிகளார் தம்மிடம் பயிலும் மாணவர்களின், குடிப்பிறப்பு, செல்வம் வறுமை வேறுபாடு கருதாது அனைவரையும், ஒரே சமமாக எண்ணிப் பணி கொண்டமையும், பயிற்றுவித்தமையும் நம் நாட்டிற்கும், சமுதாயத் துக்கும் எத்தனையோ நன்மைகளை விளைத்தன.

***உரையாசிரியர்***

அடிகள், காமாக்ஷி அம்மையார்க்குத் திருப்போரூர் முருகன் பிள்ளைத் தமிழைப் பாடஞ் சொல்லிக் குறிப்புரையும் தந்து, அதனை

அச்சிடச் செய்தார்கள். அந்தக் குறிப்புரை, சிலப்பதிகாரத்திற்குப் பழைய உரைகாரர் உரை எழுதினதைப் போன்று அருஞ்சொற் பொருளும், சாத்திர நுட்பமும், இலக்கிய மேற்கோளும், தெளிவும் உடையதாய் அமைந்துள்ளமையை அறியலாம். கந்தபுராணத்துக்கு அடிகள், தம் கைப்படியில், பல நுட்ப உரைகளை ஆங்காங்கே குறித்து வைத்துள்ளார்கள். அந்நுட்ப உரைகள், இன்னும் திருமடத்தில் உள்ளன. கந்தர் சஷ்டிச் சொற் பொழிவு என்ற நூல், அடிகள் கூறிய அரிய கருத்துரைகளைக் குறித்து வைத்து எழுதிய ஒன்றுதான் என்பதை நாமறிவோம். அடிகள், பெரிய புராணம் பாடஞ் சொன்ன காலத்து அடியேன் குறித்துள்ள குறிப்புரைகள் உள்ளன. ஒன்று காட்டுவேன். முதல் முதலாகத் திருநீலகண்டர் புராணம். அதில், அடியார், தம் மனைவியார்மாட்டு, போகப் புணர்ச்சி கருதிச் செல்லும் போது, அம்மையார், 'எம்மைத்தீண்டு வீராயின் அந்தத் திருநீலகண்டம் என்றார்' என்ற இடத்தில், தீண்டு வீராயின் என்பதற்கு அடிகள் கூறிய உரை மிக நுட்பமானது. தீண்டுதல், நஞ்சுடைய பாம்பின் செயல். தீ ஒழுக்கம் பூண்ட அடியாரைத் திருத்த அம்மையார், நீர் எம்மைப் புணரக்கருதுவது, எமக்குப் பாம்பு தீண்டுதலாய நஞ்சம் போன்றது என்ற உட்பொருளை யுடையது என்று கூறிய அழகும், ஆழமும், சொல் லாற்றலாற் பெறும் பொருள் நயமும் வியக்கத்தக்கது. அதற்கேற்ப அம்மையார், 'திருநீலகண்டம்' என்ற ஆணைச் சொல்லும் அமைந் திருத்தலைக் காட்டி மகிழச் செய்தார்கள். ஆகையால் அடிகளார்; பண்டைய நச்சினார்க்கினியர்; பரிமேலழகர், அடியார்க்கு நல்லார் உரையாசிரியர், போன்ற பேருரையாசிரியர் என்பது விளங்கும்.

பின்னிணைப்பு :

## 1. குரு மரபு

1, முதல்வர். ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்,

தோற்றம் : கலி. 4774. ஆனந்த—கார்த்திகை. கிருத்திகை நாள். மறைவு : கலி. 4870. விகுர்தி—மாசி. 27. அநுடம் வியாழன். ஆண்டுகள் : 97, (வயது);

2. சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்,

தோற்றம் : தெரியவில்லை.
மறைவு : நந்தன—கார்த்திகை, அசுவனி-மூன்றும் செவ்வாய்.
பட்டத் தெழுந்தருளிய காலம் 63 ஆண்டுகள்
(ஆட்சியாண்டுகள்)

3. சிவசண்முக சங்கண வசவ மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்.

தோற்றம் : ?
மறைவு : கீலக. புரட்டாசி. சோமவாரம் (இறுதி)
பட்டத்திருந்தகாலம் 16 ஆண்டுகள் (ஆட்சியாண்டுகள்)

4. சிவசண்முகபரசிவ மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்

தோற்றம் :
மறைவு : விரோதி ஐப்பசி 26 ஞாயிறு
ஆட்சியாண்டு : 41.

5. சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்
(ஞானியாரடிகள்)

தோற்றம் : ஸ்ரீமுக. வைகாசி 4உ வியாழன் மூலம் (7—5—1873)
பட்டம் ஏற்றது : விரோதி-ஐப்பசி. 26. ஞாயிறு (10—11—1889)
மறைவு : விஷு. தை. 19. ஞாயிறு. பூசம். (1—2—1942)
ஆட்சியாண்டுகள்: 53.

6. சிவசண்முக சத்திய ஞான சிவாசாரிய சுவாமிகள்.

தோற்றம் : விரோதி. பங்குனி !! பானுவாரம் பரணி.
(23—3—1890)

பட்டம் பெற்றது : விஷு. தை. (1—2—1942)
மறைவு : விகுர்தி-கார்த்திகை 29. வெள்ளி-சதயம் (15—12—1950)

ஆட்சியாண்டுகள் : 9

7. சிவசண்முக ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்.

தோற்றம் : கீலக. சித்திரை 3. புதன். அஸ்தம் (15—4—1908)

## 2. செய்தன சில

I. நிட்டாநுபூதி சாரம், மேன்மைப் பதிகம், சதுர்லிங்க சத கோத்ர சதகம் — ஓலைச்சுவடிகளாக இருந்தவற்றை அச்சிட்டது. ஐந்தாம் குரவரின் கிருத்திகைச் சொற்பொழிவு அச்சிட்டது.

II. ஆரணி பாலசுப்பிரமணியர் கோயிலை முதன் முறையாய் புதுப்பித்துக் குடநீராட்டு நடத்தியது (31—5—1964)

III. திருக்கோவலூர் ஆதிமூர்த்திகளின் திருக்கோயில் திருப் பணி.

# மதிப்புரை நூல்களும் மதிப்புரையாளர்களும்

## வள்ளலார் மறைந்தது எப்படி!

[சாகாக்கலை ஆராய்ச்சி]

**வள்ளலார் மறைந்தது எப்படி!** சாகாக்கலை ஆராய்ச்சி: ஊரன் அடிகள், சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம் வெளியீடு, சமயபுரம், திருச்சிராப்பள்ளி மாவட்டம்; வடலூர், தென்ஆர்க்காடு மாவட்டம், முதற் பதிப்பு: 1976 பக்கம், 208, விலை ரூ. 8.

வடலூரர் வள்ளலார் இராமலிங்க அடிகள் 1874 ஆம் ஆண்டு ஜனவரி 30–ஸ்ரீமுக வருஷம் தைப்பூச நாள் நள்ளிரவில் சித்திபெற்ருர். மேட்டுக்குப்பம் சித்திவளாகத் திருமாளிகையில் அடிகளார் உடம் போடே சித்திபெற்றது ஓர் அற்புதம். உடம்போடு இறைபதம் எய்தும் அற்புதத்தினையே சாகாக்கலை என்று ஊரன் அடிகள் போற்றுகிருர்.

மனிதன் உடம்போடு மறைய முடியுமா? முடியுமாயின் அதற்கு என்ன செய்யவேண்டும்?- என்பவற்றையே பொருளாகக் கொண்டு எழுதப்பெற்றது இந்நூல். நம்நாட்டு ஞானிகளிற் பலரும் சாகாக் கலை சித்திக்கப்பெற்றவர் என்பதனை ஆன்ருேர் அருளிச்செயல் களின் வாயிலாக நிறுவிக்காட்டியுள்ளார் ஆசிரியர் ஊரன் அடிகளார்.

திருமுறைகளிலும் பிற சமய நூல்களிலும் உடம்போடு முத்தி யெய்துதலைக் குறித்து இலைமறைகாயாகக் காணப்படுகின்ற செய்திகளை யெல்லாம், துருவித்துருவிக் கண்டறிந்து ஏற்ற வகையில் அவற்றை யமைத்து விளக்கும் ஆசிரியரின் ஆய்வுத்திறம் பெரிதும் போற்றத்தக்கது. திருமுறைகளுக்குப் பல ஆண்டுகள் பின்வந்த திருவருட்பா எந்த வகையில் முந்தையோர் கருத்துகளைத் தெளிவு பட விளக்கி வளர்நிலையில் நமக்குப் பயன்படுகிறது என்பதையும் பற்பல சான்றுகள் காட்டி விளக்கம் செய்கின்ருர்.

அநித்தியமாகிய உடம்பு நித்தியமாகிய விடவேண்டும் என்பதை அப்பரடிகள் முதலியோர் அருள்வாக்குகளால் மெய்ப் பித்துக் காட்டியுள்ளார். நம் நாட்டு வாழ்ந்த சித்தர்களின் வழியும் இதுவே என்பதும் தெளிவுறுத்தப்படுகிறது. இந்தநிலை அடைவதற்கு

நித்திய கருமவிதிகளை அனுட்டித்துப் பின்னர்ச் சிறப்பு நிலைக்குரிய வழிகளில் பயின்று பெருவாழ்வு பெறலாம் என்பதனைப் படிப் படியாய் எடுத்துக்காட்டிச் செல்லுகிறது இந்நூல்.

மண்ணிடைப் பிறந்து மண்ணுய் மாய்ந்துவிடாமல் மன்பதை உய்திபெறுவதற்கான சன்மார்க்க அறிவினையூட்டுகின்ற இந்நூல் ஆன்ம ஈடேற்ற அவாவுடையார்க்கு வழித்துணையாம். இத்தகைய பெருநூலை வடித்துத்தந்த ஆசிரியர் ஊரன் அடிகளும் வள்ளலார் வழியில் செல்பவராதலின் கல்வியறிவும் அனுபவமும் கொண்டு அவர்தரும் செய்திகள் மிகவும் பெருமைபடைத்தன என்பதில் ஐயமில்லை.

பொருளடக்கப் பகுதியினை உற்று நோக்கிய அளவிலேயே இந்நூலாசிரியர் தாம் எடுத்துக்கொண்ட பொருளை எத்தனையளவு நுணுகி ஆராய்ந்து செல்கிருர் என்பது நன்கு புலப்படும். பின்னிணைப்பாக இரமணசாஸ்திரியாரின் ஆங்கில ஆய்வுக் கட்டுரையும், பாரதியார் எழுதிய மரணத்தை வெல்லும் வழி என்பதும் தந்திருப்பது மிகப் பொருத்தமே. பொதுவாக எங்கு நோக்கினும் இந்நூல் முழுமையுமே மரணமில்லாப் பெருவாழ்வு வாழ வழிகாட்டுவதாகும்.

வள்ளலார் வழியொழுகும் சன்மார்க்கர்க்கு இராமலிங்க அடிகளாரின் பெருநெறியை அறிவதற்குப் பெரிதும் துணைநிற்பது இந்நூல். எனவே ஆன்ம ஈடேற்றத்தில் அவாவுடையோர்க் கெல்லாம் இஃது ஓர் அரும்பெறல் செல்வமாகப் போற்றத்தக்க தாகும்.

—மு. சண்முகம் பிள்ளை

## திரு. வி. க. உருவமைப்பு நாண்மலர்

தமிழ்த் தென்றல் தி. வி. க வின் உருமைப்புப் பெருவிழா 2-12-1973 இல் அவர் தோன்றிய ஆரூரில் கொண்டாடப்பட்டபோது, திரு.வி. க. உருவத்திறப்புச் செய்யப்பட்டு வெளியிடப்பட்ட சிறப்பு மலரே திரு. வி. க. உருவமைப்பு நாண்மலராகும். இம்மலர் (1) அல்லியிதழ் (படையல், வாழ்த்து, தலைவர் கட்டுரை, சிற்பி, குறிப்பு, இயைபுடைய படங்கள்), (2) திரட்டிதழ் (திரு. வி. க. வின் நூலுணர்த்தும் தனிச் செய்திகள், (உடலிலிருந்து உள்ளம் வரை இருந்த திருந்து முறைகள், காலமும் கருத்துக் கோலமும்), (3) குடும் பிதழ் (திரு. வி. க. வின் உள்வாழ்க்கை, வெளிவாழ்க்கை), (4) உடனுறை பேற்ருளரிதழ் (திரு.வி.க.வின் பண்புகள், கொள்கைகள், நடத்தைகள், நிகழ்ச்சிகள், பல துறையாற்றல்கள்), (5) தகுதமிழ் அறிஞரிதழ் (திரு. வி. க.வின் பேச்சாற்றல், எழுத்துத்

திறன், பொதுவுணர்வுகள்), (6) பாட்டிதழ் (பாவேந்தர், பாவலரேறு இவர்களின் பாராட்டுப் பாட்டு), (7) தேர்ச்சியிதழ் (எழுத்துச் சீர் திருத்தம் பற்றிய அறிஞர் கருத்துத் தொகுப்பும் முடிப்பும், மலர்த் தேர்ச்சியில் வென்ற முப்பாடல்கள்), (8) நூலகவிதழ் (திரு. வி. க. வின் நூற்சுருக்கங்கள்), (9) பயிற்றகவிதழ் (இம்மலர் வெளியிட்ட இயற்றமிழ்ப் பயிற்றக வரலாறும் பிறவும்), (10) புல்லியிதழ் (கணக்கீடு, நன்றியுரை) ஆகியன கொண்டு மணக்கிறது.

வடபுலத்தே காந்தியடிகளைப் போலத் தென்புலத்தே திரு. வி. க. திகழ்ந்தார் எனத் தவத்திரு குன்றக்குடி அடிகளார் தமது கட்டுரை-யில் விளக்கியுள்ளார். 'ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாடி' என்னும் பாவைப் பாடல் திரு. வி. க. வின் கையெழுத்து வடிவிலேயே வெளியிடப்பட்டுள்ளமை பாராட்டத்தக்கது.

உடல், பழக்க வழக்கங்கள், நூலாற்றுப்படை, சிறை எண்ணம் பெயர் வழக்குகள், நிறைவேறிய நினைவுகள், மறுபிறப்பு ஆகிய திரு. வி. க. பற்றிய திகழ்நலக் குறிப்புகள் பயனுடையவை. திரு. வி. க. குடிமரபு அட்டவணை ஓர் அரிய முயற்சி. திரு. வி. க.— வ. உ. சி. ஒப்பீட்டுக் குறிப்புகள் சிறப்பானவை. மேலும், திரு.வி.க. அவர்கள் வ. உ. சி. படத்தைத் திறந்து வைத்து நிகழ்த்திய சொற் பொழிவினை 'இறுதிநாள் எண்ணப் போக்கில் ஒரு பொழிவு' எனத் தேர்ந்து வழங்கியிருப்பது போற்றற்குரியது. திரு. வி. க. வின் வாழ்க்கைக் குறிப்பினின்றும் சில முனைத் தொகுப்புரை திரட்டப் பட்டுள்ளமை பயனிறைந்தது.

திரு. வி. க. வின் குடும்பத்தைச் சார்ந்த மூவர் (இராமலிங்கம், வனசாட்சி, உலகநாயகி), 'திரு. வி. க. வின் மெய்யுணர்வு', 'தனி வாழ்க்கை', 'பொது வாழ்வு' குறித்து மூன்று சிறந்த கட்டுரைகளைப் படைத்துள்ளனர்.

மறைமலையடிகளார் 28-3-1916 இல் திரு. வி. க. அவர்களுக்கு ஆங்கிலத்தில் அளித்த நற்சான்றிதழ், வ. வெ. சு. அவர்களின் (31-7-1920) பாராட்டுரை ஆகியன இடம் பெற்றுள்ளன. பாவாணர் அவர்கள் திரு. வி. க. விடம் தாம் கண்ட பண்புகள் பற்றி ஓர் அழகிய கட்டுரை நல்கியுள்ளார். சுத்தானந்த பாரதியின் 'தமிழ் - அழகர்-திரு. வி. க.', டாக்டர் மு. வ. வின் 'தமிழகத் தந்தை' ஆகியவை செறிவானவை. திரு. வி. க. வின் தொழிற் கழகம், இதழியல் ஆகிய இருதுறைத் துணைவர்களோடு (எசு. அந்தோணி யார், வெ. சாமிநாத சருமா) நேர்ச்சி நல்ல முயற்சி.

திரு. வி. க. நூல்களை ஆய்ந்து டாக்டர் பட்டம் பெற்றுள்ள டாக்டர் அ. நாகலிங்கம் அவர்களும் டாக்டர் ந. சஞ்சீவி அவர்களும் இணைந்து எழுதியுள்ள 'திரு. வி. க. வின் சொற்பொழிவுத் திறன்,' அகிலனின் 'தமிழ்ப்புயல் திரு. வி. க.', டாக்டர் சாலினியின்

திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்புகள்,' திருமலை முத்துசாமியின் 'திரு. வி. க. வும் மொழி நடையும்,' தமிழனின் 'பழமையிலே பூத்த புதுமை மலர்,' நாராணசாமியின் 'திரு. வி. க. வின் இறுதிப் பத்தாண்டு,' டாக்டர் இசரயேலின் 'திரு. வி. க. உரையில் அமையும் இடைச்சொல் அழகு,' ஆகியன திரு. வி. க. குறித்த பலநோக்குத் திறனாய்வின் விளைச்சல் எனலாம்.

பாவேந்தர் பாரதிதாசனார், ந.ரா. முருகவேள், பெருஞ்சித்திரனார், செயராமன், அன்பழகன், அமுதன், ஞானச்செல்வன், மாயவன், கந்ததாசன், செந்தமிழ்ச் சேரன், இளைய நம்பி, இளமுகிலன், தமிழ் வண்ணன், துரைச் செல்வம் ஆகியோர் கவிதைகளும் மலரை அணி செய்கின்றன.

'தமிழெழுத்துச் சீர்திருத்தக் கருத்தரங்கு' என்னும் கட்டுரை அரிய முயற்சி. 'திரு. வி. க. கண்ட திருக்குறள்.........!' என்பதும் ஆய்வுப் போக்கில் நன்கு அமைந்துள்ளது. திரு. வி. க. நூல் அட்டவணை விளக்கமாக உள்ளது. மற்றும். திரு. வி. க. நூல்களைத் தனித்தனியே ஆய்ந்து அறிஞர் பலர் அவற்றின் பிழிவைத் தந்துள்ளனர்.

திரு. வி. க. பெயரீடுகள், கணியக் குறிப்புப் போன்ற பல செய்திகள் அரிதின் முயன்று தொகுத்து வெளியிடப்பட்டுள்ளன. தனித்தமிழ் நடையில் இலங்கும் இந்நாண்மலர், மலர் உருவாக்கும் முறைக்கு எடுத்துக்காட்டாக-வழிகாட்டியாக விளங்கவல்லது. இம் மலரைச் சிறந்த முறையில் பயனுள்ள வகையில் படைத்த சரவணத் தமிழன் அவர்கள் பெரிதும் பாராட்டுக்குரியவர் ஆவார்.

**திரு. வி. க. உருவமைப்பு நாண்மலர்:** புலவர் த. சரவணத் தமிழன். இயற்றமிழ்ப் பயிற்றகம், திருவாரூர், 1973, பக்கம். 245, விலை குறிக்கப்படவில்லை.

—**வ. ஜெயதேவன்**

## சுந்தரிகளும் சுந்தரன்மார்களும்

**தமிழாக்கம்:** ரா. சௌரிராஜன் (சௌரி) சாகித்திய அக்காதெமி, புதுதில்லி, 1974 பக். 456, விலை ரூ. 15.

சாகித்திய அகாதமியின் வெளியீடாகத், தமிழாக்கம் செய்யப் பட்டுள்ள இந்த மலையாளத் தொடர்கதை, ஒரு சிறந்த காவியம் என்று கூறத்தக்க பெருமைகள் பலவற்றைப் பெற்றுள்ளது. சிறந்த உவமைகள், விரிவான வருணனைகள், சொற்செட்டு வாய்ந்த நடை-

ஆகியவைகள் அதிகமாக இடம் பெற்றுள்ள சிறப்புக் கருதியே இப் புதினத்தைக் காவிய மெனக் கூறலாம். எனினும் இத் தொடர் கதையின் அத்தியாயங்களில் ஒன்று மற்றென்றனோடு தொடர் பில்லாததோ என்று மயங்கும்படி, ஆசிரியர் ஒவ்வோர் அத்தியாயத் திலும் புதிய பாத்திரங்களை அறிமுகப்படுத்தி, அத்தியாயத்தின் இறுதியில் அப்பாத்திரங்கள் முன்பாத்திரங்களோடு கொண்டுள்ள தொடர்பைச் சுட்டிச் செல்கிறார். 'உரிமையாக்கிக் கொண்ட குழந்தை', 'ஓர் ஆவர்த்தனம் முடிந்தது' என்ற முதல் இரண்டு அத்தியாயங்களும் படித்தபின், அவை தமக்குள் சிறிதும் தொடர் பில்லாதவைகளாகளாகத் தெரியும். முதல் அத்தியாயத்தில் கூறப் பட்ட 'விசுவம்' என்ற சிறுவன், மூன்றும் அத்தியாயத்தில் கூறப் படும் போதுதான் இவ்வத்தியாயங்கள் தொடர்புடையனவாய், தொடர்கதையாய் நீள்வது தெரியும். ஆசிரியர், இத்தகு குறையைத் தவிர்த்து, பாத்திரங்கள் கொண்டுள்ள தொடர்பை எடுத்த எடுப் பிலேயே அறியும்படி கதையை அமைத்து எழுதியிருக்கலாம்.

இனி இக்கதையில் இடம் பெறும் சுந்தரிகளுள் குறிப்பிடத்தக் கவர்கள் குஞ்சுக்குட்டி, லக்ஷ்மிக்குட்டி, சாந்தா, ராதை ஆகியோர். குஞ்சுக்குட்டி சுந்தரியும், ஸ்கூல் மாஸ்டர் ராமன் நாயரும் ஒருவரை ஒருவர் விரும்புகின்றனர் குலம். ஒத்து வராமையால் அவர்கள் காதல் வெல்லவில்லை. ராமன் நாயர் மாதவி என்னும் வேறு சுந்தரியை மணக்கிறார். குஞ்சுக்குட்டியும் சந்தர்ப்ப வசத்தால் கோவிந்தன் நாயர் என்னும் சுந்தரனை மணம் புரியாமலேயே ஒரு குழந்தைக்குத் தாயாகிறாள். லக்ஷ்மிக்குட்டியும் கதகளி ஆட்டத்தில் சிறந்தவனாகிய கோபிக் குறுப்பை விரும்பி, மணக்கமுடியாமல் வேறொருவனை மணக்க நேரிடுகிறது. குஞ்சுக்குட்டி ஈன்ற குழ்ந்தையாகிய விசுவம், லக்ஷ்மிக் குட்டியின் வீட்டில் வளர்ந்து, அவளுடைய மகளான சாந்தாவை விரும்புகிறான். அவர்கள் காதலும் நிறைவேறாமல் போக சாந்தா கார்த்திகேயன் என்பவனை மணக்க நேரிடுகிறது. ராமன் நாயர் மாதவியம்மா தம்பதிகளின் மகளாகிய ராதை பெற்றோர் இறந்துவிட ஆதரவு காட்டிய குஞ்சுராமனை விரும்புகிறாள். இருவரும் மனம் ஒன்றி, மணம் புரியத் திட்டமிட்டிருந்தும், பட்டாளத்தில் சேர்ந்து குஞ்சுராமன் இறந்துவிட, ராதையின் காதலும் கண்ணீரில் மூழ்குகிறது. சாந்தாவை மணக்க இயலாமல் போன விசுவமும், குஞ்சுராமனைப் பறிகொடுத்த ராதையும் இறுதியில் வாழ்க்கைத் துணையாய்ச் சேர்ந்து வாழ முடிவு செய்கிறார்கள். இத் தொடர் கதையில் இடம் பெறும் சுந்தரிகள், சுந்தரன்மார்களின் கதை இது தான்.

வாழ்க்கையில் விரும்பியவரையே மணந்து வாழும் பேறு, எவருக்கும் கிடைப்பதில்லை என்பது ஆசிரியர் கருத்தாகலாம். ஆகவேதான் இத்தொடர்கதையில் வரும் ஒவ்வொருவரும் விரும்பியது ஒருவராகவும், அடைந்தது மற்றொருவராகவும் இருக்கும்

படி ஆசிரியர் படைத்திருக்கிருர் எனலாம். குஞ்சுக்குட்டியை அடையப்பெருத இராமன்நாயர் ஊர்விட்டு ஊர் சென்று விடுகிருர். லக்ஷ்மிக்குட்டியை அடையமுடியாத கோபிக்குறுப்பு பித்துப் பிடித்தவன்போல் அலேகிருன். சாந்தாவை மணக்கப் பெருத விசுவம், கடலில் குதித்துத் தற்கொலே செய்ய முயல்கிருன். வாழ்க்கைத் தோல்வியால் ஊர்விட்டு ஊர் செல்வதும், பித்தநிலே அடைவதும் தற்கொலே செய்ய முயல்வதும் இயல்புதான். இருந் தாலும் பழையதை மறந்து, புதிய வாழ்வைத் தொடங்குவதே ஒவ்வொருவருக்கும் அவசியமாகவும், ஆறுதலாகவும் இருக்கிறது. இந்தத் தத்துவத்தை உணர்த்தும் இத்தொடர்கதையிலும் ஊர்விட்டு ஊர் சொல்லும் ராமன் நாயர், மாதவியை மணந்து வாழ்வதாகவும், விசுவம், ராதையை மணக்க முடிவு செய்வதாகவும் ஆசிரியர் அமைத் துள்ளார். காதலில் தோல்வியடைந்த லக்ஷ்மிக்குட்டி, கைம் பெண்ணுகத் திரும்பி வந்து பழைய காதலன் கோபிக் குறுப்பை மணக்காமலே, தம்பதிகளாக ஆகாமல், அவனைத் தன் வீட்டிலேயே இருத்தி ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டிருப்பதால் ஆறுதல் அடைகிருள். அதுபோலக் கணவனைக் கைவிட்டு மறுபடியும் காதலனே அடைய முயலும் சாந்தா, விசுவம் ஒத்து வராமையால் கணவனுடன் பகைமை மறந்து வாழ்கிருள்.

> 'மறக்க முயலாவிட்டால் நம்மால் வாழ முடியாது' என்கிருர் ஆசிரியர். (பக். 225) பழையதை மறந்து, புதியதை விழைந்து எப்படியும் இவ்வுலகில் வாழத்தான் வேண்டி யிருக்கிறது. "பற்றுதலுக்கு எங்காவது ஓர் இடம் தேவை" என்று கூறும் ஆசிரியர், "இரு ஜீவன்கள் அந்தரத்தில் நிராதரவாக—பயங்கரமாகத் தொங்குகையில் ஒன்றை ஒன்று சந்திக்கின்றன. ஒன்று மற்றதன் பூர்வோத்தரம், முகவரி பற்றி அக்கறை கொள்ளவில்லே. 'என்னைத் தாங்கிக் கொள்ள வேண்டும்; எனக்கொரு பற்றுக்கோடு வேண்டும், என்று இரு ஜீவன்களும் விரும்புகின்றன. இரண்டுமே ஒன்ரோ டொன்று இணைந்து பிணைத்துக் கொள்ளுகின்றன. இப்படியாகத் தானே ஏற்படுகிறது பந்தம் ' என்று கூறியுள்ளார். (பக். 35)

ஆசிரியர் இத்தொடர்கதையில் கூறியிருக்கும் உவமைகள் சிறந்தவைகளாய், எண்ணிக்கையில் அளவிறந்தவையாய் உள்ளன:

> "தூறல் துளிகள் மேனியில் பட்டதும் சிறகுகளைச் சிலுப்பிக் கொண்டு சேவல் படபடக்குமே அதுபோல அவர் உடம்பும் விதிர்த்தது" (பக். 4)

> "காற்றில் பறக்கிற பஞ்சுப் பிசிர் போன்றது வாலிப வயசு' என்று ராமன் நாயருக்கு இன்றைக்குத் தோன்று கிறது. சிலசமயம் அது உயரப் பறந்து புளிய மரத்திலேயும்

பலா மரத்திலேயும் தங்கிவிட்டு விலகும். சில சமயங்களில் தொட்டால் சுருங்கிச் செடிகளிடையே சிக்கி, மழையிலும் நனைந்து இற்றுப் போய்விடும்". (பக். 11.)

"இந்தக் காதல் ஓர் அரக்கன். அவன் தொட்ட இடமெல்லாம் வலிமை இரட்டிப்பாகும். வளைகள் அணிந்த ஒரு கை, ஒரு குறும்புப் பார்வை, முடியிலிருந்து உதிரும் ஒரு பூ, நடந்து செல்லும்போது பதியும் பாதத் தடங்கள், ஒலித்துக் கொண்டே மங்கி இழையும் வளையல் ஒலி, நெட்டுயிர்ப்பு—இவைகளில் ஒன்று போதும், காதலெனும் அரக்கனை மேலும் பலசாலியாக்குவதற்கு". (பக். 13.)

"கோவிலில் தேங்காய் உடைத்து மூடிகளைக் கும்பாரமாக அடுக்கி வைத்திருப்பதைப் போல, புனைகதைகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன." (பக், 26.)

"கொளுத்திப் போட்ட வாணங்களைப் போல செயல் பட்டார்கள் போலீஸ்காரர்கள்." (பக். 89.)

"வாழ்ந்து வளர்ந்த வீட்டைவிட்டுக் குடிபெயர்வது நல்ல குடும்பத் தலைவிக்கு வளர்ந்த பயிரைப் பிடுங்கி மற்றோர் இடத்தில் நடுவது போன்றது." (பக். 117.)

"இருண்ட அலைகள் நாலு பக்கங்களிலிருந்தும் வந்து மோதும் தீவாந்தரம் போன்றது, மனிதவாழ்வு." (பக். 330.)

"ஒவ்வொரு பூவிற்கும் ஒரு குணவிசேஷம்—மனிதர்களைப் போல. ஒரு பூ கிராமப் பெண்ணைப் போல் நாணிக் கோணி நிற்கிறது. மூக்கரட்டை பெரிய இடத்துப் பெண் போல் காட்சி அளிக்கிறது. ரோஜாப்பூ அழகிய சிறுமி. முல்லை புத்திசாலிப் பெண் ; செண்பகம் கர்வக்காரி; ஜவந்திப் பூ அசட்டுத் தனமும் ஆடம்பரமும் கொண்ட பெண்ணுகத் தோன்றுகிறது." (பக். 446)

இவைபோன்ற சிறந்த உவமைகள் இத் தொடர்கதையைச் சிறப்பிக்கின்றன.

பாத்திரங்களை வருணிப்பதிலும், ஊர்களை வருணிப்பதிலும் ஆசிரியருடைய சிறந்த திறமை பல இடங்களிலும் பளிச்சிடுகின்றது.

"பூரித்த கன்னங்களில் இளமையின் வீறு கொண்ட மோகன அலைகள் அலைந்து கொண்டிருந்தன. அவள் முகப் பொலிவில், விழி வீச்சுகளில் வானவில் எழுவதும் மறைவதும்—அது ஓர் அசாதாரணமான கவர்ச்சிதான்.

தூண்டிவிடப்பட்ட குத்து விளக்கின் சுடர் முகங்களைப் போன்ற கண்கள், பூச்சு மஞ்சளின் நிறம் பற்றி மங்கலப் பொலிவு காட்டும் அகன்ற நெற்றித்தட்டம். அழகிய கருங் கூந்தல். ஐந்து குமிழ்ப்புகள் வைத்த தங்கக் கம்மலின் உறவால் சோபிக்கின்ற செவிகள்........." (பக். 5)

என்றெல்லாம் குஞ்சுக்குட்டியின் தோற்றத்தை வருணித்துள்ள ஆசிரியரே,

"இளகிய மனம், பெருந்தன்மை, நறுமணம் கமழும் மலரைப்போல் பிறரை மயக்கும் நல்ல குணம், எந்த ஒரு தொழிலாளிக்கு ஏற்படுகிற துயர்—துன்பங்களைத் தன்னுடையவைபோலவே பாவித்து உதவிக்கரம் நீட்டிச் செயல் புரிவான். சகதொழிலாளியின் குடும்பம் மேம்பட உயிரையும் கொடுக்கச் சித்தமாக இருந்தான். எல்லாம் ஒழுங்குபடுத்தியபின், உதவி பெற்றவரின் நன்றியுரைக்குக் கூடக் காத்திருக்கமாட்டான், ஒதுங்கிப் போய்விடுவான்," (பக். 237)

என்று குஞ்சுராமனின் குணச்சிறப்பையும் வருணித்துள்ளார். காவியங்களில் கவிஞர்கள் நகரங்களை வருணித்திருப்பதற்குச் சற்றும் குறையாதபடி இவரும் வருணித்திருப்பதை 'ஓர் ஆவர்த்தனம் முடிந்தது' என்ற அத்தியாயத்தின் தொடக்கத்தில் காணலாம். (பக். 60)

சிறந்த சொற்களைப் பொருத்தமான இடங்களிற் பெய்து கவிஞர் செய்யும் கவிதையைப் போன்ற அழகிய நடையை ஆள்வதிலும் இவர் வல்லவராய் உள்ளார்.

"இரத்தத் துளிகள் மனித ஆன்மாக்களின் ஜீவத் துளிகள். ஆயிரமாயிரம் ஆண்டுகளாக மனிதன் ஆற்றி வரும் தவத்தின் தூயசக்தி அவைகளில் படிந்திருக்கிறது. மேலே சென்றுவிட்ட மனித ஆன்மாக்கள் பூமியில் தூவிச் செல்லும் சக்தி பீஜங்கள் அவை — வலிமையின் வித்துக்கள்." (பக். 157,158)

"கூண்டிலடைக்கப்பட்ட முயல்மாதிரி முடங்கிக் கிடக்க வேண்டியிருக்கிறது. இந்தப்பெண் கூண்டுக்குள் ளேயே நடனமாடி நடனமாடி வாழ்வை முடித்துக் கொள்ள வேண்டியதுதான். இரும்புச் சங்கிலியைக்கூடத் தகர்க்கும் வலிமை தனக்கு உண்டு. ஆனல் இங்கேயோ தாமரை நூல் கொண்டல்லவோ தன்னைக் கட்டிப் போட்டிருக் கிறார்கள் ! அன்புப்பிணைப்பு." (பக். 178)

முதலான பல இடங்களில் ஆசிரியர் கையாண்டுள்ள நடை மனத்தை மயக்குவதாய்—அதே நேரத்தில் தெளிவானதாகவும் உள்ளது.

'சிறந்த இலக்கியத்தைச் சிறந்த கருத்துகளின் பதிவேடு' என்று குறிப்பது வழக்கம்.

"தன் குட்டிகளுக்கு ஆபத்தென்று வந்தால், மான் கூடப் போர் புரியும்" (பக். 123)

"தங்க ஊசியானுல் கண்ணில் குத்திக் கொண்டால், வலிக்காமலா போகும் ?" (பக். 150)

"பெரிய இடத்துப் பெண்களின் கணவன்மார்களும் பாலைவனத்தில் கலந்த நதியும் ஒன்று தான். ஒருதரம் தனக்குள் அடக்கிக் கொண்டு விட்டால், பிறகு வெளியே பரிவு தலைகாட்ட முடியாது." (பக். 282)

"நாம் ஒரு நாய்க்குட்டியை வளர்த்தாலும் அதனிடம் பரிவு ஏற்பட்டு நெடுகிறது." (பக். 337)

"யானை பதிச்ச மோதிரம் போட்டுக் கொண்டு விட்டால், யானையாகி விடமுடியாது." (பக். 425)

முதலான பல சிறந்த கருத்துகளை இந் நூலைக் கற்பார் காணலாம்.

சுதந்திரப் போராட்ட காலத்தில் நடந்த கிலாபத் இயக்கம், இரண்டாம் உலகப் போர் பற்றிய செய்திகள் இப் புதினத்தில் இடம் பெற்றுள்ளன. ஏழை வாழ்வைப் படம்பிடித்துக் காட்டியுள்ள ஆசிரியர், முதலாளி-தொழிலாளி வர்க்கப் போராட்டத்தையும் இக் கதையில் விவரித்துள்ளார். யதார்த்த வாழ்வைப் பிரதிபலித்துக் காட்டும் சிறந்த புதினம் '**சுந்தரிகளும் சுந்தரன்மார்களும்**'.

—சி. பா.

## ஒரு புளியமரத்தின் கதை

**சுந்தர ராமசாமி :** தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1973, பக் : 243; விலை ரூ. 5.

குக்கிராமமாக ஒரு புளியமரத்துடன் இருந்த ஊர், பட்டணமாக வளர்ந்து பின் அப்புளியமரத்தின் அழிவுக்கும் காரணமாகியதைக் கதையாசிரியர் தாம் கண்டபடியும், தமக்கு முன் வாழந்தவராகிய தாமோதர ஆசான் கதைகளாய்க் கூறிய படியும் விவரித்திருப்பதே இப் புதினமாகும்.

புளியமரம் என்றால், பேய்பிசாசுகள் இல்லாமல் இருக்குமா? தாமோதர ஆசான் கூறிய கதையில்? கிராமத்துச் செல்லத்தாயி புளியமரத்தில் வாழ்ந்தவனை மர்ம ஆடவனோடு கூடிப் பின் அதே புளியமரத்தில் நிர்வாணமாகத் தூக்கில் தொங்கிட நேருவதைப் படிக்கிறபோது நமது நெஞ்சம் அச்சத்தால் நடுங்குகிறது. பகல் நேரத்திலும் ஆட்கள் நடமாட அஞ்சுவதாகிய அப்பகுதி, யாரும் அடியெடுத்து வைக்கமுடியாதபடி நாற்றம் நிறைந்துகிடந்த அப் பகுதி பூரம் திருநாள் மகாராஜாவின் காலத்தில் புளியமரத்தை ஒட்டி நல்லபாதை போடப்பட்டு, கண்ட முன்னேற்றமும் தாமோதர ஆசான் அவர்களால் விரிவாகக் கூறப்படுகிறது. பின்பு பஸ்கள் கண்டுபிடித்து அவைகள் பயணத்திற்கு வந்தபின், புளியமரத்தை ஒட்டி பஸ் ஸ்டாண்டு தோன்றிக் கடைகளும் பெருகி ஊர் பெறும் முன்னேற்றமும் கூறப்பட்டுள்ளது.

"ஊர் இவ்வளவு தூரம் மாறியிருந்தாலும் புளியமரம் பழைய புளியமரமாகத்தான் இருந்தது. அதன் உடம்பில் யார்யாரோ விளம்பரங்களை ஒட்டியிருந்தார்கள். தாழ்ந்த கிளைகளில் தாலிதாலி யாய் சினிமா விளம்பரங்கள் தொங்கின. அதன் கைகளில் அனைத்துக் கட்சிகளின் கொடிகளும் பறந்தன. எல்லாவற்றையும் தாங்கிக்கொண்டு ஒன்றிலும் தொடர்பின்றி நின்று கொண்டிருந்தது புளியமரம்." (பக். 60)

இவ்வாறு ஊர் பெற்றிருந்த முன்னேற்றம் அத்தனையும் கண்டிருந்த புளியமரம் அரசியல் பொறாமைக்கும், வணிகப் போட்டிக்கும் காரணமாகி, எவ்வாறு அழிந்துபடுகிறது என்பதை விளக்குவதே இப் புதினத்தின் இறுதிப்பகுதியாக விளங்குகிறது.

நகரத்தலைவராகிய எம். சி. ஜோசப் தேர்தலில் வென்று தாமுவும் தம் பதவிக்குப் போட்டியாக வந்துவிடக் கூடாது என்பதற்காக தாமுவின் கடைவாயிற்கு நிழல் செய்து துணைசெய்யும் புளிய மரத்தை வெட்டுவதற்கு ஆணையிடுகிறார். புளியமரத்தல்யிடி இரவோடு இரவாக அம்மனைக் குடியிருக்கவைத்து, தெய்வம் குடியிருக்கும் புளியமரத்தை வெட்டாதவாறு சூழ்ச்சி செய்து வென்று விடுகிறார் தாமு. இவ்வாறு உயிருக்குப் போராடும் புளியமரத்திற்கு இறுதியில் நஞ்சூட்டிப் பட்டுப்போகும்படி செய்துவிடுகிறான் தாமுவின் வணிக எதிரிகாதரின் கையாளான கூலி ஐயப்பன்.

> "முச்சந்திப் புளியமரம் காய்ந்து கருகி நின்று கொடிருந்தது. அழிந்து போய் விட்டது அது. அதன் சடலம்தான் அகற்றப் படாமல் நின்றுகொண்டிருந்தது. எந்த நிமிஷத் திலும் ஒரு கோடாலிக்காரன் வந்து யாருடைய கவனத்தை யும் கவராமல் அதை அகற்றும் காரியத்தை நிறைவேற்றி விடலாம். இப்பொழுது அது மரம் அல்ல; தெய்வமும் அல்ல; பிணம்தான்." (பக். 238)

இவ்வாறு புளியமரத்தின் கதையைக் கூறிமுடித்திருக்கிறார் ஆசிரியர். இன்றிருக்கும் எத்தனையோ ஊர்கள் காடும் புதருமாய் இருந்து படிப்படியாய் முன்னேற்றம் கண்டவைகளே ஆகும். நம்ப முடியாத வளர்ச்சிகளோடு நாளும் மாறி வருவதான ஓர் ஊரின் வளர்ச்சியைப் புளியமரத்தோடு இணைத்துச் சிறந்த புதினமாகப் படைத்திருக்கும் ஆசிரியரின் திறம் பாராட்டுதற்குரியது—எளிய கதைக்கருவினைத் தாமோதர ஆசான், தாமு, காதர், ஜோசப், கூலி ஐயப்பன் முதலான ஒருசில பாத்திரங்களைப் படைத்து, தாமே கதை கூறும் போக்கில் ஆசிரியர் புதினத்தைப் படைத்திருக்கிறார். நகைச் சுவை இழையோட நல்ல உவமைகளைக் கலந்து, பெரிதும் வட்டார வழக்குச் சொற்கள் பயிலும் உரையாடல்களைக் கொண்ட நடையில் புதினத்தை எழுதியிருக்கிறார்.

> "மிகவும் வயதான மரம். கிழடுதட்டிப்போய் விட்டது. எட்டிநின்று சிறிதுநேரம் பார்த்துக் கொண்டிருந்தால், தலை பஞ்சுப்பொதியாகிக் கண்களும் பஞ்சடைந்து கூனிக்குறுகிப் போன கிழவி ஒருத்தி நிஷ்காமிய நிலையில் ஆழ்ந்து, தன்னுள்ளே புதையுண்டிருக்கும் ஆனந்தத்தைத் தேடி எடுத்து அனுபவித்துக் கொண்டிருப்பதுபோல்தான் தோன்றும்." (பக். 7)

இது போன்ற உவமையோடியைந்த நல்ல நடையைப் பல இடங்களில் காணலாம். பூரம்திருநாள் மகாராஜா பலராடும் கால் பந்தாட்டத்தைப் பார்த்து விட்டு,

> "கேவலம் ஒரு பந்துக்குப் பன்னிரண்டு பெரியவர்கள் அடித்துக் கொள்கிறார்களே. ஆளுக்கு ஒருபந்தைக் கொடுத்துப் போகச் செல்லாக் கூடாதா?" *(பக். 48)*

என்று கேட்கும் பகுதி நல்ல நகைச்சுவையாகும்.

இறுதிப்பகுதியில் தேர்தல் போராட்டத்தில் ஒருவரை ஒருவர் வெல்லச் செய்யும் சூழ்ச்சிகளையும், புளியமரம் வெட்டப்பட வேண்டியதின் அவசியத்தையும் 'திருவிதாங்கூர்நேசன்' பத்திரிகை பல காரணங்களைக் காட்டி வலியுறுத்துவதையும் ஆசிரியர் சிறப் பாகச் சித்திரித்துக் காட்டியுள்ளார்.

ஆசிரியரின் முதல்படைப்பாயினும் முத்தான படைப்பாகத் திகழுகிறது இப் புதினம்.

—*சி. பா.*

# எங்கே போகிறோம்?

அகிலன், பாரி புத்தகப்பண்ணை, சென்னை-5, விலை ரூ. 7-50

'நாம் எங்கே போகிறோம்?'' 'நாடு எங்கே போகிறது?' இந்தக் கேள்விகள் நாடு சுதந்திரம் பெற்றுப் பத்து ஆண்டுகள் சென்ற வுடனேயே அகிலனின் மனத்துள் எழுந்தன. இவ்வினுக்களுக்கு அமைந்த விடையாக இந் நாவல் பிறந்துள்ளது.

'ஆன்மாவின் வெளிப்பாடுதான் கலை. சத்தியத்தின் அழகைத் தேடிப்பார். புறக் கண்களுக்குச் சத்தியத்தின் உருவம் அழகில்லாதது போல் தோன்றினுலும் அகக் கண்களால் அதன் அழகைத் தேடிச் செல், என்று காந்தியடிகள் சொல்லிச் சென்ற இலக்கியக் கொள் கையையே இவர் வெளிப்படுத்த முனைந்துள்ளார். சத்தியமும் அசத்தியமும் ஒன்றோடொன்று கலந்து, உண்மையும் பொய்யும் ஒன்றோடொன்று சங்கமம் ஆகி, காக்காய்ப்பொன் பத்தரை மாற்றுத் தங்கம் போலவும் பத்தரை மாற்றுத்தங்கம் துருப்பிடித்த இரும்பு போலவும் காட்சியளிக்கும் இந்நாளில், அவற்றை இனம்பிரித்துக் காட்டுவதைத் தன் கடமையாகக் கொண்டு இப் புதினத்தைப் படைத்துள்ளார்.

கல்வியறிவு, கொள்கைப்பிடிப்பு, தொண்டுள்ளம், உழைப்புத் திறன் இவற்றையெல்லாம்விடச் சந்தர்ப்ப வாதமும் பண நாயகமும் சாதி நாயகமுமே அரசியல் வாழ்வின் அடிப்படைத் தகுதிகளாக மாறிய போக்கை உற்றுக் கவனிப்பதுடன் உறுதியாக எதிர்த்துப் போராடவும் செய்கிறார். இவரது போராட்டத்தில் வாளாகவும் கேடயமாகவும் விளங்குவதுதான் 'எங்கே போகிறோம்?' என்ற இவரது புதினம். 'வேசித்தனத்தால் தன் உடலை மூலதனமாக்கிப் பொருள் குவிக்கும் நிலைக்குத் தள்ளப்பட்ட ஒரு பெண்ணை வேண்டு மென்றேதான் நான் இந்தக் கதைக்குத் தலைவியாக்கிக் கொண்டேன் சமுதாயத்துப் பிரமுகர்கள் என்ற போர்வையில் உலவும் சிலர் அவளைவிடவும் சீரழிந்தவர்கள். காசுக்காகத் தங்கள் மனச்சாட்சி, சொல், செயல், ஆன்மா இவ்வளவையும் விபச்சாரம் செய்யும் போலிகள் இவர்கள். சமுதாயத்தில் கயவர்கள் ஆங்காங்கே பலர் இருக்கத்தான் செய்வர். ஆனால் கயவர்களை வழிகாட்டிகளாகக் கொள்ளும் சமுதாயம் உருப்படுமா என்பதுதான் நான் இந்த நாவலில் எழுப்பியுள்ள கேள்வி' என்று அகிலன் தன் இலட்சி யத்தை வெளியிடுகிறார்.

புவனவே இப் புதினத்தில் தலைமை இடத்தைப் பெறுகிறாள். சுந்த ரேசனிடம் தன் காதலைப் போலவே கற்பையும் இழந்து விடு கிறாள். ஐயாயிரம் ரூபாய் கொடுக்க முடியாததால் மணிக்கு ஐயா யிரம் சம்பாதிக்கும் விலைமகளாக வாழவேண்டிய நிர்ப்பந்தத்துக்கு

ஆளானுள். விலைமகளாக வாழ்ந்தாலும் விலையிலாமகளாகப் 'புது வாழ்வின்' அடித்தளமாக விளங்கினுள். "மனிதனிடம் பதுங்கி யிருக்கும் கற்கால மனிதனுக்கு, தாயென்றும் தாரமென்றும் பார்க் காத நாலுகால் மிருகத்துக்கு, என்னை இரையாகப் போடத் திட்ட மிட்டு வந்திருக்கிறீர்கள். இந்தத் தரகுவேலை செய்வதுதான் உங்கள் பத்திரிகை தர்மமா' அல்லது இதுதான் உங்கள் ஸ்வதர்மமா?" என்று பஞ்சுவைப் பஞ்சாகப் பறக்க வைக்கும் போதும், "என்னை எப்படி யெல்லாம் கனிவாகக் கரைத்து என்னிடம் உருக உருகப் பேசி, என்னிடம் கெஞ்சிக் கூத்தாடி, என்னிடமிருந்து உங்களுக்கு வேண்டியதையெல்லாம் எடுத்துக் கொண்டீர்கள். அவ்வளவையும் எதை நம்பி எதற்காக உங்களிடம் கொடுத்தேன்?" என்று குமுறும் போதும், 'இப்படியே உங்கள் மடியில் தலைவைத்து எனக்கு உயிரை விட்டுவிட வேண்டும் போலிருக்கிறது' என்று சிதம்பரத்திடம் காதலால் உருகும் போதும் புவனு சாதாரணப் பெண்ணுகத் தோற்ற மளிக்கவில்லை.

சிதம்பரம் ஒரு காந்திய வாதி. சமுதாயக் கொடுமைகளைச் சகித்துக் கொள்வதிலும், அமைதியாக அதனை எதிர்த்துப் போராடு வதிலும் சிறந்து விளங்குகிருன். "இது ஒரு மனிதன் செய்யும் சத்தி யாக்கிரகம். என் பெருவிரல் நான் நடத்தும் அறப்போர்" என்று தன்னை வெளிப்படுத்துகிருன் சிதம்பரம்.

இராமலிங்கம் மிக உயர்ந்த மனிதர். போலியான மாலை மரியாதைகளைக் கண்டு ஒளிவதுவும், உண்மையான தியாகிகளை மதிக்கும் பண்பும், மனச்சாட்சி விரோதமான வேலையை அது பெரிய பதவியாக இருப்பினும்கூட ராஜினுமா பண்ணும் நேர்மையும், நேருக்கு நேராகத் தவறு செய்பவர்களைக் கண்டிக்கும் துணிச்சலும் பெற்றுத் திகழ்கிருர்.

பொதுவுடைமைக் கட்சிக்காரர்களாக சுபாஷும் கணேசனும் நேர்மைக்காகப் போராடுகின்றனர். சுபாஷ் கத்தி எடுக்கும் அளவிற்கு உணர்ச்சி வயப்பட்டவனுக விளங்குகிருன். 'உள்ளே சுளை அழுகிப் புழுத்துப் போனுலும் போகட்டும் மேலே தோல் சுத்த மாக இருந்தால் போதுமென்கிறீர்களா? ஒரு பிரியாணி ஒட்டல் வைக்க நான் ஆள் தேடப்போகிறேன். ஆடுகிற மயிலின் காலை ஒடித்துச் சூப்பு, கூவும் குயிலின் கழுத்தைத் திருகிக் குருமா, பேசும் கிளிகளைக் கொன்று பரோட்டாக் கறி?" என்று தனது சமுதாய இழிவின் மீது கொண்ட சத்திய ஆவேசத்தை ரத்தினம் வெளிப் படுத்துகிருர்.

போலி அரசியல், சினிமா, பத்திரிகை, போன்றவற்றைக் கடுமை யாகச் சாடுகின்ருர் இப்புதினத்தின் ஆசிரியர். உண்மையிலே நாடு

எங்கே போகிறது என்பதை மிகத் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டுகிறுர் அகிலன். இம்முயற்சி பெரிதும் பாராட்டதற்குரியது.

*சி. பா.*

## தமிழில் விடுகதைகள்

***தமிழில் விடுகதைகள்***. டாக்டர். ச. வே. சுப்பிரமணியம், உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் சென்னை-20 விலை ரூ. 10 பக்கங்கள். lxix + 328.

தமிழகத்தில் நாட்டுப்புற இயல் துறையானது இன்றைய நிலையில் ஒரு வளர்ந்து வரும் துறையாகும். இத்துறையில் நாட்டுப்புற இலக்கியங்களைத் தொகுப்பதும், பகுப்பதும், பதிப்பதும், ஆய்வதும் வளமான அளவில் நடந்து வருகின்றன. இதற்கு ஆக்கமும் ஊக்கமும் தரும் வகையில் அரசும், தனியார் நிறுவனங்களும் முயற்சி எடுத்து வருகின்றன. நாட்டுப்புற இலக்கியங்களுள் விடுகதையும் ஒரு பிரிவாகும். இவ் விடுகதைகளின் முழுமையான தொகுப்பாக விளங்குகிறது இந்நூல்.

இந்நூலில் 2504 விடுகதைகள் தொகுக்கப்பட்டிருப்பதுடன், பயன்பட்ட நூல்களையும், சொற்களையும், அடைவு செய்திருப்பதும், நாட்டுப்புற இயலும் விடுகதை இலக்கியமும், உலக மொழிகளில் விடுகதைகள், தமிழ் மொழியில் விடுகதைகள் என்ற ஆய்வுக் கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளதும் மிகவும் பாராட்டுதற்குரியதாகும்.

'சின்னஞ்சிறு பிள்ளைகளும் படியாத மாந்தரும் விருந்தாகச் சுவைத்த இவ்விடுகதைகளை ஆய்வுலகமும் நன்கு காணவேண்டும்' என்ற ஆவலும் ஆசையும் கொண்டு முயன்ற டாக்டர். ச. வே. சுப்பிரமணியம் அவர்களின் முயற்சி முழு வெற்றியை அடைந்துள்ளது என்றே கூறவேண்டும்.

விடுகதைகளையும் விடையையும் தனித்தனியாகத் தந்திருப்பதும் போற்றுதற்குரியதாகும். விடுகதையின் தோற்றம், வளர்ச்சி, வாழ்வு, வளம் போன்றவற்றுடன் விடுகதைகளையும் சுவைப்பதற்கேற்ற சிறந்த நூலாகவும், மிகப்பெரிய அளவில் அகரவரிசையில் விடுகதைகள் அமைந்த சீரிய நூலாகவும் விளங்குகின்றது.

— *சு. சண்முக சுந்தரம்*

# பொம்மலாட்டம்

பொம்மலாட்டம், மாணிக் பந்த் யோபாத்யாய், பக்கங்கள் 316, விலை. ரூ. 18 சாகித்திய அக்காதெமி, புது தில்லி.

இருபதாம் நூற்றாண்டில், வங்கஇலக்கியத்தில் புதுப்பாதையை வகுத்த எழுத்தாளர் குழுவினருள் ஒருவராக மாணிக்பந்த்யோபாத்யாய் விளங்குகின்றார். பழம்பெரும் எழுத்தாளர்கள் விலக்கிவிட்ட சாதாரண எளியமக்களின் வாழ்க்கை உண்மைகளை வருணிப்பதில் இவர் தேர்ந்தவர் என்பதை இவரது 'பொம்மலாட்டம்' என்ற நாவலின் மூலம் நன்கு அறிந்து கொள்ளலாம்.

கல்கத்தா மருத்துவக் கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்று, சசி தன் சொந்த ஊருக்குத் திரும்புகிறான். ஆனால் கிராமத்தவருடன், முக்கியமாக அநீதி வழிகளில் பணம்பண்ணியுள்ள அவனுடைய தந்தை கோபால் தாசுடன் அவனுக்கு ஒத்துப் போக முடியவில்லை. கிராமத்தை விட்டுச் சென்று விட வேண்டுமென அவனுக்குத் தோன்றுகிறது. தன் உயர்வுக்கு வழிசெய்து கொள்ள நினைக்கிறான். அவனால் போக முடியவில்லை; எளியமக்களுக்கு அவனுடைய மருத்துவம் வேண்டியிருக்கிறது. கிராமத்துப் பெண்கள் சிலருடைய தொடர்பை அவனால் விடமுடியவில்லை. கள்ளம் கபடற்ற பேதை குஸூம்—நாட்டுப் புறப்பெண்—அவன் உள்ளத்தைக் கவர்ந்து விடுகிறாள். உயிர்த்துடிப்புள்ள மறக்கொணாத தலைவியாக அவள் உருவாகி விடுகிறாள்.

'வாய்க்கால் ஓரமாக இருந்த பெரிய ஆலமரத்தின் அடிப்பகுதி மீது சாய்ந்தபடி ஹாரு கோஷ் நின்றிருந்தான்' என்ற நாவலின் தொடக்க முதல் 'அதன் மண்மேட்டில் நின்று சூரிய அத்தமனத்தை நோக்கும் ஆவல், இனிமேல் அந்த வாழ்வில் சசிக்கு வரப்போவதேயில்லை' என்ற முடிவுவரை நாவலின் நடையானது சரளமாகச் செல்கின்றது. ஒரு மொழி பெயர்ப்பு நாவல் என்று தோன்றாத வகையில் மிகச்சிறப்பாகத் தமிழில் எழுதபட்டிருக்கும் முறையைப் பாராட்டாமல் இருக்க முடியாது.

நாட்டுப்புற வருணனைகளில் கிராமியச்சூழல் சுகமாகத் தோன்றுகிறது. நாவல் முழுவதும் கிராமிய மண்மணமும் சுத்தமான காற்றும் தவழ்கின்றன. இதனை மிகச்சிறந்த நாட்டுப்புறத்தை மையமாகக் கொண்ட வட்டார நாவல் என்று கூறலாம்

—சு. சண்முக சுந்தரம்

## பால்மதி

### கவிதை நாடகம்

டாக்டர் ஏ. என். பெருமாள் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-20.

முயற்சிச் சுருக்கமும் எளிமையும் கருதி உரைநடையிலேயே நாடகத்தை ஆக்கிவரும் வேளையில், கவிதை நாடகத்தை உருவாக்கி யிருக்கும் ஆசிரியருக்கு முதலில் பாராட்டுகள். கதையின் கருப் பொருள் சாதாரணமானது தான். ஆயின், எப்பொருளும் எடுத் தாள்பவரின் வன்மைக்கேற்பப் புதுவலிமை பெற்று விளங்குதல் போல, இக்கதையைத் தம் கவித்திறத்தால் நிமிர்த்த முயற்சி செய் திருக்கிறார்; ஓரளவு வெற்றியும் பெற்றிருக்கிறார்.

நாடகத்தைப்பற்றியே ஆய்வுசெய்து 'முனைவர்' பட்டம் பெற்ற வராதலால், அதற்குரிய இலக்கணத்தை மனத்துட் கொண்டே இந் நாடகத்தை உருவாக்கியிருக்கிறார். தோற்றம், வளர்ச்சி, திருப்பம், உச்சகட்டம், வீழ்ச்சி, முடிவு என்ற வளர்ச்சிப் படிகளை நன்கு காட்ட முனைந்திருக்கிறார்.

திரைக்கதையை மனத்தில் வைத்து, நாடகக்கதையை எழுத்தில் காட்டியிருப்பதால் இடையிடையே தடுமாற்றம் ஏற்படுவதுபோல் ஓர் உணர்வு. படிப்பதற்கென்றே எழுதியிருந்தாலும் நடிப்பதற்கும் ஆகும் என்ற நம்பிக்கையில் சிற்சில காட்சிகளை அமைக்க முயலு கிறார். நல்ல முயற்சி.

மறுமலர்ச்சி வேண்டும்; ஆம், மரபை யொட்டிய மறுமலர்ச்சி வேண்டும். இந்த மண்ணையொட்டிய மரபுகளைப் பாத்திரங்களின் வாயிலாக இலாவகமாகப் பயன்படுத்தி வெற்றிகாண்கிறார். வேண்டிய இடங்களில் திருக்குறளையும் இராமாயண பாரத நிகழ்ச்சி களையும் புகுத்தியிருப்பது சிறப்பு என்றாலும் அவரே அதற்கு அடிக் குறிப்பிட்டுக் காட்டியிருப்பது தேவைதானா? சுவை குன்றுகிறதே.

சிறுபாத்திரங்கள் தங்கள் வாய்மொழிகொண்டே தங்கள் பண்பை உணர்த்தி விடுகின்றன. இதோ ஒன்று:

> "வேட்டை நாய்க்கு வேகமூட்டின்
> காட்டைக் கலக்கிடு மென்பதை அறிவீர்
> ...... ............ .. ... .................. ........
> கூளி யென்றால் காளி யாகி
> மூளித் தனத்தை முடுக்கி விடுவேன்."

கல்மதி தன் குணநலத்தை இவ்வாறு வெளிப்படுத்துகிறாள். இது பாத்திரப் படைப்புக்குக் கிடைத்த வெற்றி. இலக்கிய நயமுள்ள பாடல்கள் விரவிக் கிடக்கின்றன. ஒன்று:

ஆவணித் திங்களில் ஆறெலாம்
 பெருக்கெடுக்க அவனியெலாம் சிறப்பெடுக்கும்
தாவணி தண்காற்றில் தவழ்ந்தசையத்
 தாள்நோகத் தரைமிதித்து வழிநடக்கும்
பாவணி பொழியும் பல்லெழில்
 பாவையின்வளை யொலிக்கும் வண்கரம்
காவணியும் பூவணிந்த கருங்கூந்தல்
 நீவியே பாலரசைப் பார்த்தலோ.

'பாண்டியன் பரிசில்' வரும் வேலனின் புலம்பலை யொட்டியமைந்த புலம்பல்.

நாடகத்திற்குச் சொல்விளையாட்டு இன்றியமையாதது. அதையும் காட்டியிருக்கிறார்.

ராணீ பறப்பி னுணீ தொடர்வதைக்
காணீ ரன்றோ ............ ............
......... ......... ......... ..........
தேனீ யதனால் தேனீ யென்றே
தேனீ யுன்னைத் தேறிக் கேட்டு .........

இப்படிச் சில. முடிவாக, படிக்கத்தக்க இந்த நாடகத்தில் வளமை உண்டு; இனிமையும் வளமையும் சேர்ந்த இன்னொரு நாடகத்தை ஆசிரியரிடம் எதிர்பார்ப்போம்.

—ப. கிருஷ்ணன்.

## தேவி

துமிலன்—கலைமகள் காரியாலய வெளியீடு, 1971; பக். 453; விலை ரூ. 6.

கதைத் தலைவியாகிய கலாதேவியின் பெயரைத் தாங்கி வெளி வந்துள்ள 'தேவி' என்னும் இந்நாவலை ஆசிரியர் துமிலன் அவர்கள், நகைச்சுவை இழையோட எழுதி நம்மை நகைக்கவைத்திருப்பதோடு, பல இடங்களில் நம் உணர்ச்சியை நெகிழ வைத்துக், கண்ணீரையும் வரவழைத்துவிடுகிறார். 'படிப்பினால் பெண்கள் பாழாகிறார்களா?' என்ற வினாவிற்கு விடையாக இந்நாவலைப் படைத்திருக்கிறார். ஆசிரியர். கல்லூரியில் படிக்கிற பெண்கள் ரொம்ப மோசம், என்று எண்ணுகிற பலரும்கூடத் தம் வீட்டுப் பெண்களைக் கல்லூரிக்கு அனுப்பிக் கொண்டு இருப்பது விந்தையே அல்லவா! இந்நாவலில் வரும் பாஸ்கரன் பள்ளிக்கே தம் பெண்ணை அனுப்பிவைக்காமல், அவளைப் படிப்பு வாசனையே இல்லாமல் வளர்ப்பதற்காக, எங்கோ தொலைதூரத்திலுள்ள வோண்டா என்னும் மலைப்பகுதிக்குச் சென்று விடுகிறார். படிப்பினால் பெண்கள் பாழாகிறார்கள் என்று

எண்ணியும், பெண்களைப் படிக்கவைக்கும் பலதந்தைமார்களிட மிருந்து, மாறுபட்ட ஒரு தந்தையாக பாஸ்கரன் பாத்திரத்தைப் படைத்திருக்கிறார் ஆசிரியர். படிப்பின் மேல்—படித்த பெண்களின் மேல் அவருக்கு அளவுகடந்த வெறுப்பு ஏற்படக் காரணம் அவரது மனைவி தேவகிதான். 'மார்க்கண்டேயா இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி' யின் உரிமையாளராகிய அவர், அறுபது வயதை எட்டும் நேரத்தில், ஐம்பது வயது எட்டும் தேவகியைத் திருமணம் செய்து கொள்ள நேரிடுகிறது. சமூக சேவகியும், குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தின் தீவிரபிரச்சாரகியுமான தேவகி, ஒருநாளும் பாஸ்கரனைக் கணவராய் கருதியதுமில்லை; மதித்துத் தொண்டுகள் செய்ததுமில்லை. இந்த விந்தைத் தம்பதிகளுக்குக் 'கலாதேவி' பிறக்கிறாள். குழந்தை பிறந்த பிறகும் தன் போக்கில் சிறிதும் மாற்றம் கொள்ளாத தேவகி, குடும்பத்தைவிட்டுவிட்டுத் தனியே குடும்பக்கட்டுப்பாட்டுத்திட்டத் தில் கையாளப்பெறும் புதிய முறைகளைக் கண்டுவருவதற்காக அமெரிக்கா பயணமாகிறாள். தன் மனைவியின் இத்தகைய அலட்சியப் போக்கிற்கு, அவளுடைய படிப்புத்திமிரே காரணம் என்று கருதும் பாஸ்கரன் தன்பெண்ணைப்பண்புடையவளாக்கப் படிப்புவாசனையே இல்லாமல் வளர்க்க எண்ணி, மனைவி அமெரிக்காவிலிருந்து திரும்ப வருவதை அறிந்தும், அவள் முகத்தில் விழிக்கக் கூடாது என்ற உறுதியுடன், வோண்டா மலைப் பகுதிக்குப் பயணமாகிவிடுகிறார். இயற்கை அன்னையின் செல்வமகளாகத் தேவி வளர்ந்து வரும் வேளையில், அமெரிக்காவிலிருந்து திரும்பிய தேவகியை நாளாக ஆகக் குடும்ப பாசம் வாட்ட, அவள் நல்லவளாக மாறுகிறாள். இறுதியில் தேவகியால் வளர்க்கப்பட்ட முரளிக்கும், பாஸ்கரன்-தேவகி தம்பதிகளின் மகள் தேவிக்கும் மணம் நடக்கவும், பிரிந்த குடும்பம் ஒன்று சேரவும் நாவலை இனிதுற முடித்துள்ளார் ஆசிரியர்.

"படிப்பில்லாத பெண்கள் களர்நிலம்; அதில் புல் விளைந்திட லாம்; நல்ல புதல்வர்கள் பிறப்பதில்லை" என்றார் பாவேந்தர் பாரதி தாசனார். படித்தும் பெண்கள் களர்நிலமாய் இருப்பதனால், அப் படிப்பு வெறுக்கத் தக்கதாகிறது. தன் பெண் படங்களைப் பார் பதற்காகப் புத்தகங்களைத் தொடுகிறாள் என்பதை அறிந்த பாஸ் கரன், புத்தக அலமாரியில் லேசாக மின்சாரம் பாயச் செய்து, புத்த கத்தைத் தொடும் தன் மகளுக்கே 'ஷாக்' அடிக்கும்படி செய்கிறார். படிப்பையும் படித்த பெண்களையும் தன் மகளும் வெறுக்க வேண்டும் என்பதற்காகப் பலகதைகளையும் இட்டுக் கூறுகிறார். அதனால் தன் பெண்ணுக்குப் படிப்பின்மேல் முழுவதுமாக வெறுப்பு ஏற்படச் செய்து விட்டபின், "படிக்கிறாயா தேவி, பள்ளிக் கூடத்தில் சேர்க் கட்டுமா?" என்று கேட்டால், அவள் என்னை அடிக்க வந்தாலும் வரலாம். அதில் அவ்வளவு வெறுப்பு ஏற்படச் செய்திருக்கிறேன். எனக்கு இதைவிட வேறு என்ன வேண்டும்?" என்று தமக்குத்தாமே கேட்டு மகிழ்கிறார்.

இருபது வயது இளங்குமரியாகி விட்ட பின்பே, தேவி தன் வீட்டுக்கு வரும் படித்த பெண்களான நளினி, கோமதி இருவரைக் கண்டவுடன், தான் படிக்காததற்கு வருந்துகிருள். வளர்ப்புத்தாயான சிவபாக்கியத்தின் துணையால் பகலும், இரவுமாகத் தந்தைக்குத் தெரியாமல் கல்வி கற்கிருள். படிக்காததனுல் தன் பெண் மற்றப் பெண்களிடம் பழகுவதற்குக் கூச்சப்படுவதை அறிந்து, தன் செயலுக்குத் தானே வருந்திப் பல புத்தகங்களை வாங்கி வந்து, மகளுக்கும் தெரியாமல் அவள் அறையில் அவைகளைப் போட்டு, மகளின் இரகசியப் படிப்பிற்குத் துணை செய்கிருர், பாஸ்கரன்.

படித்தால், பகட்டாக நடந்து கொள்ள வேண்டுமென்பதில்லை ; திமிர்கொண்டு குடும்பத்தை அலட்சியம் செய்யவேண்டுமென்ப தில்லை. படிக்கும் பெண்கள் கொண்டுள்ள அத்தகைய தவருன போக்கினை விட்டுப் பணபுடையவர்களாய் விளங்குதல் வேண்டும். பெண்மையின் குணங்கள் மேன்மையடையவே பெற்ற கல்வி துணைபுரிதல் வேண்டும் என்ற கருத்தை இந் நல்ல நாவலில் வலியுறுத்தியிருக்கிருர் ஆசிரியர்.

கவிஞர்களின் கவிதைகளைக் கற்றுத் தேர்ச்சியுடையவரான ஆசிரியர், அக்கவிதை வரிகளையே உரைநடையாக்கி எழுதியுள்ள நடைச் சிறப்பையும் பல இடங்களில் காணமுடிகிறது.

"கலாதேவி, அவளுக்கு ஒரு சின்னஞ்சிறு கிளியாகவோ, செல் வக் களஞ்சியமாகவோ, பேசும் பொற்சித்திரமாகவோ காட்சியளிக்க வில்லை. அவள் சொல்லும் மழலையினுல் துன்பங்கள் தீர்வது போல வோ, அல்லது முல்லைச் சிரிப்பால் உள்ளங் குளிர்வது போலவோ உணரவில்லை. கலாதேவி தனது கலியைத் தீர்த்து உலகில் ஏற்றம் புரிய வந்ததாகத் தேவகிக்குத் தோன்றவே இல்லை."

"அவர்கள் தார் வீதியில், மானினம் வருவ போன்றும், மயி லினம் திரிவ போன்றும் செல்லவில்லை. அவர்கள் அன்னநடைகூட நடந்து வரவில்லை" (பக். 73)

எனவரும் இடங்களில் இத்தகைய நடையை ஆசிரியர் கையாண்டிருப்பதைக் காணமுடிகிறது.

ஆசிரியர் நகைச்சுவை இழையோட நாவலை எழுதிச் செல் வதற்கும் பல சான்றுகளைக் காட்டலாம். வோண்டா என்ற ஸ்டேஷன் பெயரைப் போண்டா என்று கூறுகிருன் தசரதன்.

"போண்டா என்ற பேரும் நன்ருயிருக்கு. எனக்குப் பசி தாங்க வில்லை. பிளாட்பாரத்தில் இருந்த மிட்டாய்க் கடையிலே போய்ப் பார்த்தேன். நாலைந்து கூடையிலே போண்டாவாக இருந்தது. அதனுலேதான் இந்த ஸ்டேஷனுக்கு அந்தப்பெயர் ஏற்பட்டிருக்கிற

தாக்கும் என்று நினைத்தேன்" (பக். 164) என்று அவன் கூறுவது நல்ல நகைச்சுவை.

அகம்பாவம் கொண்டு கணவனை அலட்சியம் செய்த தேவகி மனம் மாறிக் குடும்ப பாசத்திற்காக ஏங்கும் இடங்களில் நம் கண்ணீரை வரவழைத்து விடுகிறார் ஆசிரியர். இருபது வருடங்களுக்குப் பிறகு தாயும் மகளும் சேரும் காட்சியை ஆசிரியர் காட்டும் போது நம் உள்ளமும் பிழியப்படுகிறது.

"தேவகி, தன் குழந்தையின் முகத்தைத் தடவிக் கொடுத்தாள். முகத்தையே வெறி பிடித்தவள்போல் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாகக் கொட்டிக் கொண்டிருக்க, ,'கண்ணே, கண்ணே' என்றுத் திரும்பத் திரும்பச் சொன்னாள். அவளுக்குக் கொஞ்சிப் பழக்கமில்லாதலால், வேறு ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை" (பக். 442). தாயிடம் வளராதவளாகிய தேவி, காப்பி நோட்டில் 'அப்பாவும் அம்மாவும் மறுபடியும் சேர வேண்டும்' என்று எழுதுவதும், நம் நெஞ்சைப் பிழிந்துவிடுகிறது.

இவ்வாறு 'தேவி' என்ற இந்த நாவல், படிப்பு பண்பைப் பாழடிக்காததாக இருக்க வேண்டும் என்ற கருத்தை அறிவுறுத்துவதாய், நகைச்சுவை உணர்வும், பாச உணர்வும் பெருகியோட இலக்கிய நடையுடன் திகழ்ந்து, நல்ல நாவலாக நம் நெஞ்சில் நிலைக்கிறது.

—சி. பா.

## வீரபாண்டியன் மனைவி

**அரு. ராமநாதன் :** முதற்பாகம்—மகுடபங்கம், பக் 344: விலை ரூ. 9. இரண்டாம் பாகம்—அசோகவனம், பக். 403; விலை 11-50; மூன்றும் பாகம், பக் 668, விலை ரூ. 19-50; மங்கள நூலகம், நுங்கம்பாக்கம் சென்னை-34.

வரலாற்று நாவல்கள் படைப்பதில் பலருக்கும் வழிகாட்டியாகத் திகழ்ந்தவர் கல்கி அவர்களே ஆவார். பல பாகங்களில் அதிகப் பக்கங்களில் விறுவிறுப்பு சிறிதும் குறையாமல் சரித்திர நாவல்களைப் படைத்த பெருமை அவர்க்கு உண்டு. அவர் வழியில் அரு. ராமநாதன் அவர்களும், 'வீரபாண்டியன் மனைவி' எனும் இச்சரித்திர நாவலை மூன்று பாகங்களாய், ஆயிரத்தி நானூற்றுப் பதினைந்து பக்கங்களில் படைத்தளித்துள்ளார்.

நாவல்கள் எழுதுவது கடினமான பணி என்றால், சரித்திர நாவல்களை எழுதுவது மிகவும் அரிய பணி எனலாம். கற்பனை

மாந்தர்களைப் படைக்கும் படைப்பாற்றலோடு, வரலாற்று மாந்தர் களையும் வரலாற்று நிகழ்ச்சிகளையும் அனுபிசகாமல் இணைக்கும் ஆழமான வரலாற்று அறிவும், வரலாற்று நாவலாசிரியருக்கு இன்றி யமையாத தேவையாகிறது. வரலாற்று நாவலாசிரியர் வரலாறு நிகழ்ந்த காலம், அதனோடு ஒட்டிய பழக்க வழக்கம், வாழ்க்கை நியதி, ஆடை–அணி - துணைக் கருவிகள் முதலானவற்றை எல்லாம் நன்கு ஆராய்ந்து, நிகழ்ச்சிகளோடு சுவை ததும்பப் பொருத்திக் கதையை உருவாக்க வேண்டும். வெறும் எலும்பாகிய சரித்திரத் திற்குச் சதையும் ரத்தமும் கொடுத்துப் படைக்கப்படுவதே சரித்திர நாவல். அத்தகைய ஆற்றல்கள் வாய்க்கப் பெற்றவரான திரு. அரு. ராமநாதன் அவர்கள் படைத்த சிறந்த சரித்திர நாவலே 'வீரபாண்டியன் மனைவி.'

சடையவர்மன் வீரபாண்டியன் பன்னிரண்டாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் பாண்டியநாட்டை ஆண்டவன். அவன் காலத்தில் சோழ நாட்டைச் சிறப்புடன் ஆண்டு கொண்டிருந்தவனே மூன்றும் குலோத்துங்கன். மூன்றும் குலோத்துங்கன் வீரபாண்டியனை வென்று, அவன் நாட்டைக் குலசேகர பாண்டியனின் மகனுகிய விக்கிரம பாண்டியனுக்கே கொடுத்து ஆளச் செய்தான். தோல்வியுற்ற வீரபாண்டியன் மறுபடியும் நெட்டூரில் சோழரை எதிர்த்துப் பொரு தான். ஆனல் வெல்லமுடியாமல் மறுபடியும் சோழனிடம் தோற்ற அவன், தன் மனைவியையும் சோழரின் கைதியாகப் பறி கொடுக்க நேர்ந்தது. இரண்டுமுறை தோல்வியுற்ற வீரபாண்டியன் எப்படியும் சோழனை வென்றுக வேண்டும் என்ற உறுதியோடு, சேரமன்னனின் துணைவேண்டிச் சேரநாடு அடைகிருன். சோழனை எதிர்க்கும் துணி வில்லாத சேரன், வீரபாண்டியனையும் அவன் மக்கள் வீரகேரளன், பருதிகுலபதி ஆகியோரையும் அழைத்துக் கொண்டு சோழ மன்னனிடம் செல்கிருன். பாண்டியன்பால் இரக்கம் கொண்ட சோழன், வீரபாண்டியனுக்கு அவனுடைய நாட்டில் ஒரு பகுதியும் முடியும் கொடுத்து, ஆளச் செய்கிருன். வீரபாண்டியன் மக்கள் இருவரும் தம் அருகே இருக்கும் சிறப்பினையும் தருகிருன். இந்த வரலாற்று நிகழ்ச்சிகளின் அடிப்படையில் வரலாற்றில் இடம் பெற்ற பாத்திரங்களோடு, கற்பனை மாந்தர்களையும், கற்பனை நிகழ்ச்சி களையும் படைத்து இச்சரித்திர நாவலைப் படைத்திருக்கும் ஆசிரியரின் திறமை போற்றுதற்குரியது.

இந் நாவலில் இடம் பெற்றுள்ள அஞ்சுகோட்டை நாடாள் வான், ஆடையூர் நாடாள்வான், சம்புவராயன், ஏகவாசகன் வாணகோவரையன், ஜனநாதன் ஆகியோர் வரலாற்றுப் பாத்திரங் களே ஆவர். ஜனநாதன் என்கிற பாத்திரம், சோழனுடைய அதிகாரி களுள் ஒருவன் ஆவன். இவனுடைய முழுப்பெயர் 'கூடல் ஏழிசை மோகன், மணவாளப் பெருமாள், வாள்நிலைக்கண்ட பெருமாளாகிய இராசராசக் காடவராயன் ஜனநாதன்' என்று வரலாற்று ஆசிரியர் களால் குறிக்கப்படுகிறது. ஜனநாதன் சோழ மன்னனின் முக்கிய

அதிகாரிகளில் ஒருவனுக இருந்தும் குலோத்துங்க சோழனைப் பெண் பித்தனுகிய இராவணன் என்று பலரிடமும் கதை கட்டி விடுகிருன். வீர சேகரன் முதலான வீரமும், நேர்மையும் வாய்ந்த சோழநாட்டு அபிமானிகளையும், சோழநாட்டிற்கு எதிராகத் திருப்புகிருன். அவனுடைய இந்தத் தேசத்துரோகச் செயலுக்குக் காரணம், சர்வாதிகாரம் நிறைந்த சோழ சாம்ராஜ்யத்தை அழித்துக் கிராமராஜ்யத்தை உருவாக்குவதே ஆகும் என்று ஆசிரியர் காட்டுகிருர். ஜனநாதன் என்ற கோப்பெருஞ்சிங்கன் சோழ அதிகாரியாக இருந்தும், சோழனுக்குக் குழிபறித்தவன். நன்றி மறந்து தன்னலங் கருதி அடாத செயல்கள் பலவற்றைச் செய்து, கி.பி. 13 ஆம் நூற்ருண்டில் சோழ இராச்சியத்தில் அமைதியின்மையும், அக்கிரமச் செயல்களையும் புரிந்து, சோழப் பேரரசு வீழ்ச்சியடையக் காரணமாயிருந்தமையைப் பிற்காலச் சோழர் வரலாற்ருல் அறிய முடிகிறது. அந்த வரலாற்றுச் சான்றினை அடிப்படையாகக் கொண்டே ஆசிரியர் 'ஜனநாதன்' பாத்திரத்தைப் படைத்து, இராஜதந்திரங்கள் நிறைந்த குள்ளநரியாக இச்சரித்திர நாவலில் நடமாட விட்டிருக்கிருர்.

பாண்டிய இளவரசன் பராக்கிரமனைப் பாண்டியநாட்டு அதிகாரி அஞ்சுகோட்டை நாடாள்வான் கலகம் செய்யுமாறு தூண்டிவிடுவதும், தனக்குப் பிடிக்காதவனுகிய சோழ நாட்டுப் படை அதிகாரி ஆடையூர் நாடாள்வான் படையை நெட்டூர்நக் கோட்டை முற்றுகையில் அழிந்துபோகச் செய்வதும் போன்ற எத்தனையோ செயல்களை அவனுடைய இராஜதந்திரத்திற்கு எடுத்துக் காட்டலாம். இந்நாவலில் எங்கும் நிறைந்து, கதையில் பல திருப்பங்களை உண்டு பண்ணும் ஜனநாதனே, தலைமைப் பாத்திரமாகப் படைக்கப்பட்டிருக்கிருன். சிறந்த பாத்திரங்களைப் படைக்கவல்ல ஆசிரியரின் படைப்புத்திறமைக்கு ஜனநாதனே சிறந்த எடுத்துக் காட்டு. காதலுக்கும் கடமைக்கும் இடையில் சிக்கித் தவிக்கும் வீரனுக வீரபாண்டியனையும் துரோகமும் சூதும் தொட முடியாத சோழநாட்டு வீரனுக வீரசேகரனையும் ஆசிரியர் படைத்திருப்பதோடு தேவி, ஊர்மிளா, சிவகாமி ஆகிய பெண் பாத்திரங்களையும் சிறப்பாகப் படைத்துள்ளனர்.

> "உயர்ந்த நாவலில் படைக்கப்படும் கதை மாந்தர் உண்மை மனிதர் போல ஆகி விடுகின்றனர்"

என்று இலக்கிய மரபில் டாக்டர் மு.வ. கூறியுள்ளபடி இந் நாவலில் கூறப்பட்டுள்ள வரலாற்றுப் பாத்திரங்களும், கற்பனைப் பாத்திரங்களும் இன்றும் வாழக் கூடிய உயிருள்ள பாத்திரங்களாக ஆகி விட்டனர்.

இந்நாவலால், ஆசிரியர் கம்ப ராமாயணத்தில் அளவு கடந்த தேர்ச்சி யுடையவர் என்பதை நன்ருக அறியலாம். ஒவ்வொரு

படலத் தொடக்கத்தையும். கம்ப ராமாயணப் பாடல் அடிகளுடனே தொடங்கியுள்ள ஆசிரியர். இந்நாவலின் மூன்று பாகங்களுக்கும் யுத்த காண்டம், (மகுட பங்கம்) சுந்தர காண்டம், பால காண்டம், என்று இராமாயணத்துடன் தொடர்புபடுத்தியே பெயரும் இட்டிருப்பது குறிப்பிடத் தக்கது. இந்நாவலில் இடம் பெற்றுள்ள குலோத்துங்கனை இராவணன் ஆகவும், வீரபாண்டியனை இராமனாகவும், வீரபாண்டியன் மனைவியைச் சீதையாகவும், வீரசேகரனை இந்திரஜித்தாகவும், ஜனநாதன் வாக்கில் வைத்து ஆசிரியர் கூறியிருக்கிறார். அனுமார், கூனி, திரிசடை முதலான பிறபாத்திரங்களும் இந் நாவலில் இருக்கின்றனர்.

நாவலின் இடையிலும்கூடக் கம்ப ராமாயணப் பாடல் அடிகளை எடுத்தாண்டிருக்கும் சிறப்பைப் பல இடங்களிலும் காண முடிகிறது. வீரசேகரன் அருகில் நிற்கும் ஊர்மிளாவைக் கண்ட ஜனநாதன் சம்புவராயரிடம்,

> "சம்புவராயரே! இப்போது நம் வீரசேகரன் அருகில் இந்தப் பெண் எப்படி நிற்கிறாள் தெரியுமா?.....,சொல் நலம் கடந்த காமச் சுவையே ஒரு உருவமாக்கி இன்நலம் தெரிய வல்லான் எழுதியது என்ன நின்றாள்..... என்று நம் கம்பர் உலாவியல் படலத்தில் வர்ணிக்கிறாரே அந்தக் கவிதை வரிகள்தான் ஞாபகம் வருகின்றன" என்று கூறுவதாக ஆசிரியர் அமைத்திருக்கிறார். (பக். 68)

> "கம்ப இராமாயணத்தில் அசோகவனச் சீதையின் கற்பை இராவணனிடமிருந்து ஒரு சாபம் காப்பாற்றியது. இப்போது அசோகவனக் கோட்டையிலுள்ள தேவியின் கற்பை என்னுடைய சபதம் காப்பாற்றும்' என்று இராமாயணத்தைத் தொடர்புபடுத்தி வீரசேகரன் பேசுவதையும் நாம் காணலாம் (பக். 103)

இந்நாவலில், பாத்திரங்கள் செய்திப்பரிமாற்றத்தை ஒலை நறுக்கின் துணையால் செய்துகொள்ளும் போதும், இராமாயண அறிவைப் பயன்படுத்துவதாக ஆசிரியர் அமைத்திருக்கிறார்.

> "கம்பராமாயணம்–கருத்துரை–சீதையைச் சிறைமீட்கும் படலம்–பிலத்துவாரம்–சூரிய தேவரிடம் விண்ணப்பமும் விநாயகர் துதியும்–தேவை, சுபதினமான நல்லநாள் நட்சத்திரம் நாழிகை–உடனே மலர்மகள் மணாளன் துணை–ராம லக்ஷ்மணர்கள் வானர சேனையுடன் அசுரவதை–மருண்டோடும் மாயமான்–துவாரக பாலர் முக்தியடைந்த கதை–சேர்ந்தாள் தலைவன் தாளே–நாதன் தாள் வாழ்க, நமச்சிவாயம் வாழ்க–மாயா ஜனகன் வருகை–எரியூட்டுப் படலம்–

திருமுடி சூட்டுபடலம்" என்னும் குறிப்படங்கிய ஓலை, சிறைப்பட்ட வீரபாண்டியன் தேவிக்கு அனுப்பப்படுவதை ஆசிரியர் காட்டியுள்ளார். (பக். ii 122) இவ்வாறான பல மேற்கோள்களால் ஆசிரியரின் கம்ப ராமாயண அறிவு, இந்நாவல் படைப்பில் கையாளப்பட்டிருப்பதற்கு எடுத்துக் காட்டலாம். மேலும் பாம்பாட்டிச் சித்தரின் பாடல்கள் (ii: *176, 313, 177*) தேவாரப்பாசுரங்கள் (i: *98,99*), நாச்சியார் திருமொழிப்பாடல் (ii : 240) ஆகியனவும் ஏற்ற இடங்களில் எடுத்தாண்டுள்ள ஆசிரியர் சிறப்புப் போற்றுதற்குரியது.

ஆசிரியர் பெரிதும் உரையாடல்களைக் கொண்ட எளிய நடையிலேயே இந்நாவலைச் செய்திருக்கிறார். கதையைச் சலிப்பின்றிப் படித்துச் செல்ல அத்தகு எளியநடை துணைசெய்திருப்பதோடு, சில இடங்களில் ஆசிரியரின் அலங்கார நடை படிப்பவரின் மனத்தை மயக்கி, மகிழ்ச்சியும் செய்கிறது.

"உன்னையா அழகில்லையென்று சொல்லுகிறாய்? ஊர்மிளா!..... ஆயிரம் வருஷங்களுக்கொரு முறை தோன்றும் ஓர் அழகுத் திரட்சி நீ! இதயக் கூண்டில் ஓயாமல் ஆத்ம மொழிகள் பேசும் பசுங்கிளி நீ! உன் மாயச் சிரிப்பு, மகர யாழில் மகரந்தப் பூக்கள் மீட்டும் இன்னிசை! உன் குரலினிமை, பாற்கடலில் திரளும் தேவ அமுது! உன் கருங் கூந்தல் காவிரியாற்றின் வளமான கருமணல்!.... ஊர்மிளா, நீ எவருக்கும் எட்டாத வானக்கொம்பிலுள்ள பசுந்தேன்" (பக். *88.*)

"முல்லைப் பற்கள் வெண்ணிலவை ஈன்றெடுக்கும்' ஆடவரின் பரந்த நெஞ்சங்களைக் குத்துவதுபோல் கூர்ந்து பார்க்கும் ஆசை விழிகள் கெண்டை மீன்கள் போல் புரளும். கிறுகிறுத்த விழியோரங்கள் சிவந்து, குவளைமலர் போன்ற கருமணிகளில் செவ்வரி படர்ந்து ரோஜா மொக்குகளாக மாறிவிடும்." (பக். ii *116*)

முதலான பல இடங்களில் ஆசிரியரின் அலங்கார நடையைக் காணலாம்.

"அது புலியின் குகையாக இருக்கலாம்! ஆனால் வீரபாண்டியன் செம்மறியாடல்ல" பக். 149

முதலான சில இடங்களில் உவமை விரவிய நயமான நல்ல நடையை ஆசிரியர் ஆண்டிருக்கிறார்.

கம்ப ராமாயணத்தை ஆழமாகக் கற்றதனால், ஆசிரியர் கம்பன் பாடல்களையே உரைநடையாக்கி எழுதிய பாங்கினையும் சில இடங்களில் காணலாம்.

"அதைக் கேட்டதும் வீரபாண்டியனுக்கு மெய் சிலிர்த்தது; நா உலர்ந்தது; உயிர் ஓடலுற்றது; உள்ளம் புலர்ந்தது; கண்கள் சிவந்தன; செய்வது இன்னதெனத் தெரியாமல் சஞ்சலத்தில் ஆழ்ந்தான்; பாண்டிமாதேவியின் வாக்குறுதி தன் சூழ்வினையோ என்று நெஞ்சழிந்தான்; வேதனை முற்றிட வெந்துவெந்து கொல்லன் உலைக் களத்தில் ஊதும் கனல்போல் பெருமூச்சு விட்டான்." (பக். i : 144)

சுந்தரகாண்டம் காட்சிப்படலத்தில் சீதையின் நிலை குறித்த பாடலும், அயோத்தியா காண்டம் கைகேயி சூழ்வினைப் படலத்தில் தயரதன் நிலைகுறித்த பாடலுமே, மேற்காட்டிய மேற்கோளில் உரை நடையாக்கப்பட்டு எழுதப்பட்டிருக்கிறது என்பது தெளிவு.

இச்சரித்திர நாவலில் இடம் பெற்றுள்ள சில சிறந்த உவமை களையும் எடுத்துக்காட்டிப் பாராட்ட வேண்டியது கடமையாகும்.

"மன்னவன் இல்லாத மாநிலம் போலவும், கதிரவன் இல்லாத பகல் போலவும், சந்திரிகை இல்லாத இரவு போலவும், உள்ளுறை உயிர் இல்லாத உடல் போலவும் வீரபாண்டியன் மனைவி சாம்பிய முகத்துடன் மூடு வண்டிக்குள் அமர்ந்திருந்தாள்." (பக். i : 320)

"மதுக்கிண்ணத்தைப் பாலாடையில் கவிழ்த்ததுபோல, மேன் மாடத்தில் நிலா வெளிச்சம் படர்ந்தது." (பக். ii : 229)

"சரத்கால சந்திரோதயம் போன்ற வீரசேகரனின் முகம் சந்திரகிரகணம் பிடித்ததுபோல் இருள் கவ்வியது." (பக். ii : 396)

"மணம் இல்லாத மலரும் மணம் செய்து கொள்ளாத மனிதனும் குப்பைக்குச் சமானமேயாகும்." (பக். iii : 294)

"இரண்டறக் கலக்கத் துடிப்பதுபோல் அளப்பரும் ஆனந்தத்துடன் ஒன்றையொன்று உற்று நோக்கிக் கொண்டிருந்த இரண்டு காதலர்களின் தலைகளும், மண் தரையில் சேர்ந்த இரண்டு தங்கத்தாமரைகள்போல் ஒரு தெய்வாம்சம் பொருந்திய களையுடன் ஜொலித்தன." (பக். iii : 664)

பிற சரித்திர நாவல்களுக்கும் இந்த நாவலுக்குமுள்ள பெரிய வேறுபாடாகச் சுட்ட வேண்டியது என்னவெனில், ஆசிரியர் அத்தியாயத்திற்கு அத்தியாயம் வர்ணனைகளில் ஈடுபட்டுப் பக்கங் களைக் கூட்டாமல், எடுத்த எடுப்பிலேயே கதையைக் கொண்டு

செல்கிருர். ஒவ்வொரு பாகத்தின் முடிவிலும், அந்தப் பாகத்தின் முடிவையும் அடுத்த பாகத்தின் தொடக்கத்தையும், ஜனநாதன் வாயிலாகக் கூறியிருக்கும் போக்கும், ஒரு புதிய பாணியே ஆகும். அச்சுப் பிழைகள் மலிந்துள்ள குறையொன்றை நீக்கி, இந்நாவல் படைக்கும் பணியில் ஆசிரியருக்கு ஏற்பட்ட தாக்கங்களையும் முன்னுரையாகக் கொடுத்து வெளியிட்டால், இந்நாவலின் ஏற்றம் இன்னும் கூடும்.

—சி. பா.

## ஆராய்ச்சி நெறிமுறைகள்

உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-20 ; விலை ரூ. 5

உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவன வெளியீடாகிய இந்நூல், பேராய்வுப் பொருந்துணை நூலாகும். பலதிறப்பட்ட அறிவியல் ஆய்வாளருக்கும், இலக்கிய ஆய்வாளருக்கும் உதவும் வகையில் தொகுக்கப்பட்ட கட்டுரைகளின் தொகுப்பே இந்நூல்.

ஆங்கில இலக்கிய ஆய்வு நெறிமுறைகளை டாக்டர் எஸ். பி. அப்பாசாமி அவர்களும், மருத்துவ ஆய்வு நெறி முறைகளை டாக்டர் லலிதா காமேஸ்வரன் அவர்களும், வேதியியல் ஆய்வு நெறிமுறைகளை டாக்டர் சுப. சண்முகநாதன் அவர்களும், பொருளியல் ஆய்வு நெறிமுறைகளை டாக்டர் வே. சண்முகசுந்தரம் அவர்களும், இயற்பியல் ஆய்வு நெறிமுறைகளை டாக்டர் பி. திருஞானசம்பந்தம் அவர்களும், தமிழாய்வு நெறிமுறைகளை டாக்டர் ந. சஞ்சீவி, டாக்டர் மெ. சுந்தரம், ஆகிய பேராசிரியர்கள் இருவரும், பொதுவாக ஆய்வு நெறிமுறைகளைக் குறித்து டாக்டர் வா. செ. குழைந்தைசாமி அவர்களும் கட்டுரைகள் எழுதியுள்ளனர். டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்களுடைய சிறப்புரையும், டாக்டர் ரமேஷ் மோகன் அவர்களுடைய சிறப்புரையும் கூட இந்நூலுள் இடம்பெற்றுள்ளன.

நாவலர் அவர்கள் தம்முரையில் வேறெந்த மொழிக்கும் இல்லாத பண்பட்ட நாகரிகம், பண்பாடு, வரலாறு, இலக்கியம், இலக்கணம் ஆகிய சிறப்புகள் தமிழ் மொழிக்கு இருப்பதால், தமிழ் மொழியில் ஆய்வின் பரப்பு விரிந்திருக்கும் சிறப்பைச் சுட்டியுள்ளார். ஆய்வறிஞர் ரமேஷ் மோகன் அவர்கள் ஆய்வினை Applied Research, Basic Research என இருவகையாகப் பாகுபடுத்தி, இரண்டும் ஒன்ருேடு ஒன்று கொண்டுள்ள தொடர்பை விரித்துரைத்துள்ளார். மனித முன்னேற்றத்திற்கு இவ்விரு வகை ஆய்வுகளும் ஒன்று போலவே இன்றியமையாதன என்று கூறியிருக்கிருர்.

ஆங்கில இலக்கிய ஆய்வு நெறிமுறைகள் பற்றிய தம் கட்டுரையை (1) ஆய்வறிஞர் (2) ஆய்வுப்பொருள் (3) இலக்கியப்பணி

(4) ஆய்வணுகு முறை என நான்கு பகுதிகளாகப் பிரித்துள்ளார் திரு. எஸ். பி. அப்பாசாமி அவர்கள்.

> "The researcher must of necessity be a Lover of books and manuscripts - a bibliophile ... The research worker must be perfectionist. ... And fianlly the researcher must have critical ability."

என்று ஆய்வறிஞர் கொள்ள வேண்டிய இன்றியமையாத குணங்களை விரிவாக விளக்கியுள்ளமையை இக்கட்டுரையிற் காணலாம்.

பேராசிரியர் திருமதி லலிதா காமேஸ்வரன் அவர்கள் ஆய்வுப் பணிகளை மூன்றாகப் பகுத்து விளக்கியுள்ளார். "The first part of the work consists of recognizing a problem... The next step consists of defining the problem ... The third stage is the reduction of the problem to severel constitent steps which will ultimately form integral parts of the whole problem."

தேவையான வினாக்களை ஆய்வாளனே உண்டாக்கி அவற்றுக்கான விடைகளை வரிசைப்படி கண்டு சொல்லும் ஆய்வுநெறிமுறையை அறிவுறுத்தியுள்ளார் இவர்.

"ஆய்வு என்பது ஆழ்ந்து பயிலும் ஆர்வமும், நுணுகி நோக்கும் திறனும் கொண்டவர்களின் மனங்களில் தன்னியல்பாகத் தோன்றும் அடிப்படை ஐயங்களுக்கு விடைகாண மேற் கொள்ளும் முயற்சியாகும்." — இவ்வாறு ஆய்வுக்கு விளக்கம் தந்திருப்பவர் டாக்டர் சு.ப. சண்முகநாதன். அறிவியலை உயிரியல், இயற்பியல் அறிவியல் எனப் பாகுபாடு செய்துள்ளார் இவர். கடவுளால் படைக்கப்பட்ட உயிருள்ள தாவரம், பிராணி, மனிதன் ஆகிய உயிரினங்களைப் பற்றிய அறிவியல் உயிரியல் எனவும், உயிரற்றவைகளைப் பற்றிப் பயிலுவன இயற்பியல் அறிவியல் என்றும் தந்துள்ள அவருடைய விளக்கம், போற்றுதற்குரியது.

பேராசிரியர் டாக்டர் வே. சண்முக சுந்தரம் அவர்கள் ஆய்வுக் கட்டுரையைத் தயாரிப்பதில் (1) உண்மை முழுவதையும் கூறுதல் (2) தான் வெளியிட விரும்பும் முழு உண்மையில் படிப்பவரின் கவனம் ஈடுபடுமாறு செய்தல் ஆகிய இரண்டு உட்கோள்களைக் கொள்ள வேண்டும் என்று கூறியுள்ளார். அவரே அத்தகு ஆய்வுக் கட்டுரையின் நடைச்சிறப்புக்கு, (1) சொற்களை நுட்பமாகத் தேர்ந்தெடுத்துக் கையாளுதல், (2) சிறப்பான பத்திப் பகுப்பு, (3) நிறுத்தக்குறியீடுகளைக் கவனமாகப் பயன்படுத்துதல் ஆகியவற்றைக் கூறியுள்ளார். "அடிக்குறிப்புகளை மிதமிஞ்சிப் பயன்படுத்துவதால் நிச்சயமாக எரிச்சலே உண்டாகும். உண்மையான புலமைக்குப் பதவீடாக இந்த அடிக்குறிப்புகள் அமைய இயலாது" என்பார் அவர்.

ஆய்வில் உதவியவர்களை முன்னுரையில் குறிப்பது தேவை இல்லை என்பது இவர் கருத்து. "அமெரிக்கரின் இன்றைய வழக்கப்படி நன்றி தெரிவிப்பதாக இருந்தால், பேனவைப் பிடித்தெழுதிய கை விரல்களுக்கும், காகிதத்திற்கும், மைக்கும் கூட நன்றி கூற வேண்டியிருக்கும்" என்று அத்தகைய நன்றி பாராட்டும் போக்கினைச் சாடுகிறார் இவர்.

இயற்பியலின் பிரிவுகள் பற்றியும், இயற்பியலுக்கும் பிற அறிவியல் துறைகளுக்கும் இடையே அமையும் தொடர்புகள் பற்றியும் விரிவாக எழுதியுள்ளார் திரு. பெ. திருஞானசம்பந்தம் அவர்கள். ஃபிசிக்ஸ் என்னும் ஆங்கிலச் சொல்லிற்கு இணையான தமிழ்ச்சொல் இயற்பியல் என்பதை நாச்சுரல் ஃபிளாசஃபி (Natural Philosophy) யினோடு தொடர்புபடுத்தியுள்ள அவர் தம் கட்டுரையில் அறிவியலுக்கு, சர்.சி வி. இராமன் அவர்களும், ஐன்ஸ்டீன் அவர்களும் கூறியுள்ள வரையறைகளையும் எடுத்துக்கூறியுள்ளார்.

உளவியல் ஆராய்ச்சி முறைகளை விளக்கப் போந்த எஸ். நாராயணன் அவர்கள் டிச்சனர், வாட்சன், ஷெரீஃப், துர்கானந்த சின்ஹா, ஹெல்ம் ஹோல்ட்ஸ் ஆகிய ஆய்வறிஞர்களின் கருத்துக்களையெல்லாம் எடுத்துக்காட்டி விளக்குவது சிறப்பிற்குரியது. குழந்தை நடப்பது மரபுவழியினலா? அல்லது பயிற்சி வழியினலா? என்பதை ஆய, இரட்டையரைத் தேர்ந்தெடுத்து ஆகவேண்டிய பரிசோதனையைக் கூறியுள்ளார். ஒரே மரபு நிலை கொண்ட இரு ஓரேபால் இரட்டையரைத் தேர்ந்தெடுத்து, ஒருவனுக்கு மட்டும் நடக்கவும் ஓடவும், படிகளில் ஏறவும் பயிற்சியளித்து, பிறகு இருவரும் நடத்தலில் பெற்றுள்ள திறமையைக் கணக்கிட, பயிற்சி பெற்றவன் பயிற்சி பெருதவனுடன் ஒத்திருந்தால், நடத்தலுக்கு மரபுநிலை மட்டுமே போதுமானது என்றும், பயிற்சி பெற்றவன் பயிற்சி பெருதவனைக் காட்டிலும் அதிகத் திறனை கொண்டிருந்தால் பயிற்சி நடத்துவது இன்றியமையாததென்றும் முடிவு கூறவேண்டும் என்று ஆசிரியர் கூறியிருக்கும் ஆய்வு முறைகள், உளவியல் ஆய்வாளருக்கு வழிகாட்டுவதாகும்.

"ஆராய்ச்சியின் தோற்றம் ஆதிமனிதனின் தோற்றம் ; மனித மூளை மலர்ச்சி பெற்ற அக்கணமே அமைந்ததுதான் ஆராய்ச்சி" என்று ஆராய்ச்சியின் பிறப்பைக் கூறும் டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள், தமிழ்மக்களின் பேச்சில் காணப்படும் ஆராய்ச்சியின் அடிப்படைகளைப் பற்றியும் விரிவாக ஆராய்ந்துள்ளார். அவ்வாறே தொல்காப்பியம், திருக்குறள், நாலடியார், சிறுபஞ்சமூலம், புறநானூறு, சிலப்பதிகாரம், திவாகரம், அறநெறிச்சாரம் ஆகிய இலக்கண இலக்கிய நூல்களில் காணப்படும் ஆராய்ச்சிக்கு வேண்டிய அடிப்படைகளையும் சுட்டியுள்ளார். ஆராய்வு என்ற சொல்லின் வேர் பற்றிய ஆய்வையும் திறம்படச் செய்துள்ளமை போற்றுதற்குரியது.

> "ஆராய்ச்சியில் வேட்கை ஒருகண் | கை என்றால் உழைப்பு இன்னொரு கண் | கை" என்று ஆய்வில் வேட்கையும் உழைப்பும் பெறும் இடத்தைக் கூறியுள்ளார். இணைப்பில் இவர் வரைந்துள்ள வரை படங்கள் சிறப்பானவை.

பொருளாய்வுக் கட்டுரையில் அமைக்க வேண்டிய நான்கு பண்புகளைக் கூறியுள்ளார் இவர். அவை,

> 1. சரியான உண்மைகள் 2. தர்க்கரீதியான விவாதம் 3. தெளிவான விளக்கம் 4. பாதிக்கப்படாத, செறிவான எளியஉரைநடை. அடிக்குறிப்பு கொடுக்கும் முறையைச் சான்றுகளுடன் இவர் விளக்கியிருப்பது பாராட்டுதற் குரியது. வரைபடங்கள் வாயிலாக ஆய்வு நெறிகளை விளக்கியிருக்கும் இவர், ஆய்வு நெறிமுறைகள் அறியத் துணைசெய்யும் நூல்களின் பட்டியலும் கொடுத்துள்ளார்.

> "ஆய்வில் பயிலும் 1. தர்க்கமுறை 2. அறிவியல் முறை 3. அமைப்பு முறை ஆகியவற்றைக் கூறியுள்ள டாக்டர் வா. செ. குழந்தைசாமி அவர்கள் அம்முறைகளைத் துணை யாகக் கொண்டு ஆயும் ஆய்வளான் ஆராயப்படும் பொருளில் ஒப்புக்கொள்ளப்படுவன ; ஊகித்துக் கொள்வன, ஆராயப்படவேண்டுவன, ஆராயப்பட வேண்டுவனவற்றில் தற்போது ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டிருப்பது இது என்பதை வரையறுத்துக் கொள்ள வேண்டும் என்று கூறியிருக்கிறார்.

> "ஆய்வுநெறிமுறைகளை அறிஞர் பெருமக்கள் அனை வரும் விரிவாக விளக்கியுள்ளவற்றில், ஒருசிலவற்றையே சுட்டிக்காட்ட முடிந்தது. அறிவியல் மற்றும் இலக்கிய ஆய்வாளர்கள் அனைவருக்கும் ஒருங்கு உதவி செய்யும் ஒருபெரும் நூல் இந்நூல் எனலாம்.

*சி. பா.*

## தலைமுறைகள்

*நீல. பத்மநாபன்;* ஜெயகுமாரிஸ்டோர்ஸ், நாகர்கோவில், பக் : xii + 408, விலை ரூ. 5

தலைமுறை தலைமுறைகளாகப் பெண்கள் ஆண்களின் அடிமை களாக இருந்து வருவதால், ஆண்களின் கொடுமை எவ்வாறு பெண் சமுதாயத்தைப் பாதித்து வந்திருக்கிறது என்பதை எடுத்துக்காட்டும் சிறந்த வட்டார நாவலே 'தலைமுறைகள்.

இந்த நாவலில் நாகம்மையை மணந்த செவந்திப்பெருமாள் திருமணம் முடிந்த ஆறே மாதத்தில் அவளுக்குத் தாய்மை இல்லை என்ற பழியைக் கூறிப் பிறந்தகத்துக்கு அனுப்பிவிடுகிறன். அனுப்பிய கையோடு, வடிவு என்ற வேறொரு பெண்ணையும் நாகம்மை வீட்டாருக்குத் தெரியாமல் மணந்து, ஊருக்கு அழைத்து வந்து வாழ்க்கை நடத்துகிறன். பெண் டாக்டரிடம் நாகம்மையை அழைத்துச் சென்ற அவள் தம்பி திரவியம், அவளது பெண்மையில் யாதும் குறையில்லை என்பதையும், செவந்திப்பெருமாளே ஆண்மையற்றவன் என்பதையும் அறிந்து கொள்கிறன். வாழா வெட்டியான சகோதரியை வாழவைக்கத் திரவியம், செவந்திப் பெருமாளிடம் மன்ருடியும், அவன் நாகம்மையை ஏற்க மறுத்துவிடுகிறன். 'பெண்மையற்றவள்' என்று அவன் நாகம்மைமேல் கூறிய பழிச் சொல்லை அகற்றவும், உடன்பிறந்தவளுக்கு மறுவாழ்வு கொடுக்கவும் துணிந்த திரவியம், நாகம்மையை நண்பன் குற்ருலத்துக்கு மறுமணம் செய்து கொடுக்கவேண்டிய எற்பாடுகளைச் செய்கிறன். திரவியத்தின் திட்டம் நிறைவேறு முன்னே செவந்திப் பெருமாளால் வஞ்சகமாய்க் கொல்லப்படுகிறன் குற்ருலம். இதுவே இந்நாவலின் கதைச் சுருக்கமாகும்.

> பழமையில் ஊறிப்போன சமுதாயத்தில் பெண்ணுக்கு மறுமணம் என்பது புரட்சிதானே! அந்தப் புதுமையைச் செய்ய விழையும் புதிய தலைமுறையின் பிரதிநிதியாகத் திரவியத்தையும், "ஆம்புளையொ அப்படீன்ஞ, பொட்டசிகளும் துணிஞ்சாச்சுண்ணு லோகத்துக்கு அழிவுதான் ......கலிகாலம் முத்திப் போச்சு" என்று கூறும் பழைய தலைமுறையின் பிரதிநிதியாக உண்ணுமலை ஆச்சி போன்ற பலரையும் இந்நாவலில் படைத்திருக்கிருர் ஆசிரியர்.

சமுதாயத்தின் நேர் தொடுக்கும் சிலுவைப்போர் புனிதவேள்வி என்று இம்மறுமணத்தைச் சுட்டியுள்ளார் ஆசிரியர். உலகத்து மூட நம்பிக்கைகளை முழுதையும் அணியாய்த் தன்னகத்தில் கொண்டிருக்கும் ஒரு சமூகத்தில், பெண்ணுக்கு மறுமணத்தைக் கற்பனை செய்துகூடப் பார்க்கமுடியாது என்றபோதும், "போன தலைமுறையைப்போல், இதை இப்படியே விட்டுவிட்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பது, இனியும் தன்ஞல் கிஞ்சித்தும் முடியாது" என்கிறன் திரவியம். அதனுல் தான் அவன் செவந்திப் பெருமாளிடம் "நீரு கெட்டின தாலியை அவுத்து திரும்ப உம்மட்டையே தந்து விட்டு அவளை வேறொரு ஆளுக்கு நாங்க, ரண்டாமதாக கல்யாணம் செய்து கொடுக்கப் போவது மட்டும் நிச்சயம்......சத்தியம்" என்று சத்தியமும் செய்கிறன். ஆண்களின் குறைகள் பலவாக இருந்தாலும், பெண்களை அடங்கி ஒடுங்கி அஞ்சி வாழவேண்டும் என்றும், ஆனுல் ஆண்களோ பெண்களின்மேல் என்னபழியும் இட்டு, விலக்கிவைத்து, வேறுபெண்ணை மணக்கலாம் என்றும்,

உள்ள நடுநிலேயற்ற தீயசட்டங்கள் சமுதாயத்தில் ஆட்சி செய்வதைப் புதிய தலேமுறையும் ஏற்றுக்கொள்ளாது என்பதைக் கூறியிருக்கிருர் ஆசிரியர்.

> "உங்களிடம் கடவுள் இப்படியொரு சதியைச் செய்திருப்பதாக உங்க கல்யாணத்துக்கு அப்புறம்தான் உங்க பெண்டாட்டி அறிந்தாளுண்ணு வச்சூடுங்கோ... . அப்பம், உங்களே வேண்டாமுண்ணு இப்படித் தள்ளிவச்சு விட்டுப் போய், இன்னெரு கல்யாணம் செய்து கொள்ள நீங்க அவளேச் சம்மதிப்பேளா?" என்று ஆசிரியர் திரவியம் கூற்ருக செவந்திப் பெருமாளேக் கேட்கும் கேள்வி, செவந்திப் பெருமாளேப் போன்ற இரக்கமற்ற ஆண்கள் அனேவரையுமே பார்த்துக் கேட்பதாகும்.

> செவந்திப் பெருமாளின் கொடுமையால் நாகம்மை தூக்கில் தொங்க முயல்வதையும், பிறகு அவன் அவளே விலக்கிவிடப் பிறந்தகம் வந்து மனம்புழுங்கிச் சாவதையும் ஆசிரியர் நன்ருகச் சித்திரித்துள்ளார்.

> "என்ன நினேத்துக் கொள்வாளோ, திடீரிண்ணு வாரியலேயும் எடுத்துக்கிட்டுப் போய் களம் முழுதையும் பெருக்கத் தொடங்கி விடுவாள் .. பிறகு கிணற்றிலிருந்து தண்ணீரை இறைச்சு இறைச்சு, தொட்டி நிறைஞ்சு வடிவது கூடத் தெரியாமல் விட்டுக் கொண்டே இருப்பாள்."
> (பக்: 148)

பெண்ணேப் பெற்றுத் துன்பத்திற்குள்ளானவர் வீட்டிலுள்ள அனேவரின் உள்ள நிலேகளேயும் அவ்வாறே படம் பிடித்துக் காட்டுகிருர் ஆசிரியர். நாகம்மாளின் தம்பி திரவியம் வகுப்பில் பாடம் நடக்கும் போதும், வகுப்பு முடிந்து வீட்டுக்குத் திரும்பும் வழியிலும் நாகம்மைக்குத் திருமணம்நடந்த நாள் முதலாக அவளேக் கணவன் விரட்டியனுப்பிய வரையிலுமான நினேவுகளிலேயே முழுகி விடுவதை ஆசிரியர் நன்ருகக் காட்டியுள்ளார்.

> "ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாத பலமாதிரி நினேவுகள்......! எல்லாம் எல்லாம் பாவம்...' நாகு அக்காளேச் சுற்றித்தான்" என்கிருர் ஆசிரியர்.

இப் புதினத்தில் மணவினேச் சடங்குகள், பெண் பூப்பு அடைந்த பின் செய்யப்படும் சடங்குகள், சீமந்தம் மற்றும் குழந்தை பிறந்த பின் செய்யும் சடங்குகள், இறந்தவர் வீட்டில் செய்யப்படும் சடங்குகள் ஆகியவற்றை எல்லாம் ஏற்ற இடங்களில் ஆசிரியர் விவரித்துச் செல்கிருர். நாட்டுப் புறக் கதைகளும், நாட்டுப்புறப் பாடல்களும், அங்கங்கே இடம்பெற்று, நாவலேச் சிறப்பித்திருக்

கின்றன. தாலாட்டுப் பாடல்களும், விளையாட்டுப் பாடல்களும், ஒப்பாரிப் பாடல்களும், மாரடிப் பாடல்களும் இடம்பெற்று இந் நாவல் சிறந்த கிராமிய நாவலாகத் திகழுகிறது. ஆசிரியரே முன்னுரையில் கூறியுள்ளபடி அவருக்குப் பழக்கமான ஒரு சமூகத்தின் நாடித்துடிப்புகள், பூர்வீக வரலாற்று விளக்கங்கள், ஆசார அனுஷ்டானங்கள், சடங்கு சம்பிரதாயங்கள், விளையாட்டுகள், வாழையடி வாழையாய் வந்தடைந்த கதைகள், பாடல்கள், பழமொழிகள், பிராந்தியக் கொச்சை வார்த்தைகள், பேச்சு வழக்குகள், ஆகியவைகள் இணைந்த சிறந்த கலைப்படைப்பே, இத் 'தலைமுறைகள்' என்னும் புதினம்.

—சி. பா.

# தமிழ்த்துறைச் செய்திகள்
## 1976 — 77

### பொருளடக்கம்

## 1. அறக்கட்டளைச் சொற்பொழிவுகள்—1976-77

| வரிசை எண் | நாள் | அறக்கட்டளையின் பெயர் | கட்டுரையாளர் | பொருள் |
|---|---|---|---|---|
| 1. | 4, 5, 6—3—'76 | கல்கி கிருட்டிண மூர்த்தி நினைவு அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் | பேராசிரியர் ம. ரா. போ. குருசாமி | டாக்டர் மு.வ.வின் கருத்துகள்—ஒரு மதிப்பீடு |
| 2. | 1, 2, 3—4—'76 | டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை வெள்ளிவிழா நினைவு அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் | திரு. சீ. இராமலிங்கனார் | ஆட்சித் தமிழ் |
| 3. | 24, 25—3—77 | ,, | பேராசிரியர் அடிகளாசிரியர் | தொல்காப்பியம்-செய்யுளியல் |
| 4. | 4, 5—4—77 | அன்னை சொர்ணம்பாள் நினைவு அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் | தவத்திரு. அழகரடிகள் | திருக்குறள் உள்ளுணர்வு |
| 5. | 11, 12, 14—4—77 | கல்கி கிருட்டிண மூர்த்தி நினைவு அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் | டாக்டர் தா.வே. வீராசாமி | தமிழில் சமூக நாவல்கள் |

## 2. ஆசிரியர் - மாணவர் கருத்தரங்கு—1976-77

| வரிசை எண் | நாள் | கட்டுரையாளர் (ஆசிரியர்) | ஆய்வுத் தலைப்பு | கட்டுரையாளர் (மாணவர்) | ஆய்வுத் தலைப்பு |
|---|---|---|---|---|---|
| 1. | 29—1—'76 | திரு. கு. மோகனராசு | 1. களவுக்காலத் தலைமகளின் மெய்ப்பாடுகள்-ஓர் அட்டவணை | திரு. செ. இராசேந்திரன் | 1. 'திராவிடம்' - அறிஞர் பெருமக்களின் கருத்துரைகள் |
| | | | (குறளும் மெய்ப்பாடும்) | | 2. திராவிடக்கோட்பாட்டின் வரலாறு |
| | | | 2. திருக்குறளிலும் தொல்காப்பியத்திலும் இன்பம் என்ற சொல்லாட்சி-ஒரு புள்ளி விவரப்பார்வை. | திருமதி கிருட்டிணை சஞ்சீவி | ஒப்புமை – ஒரு பல துறை நோக்கு |
| | | திரு. து. மூர்த்தி | ஏ. தெ. சுப்பையாவின் 'முறையீடு'-திறனாய்வு | திரு. சண்முகசுந்தரம் | சித்தர் இலக்கியத்தில் செவிவழி இலக்கியப் பண்புகள் |
| | | செல்வி தி.சு. சத்தியம் | திருக்குறள் 'துறவு'-ஒரு குறள் ஆய்வு | திரு. த. அமிர்தலிங்கம் | மணிமேகலை கூறும் வறுமை பற்றிய செய்திகள் |
| | | | | திரு. க. வேங்கடேசன் | திருவள்ளுவர் நோக்கில் நோய் |
| 2. | 27—2—'76 | | | திரு. சி. நா. குமாரசாமி | பதிற்றுப்பத்துக் கூறும் அரசும் போரும் |
| | | | | திரு. ப. கிருட்டிணன் | தொல்காப்பியத்தில் மொழி, இனம், நாடு |

| வரிசை எண் | நாள் | கட்டுரையாளர் (ஆசிரியர்) | ஆய்வுத் தலைப்பு | கட்டுரையாளர் (மாணவர்) | ஆய்வுத் தலைப்பு |
|---|---|---|---|---|---|
| | | | | திரு. த. அமிர்தலிங்கம் | தீவினையே வறுமைக்குக் காரணமா? |
| | | | | திரு. க. வேங்கடேசன் | பழமொழிகளில் மருத்துவச் செய்திகள் |
| 3. | 29—3—'76 | | | திரு. சி. நா. குமாரசாமி | பதிற்றுப்பத்து காட்டும் அரசு: நிலமும் மக்களும் |
| | | | | திரு. த. அமிர்தலிங்கம் | ஆங்கில இலக்கியத்தில் வறுமை |
| 4. | 26—8—'76 | திரு. கு. மோனராசு | 1. தொல்காப்பியர் காட்டும் தாய். | திரு. ப. கிருட்டிணன் | சிலம்பில் தமிழ் |
| | | | 2. குடி-பொருள் விளக்கம் | திரு. த. அமிர்தலிங்கம் | பட்டுக்கோட்டையார் பாடல்களில் வறுமை பற்றிய செய்திகள் |
| | | திரு. து. மூர்த்தி | பாரதியின் கண்ணன் என் சேவகன் | | |
| 5. | 24—9—'76 | திரு. து. மூர்த்தி | பட்டுக்கோட்டையார் பாடல்களில் சிறுவர்க்கான அறிவுரை | திரு. த. அமிர்தலிங்கம் | வறுமை ஒழிப்பும் புரட்சியும் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 6. | 27—1—'77 | புலவர் மு. சண்முகம் பிள்ளை | தொன்றுவா? தோன்றுவா? | | |
| | | செல்வி தி.சு. சத்தியம் | வள்ளுவத்தில் மொழியியல் | | |
| 7. | 23—2—'77 | திரு. கு. மோகனராசு | வடிவமும் வள்ளுவர் குறிக்கோளும் | திரு. க. வேங்கடேசன் | தமிழ் மருத்துவத்தில் குடும்பக் கட்டுப்பாடு முறைகள் |
| | | டாக்டர் மா. செல்வராசன் | பாரதியும் விதியும் | திரு. ப. கிருஷ்ணன் | இனம் பற்றிய கோட்பாடுகளும் இலக்கியச் சான்றுகளும் |
| 8. | 31—3—'77 | திரு. வ. செயதேவன் | அகராதியியல்—கிழக்கும் மேற்கும் | திரு. சு. சண்முகசுந்தரம் | அம்மானைப் பாடல்கள்-ஓர் ஆய்வு |
| | | டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் | பெருங்கதையில் சில அரிய செய்திகள் | | |
| 9. | 30—4—'77 | | | திரு ப. கிருட்டிணன் | திருவள்ளுவவமாலை-ஒரு திறனாய்வு |

## 3. சிறப்புச் சொற்பொழிவுகள் (தமிழில்)—1976-77

| வரிசை எண் | நாள் | தலைமை | சொற்பொழிவாளர் | பொருள் |
|---|---|---|---|---|
| 1. | 4—3—'76 | பேராசிரியர் டாக்டர் சி. பால சுப்பிரமணியன் | பேராசிரியர் ம. ரா. போ. குருசாமி | டாக்டர் மு. வ.வின் கருத்துகள் (மு.வ. முப்பால்) |
| 2. | 16—7—'76 | பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி | இந்திரா பார்த்தசாரதி | தமிழில் நாடகம் |
| 3. | 31—7—'76 | தாமரைத்திரு. நெ. து. சுந்தர வடிவேலு | 1. அழ. வள்ளியப்பா<br>2. ந. ரா. முருகவேள்<br>3. மே. வீ. வேணு கோபாலப் பிள்ளை<br>4. தவத்திரு சாந்தலிங்க அடிகளார்<br>5. டாக்டர் கா. மீனாட்சி சுந்தரம் | கவிமணி/மறைமலையடிகள் கா. நமச்சிவாயர் நூற்றாண்டு விழா |

| | | | | |
|---|---|---|---|---|
| 4. | 15—12—'76 | பேராசிரியர் டாக்டர். சி. பால சுப்பிரமணியன் (தமிழ்த்துறைத் தலைவர், சென்னைப் பல்கலைக் கழகம்) | டாக்டர் வ. ஞானசுந் தரம் (இந்திய மொழி களின் நடுவண் நிறு வனம், மைசூர்) | புதுமைத் தமிழ் இலக்கியத் தில் இருவகை நடை களின் இணைவு |
| 5. | 23—2—'77 | ,, | திரு. மு. வை. அரவிந்தன் (செந்தமிழ்ச் சொற்பிறப் பியல் அகர முதலித் திட்டம்) | தமிழர் இலக்கியக் கொள்கையும் திறனாய்வு முறையும் |
| 6. | 2—3—'77 | ,, | பேராசிரியர் சி. ஜகந்நாதா சாரியார், முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர், விவேகானந்தாகல்லூரி, சென்னை. | பெருமாள் திருமொழி |
| 7. | 5—3—'77 | ,, | டாக்டர் இளவரசு (தமிழ்த்துறை, மாநிலக் கல்லூரி) | தமிழும் வடமொழியும் |
| 8. | ,, | ,, | புலவர் பூ. சுப்பிரமணியம் (அரசினர் சுவடி நூலகம், சென்னை-5) | தமிழில் இடப்பெயர்கள் |
| 9. | 9—3—'77 | புலவர் மு. சண்முகம் பிள்ளை திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி | திருமதி மேரி கொர்னீ லியசு (தமிழ்த்துறை, செல்லம்மாள் மகளிர் கல்லூரி, சென்னை) | இலக்கிய உத்திகள் |

| வரிசை எண் | நாள் | தலைமை | சொற்பொழிவாளர் | பொருள் |
|---|---|---|---|---|
| 10. | 9—3—'77 | புலவர் மு. சண்முகம் பிள்ளை திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி | திரு. அ. அ. மணவாளன் (உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை) | இலக்கிய ஆய்வில் ஐந்து அணுகுமுறைகள் |
| 11. | 16—3—'77 | பேராசிரியர் டாக்டர் சி. பால சுப்பிரமணியன் (தமிழ்த் துறைத் தலைவர், சென்னைப் பல்கலைக் கழகம்) | திரு. மு. அருணாசலம், (இயக்குநர், தமிழ் வட மொழி மற்றும் இந்திய மொழிகள் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை-8) | திருவாசகம்-நீத்தல் விண்ணப்பம் |
| 12. | ,, | ,, | டாக்டர் ச. வே. சுப்பிர மணியன் (இயக்குநர், உலகத் தமிழ ஆராய்ச்சி நிறுவனம், சென்னை) | திருநாவுக்கரசர் தேவாரம் |
| 13. | 23—3—'77 | ,, | டாக்டர் தா. வே. வீராசாமி (உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை) | இலக்கிய வகைகள் |
| 14. | ,, | ,, | திரு. மின்னூர் சீனிவாசன் (தமிழ்த்துறை, மாநிலக் கல்லூரி, சென்னை) | உணர்ச்சி, கற்பனை, கருத்து, வடிவம்-ஓர் ஆய்வு |

| | | | | |
|---|---|---|---|---|
| 15. | 26—3—'77 | பேராசிரியர் டாக்டர் சி. பால சுப்பிரமணியன் (தமிழ்த் துறைத் தலைவர், சென்னைப் பல்கலைக் கழகம்) | மாண்புமிகு சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம் | கலிங்கத்துப்பரணி |
| 16. | 30—3—'77 | ,, | திரு. கோ. இராமச்சந்திரன் (தமிழ்த்துறை, பச்சையப்பர் கல்லூரி, சென்னை) | தமிழ் ஒலியனியல் |
| 17. | ,, | ,, | டாக்டர் இரா. கு. நாகு (தமிழ்த்துறை, மாநிலக் கல்லூரி, சென்னை) | வேற்றுமைகள் |
| 18. | 6—4—'77 | ,, | திருமதி சு. இராசலட்சுமி (தமிழ்த்துறை, அரசி மேரி கல்லூரி, சென்னை) | இலக்கிய இயக்கங்கள் |
| 19. | 16—4—'77 | ,, | பேராசிரியர் கி. பாண்டு ரங்கன் (தமிழ்த்துறைத் தலைவர், மாநிலக் கல்லூரி, சென்னை) | முத்தொள்ளாயிரம் |
| 20. | ,, | ,, | டாக்டர் இரா. நாகசாமி (இயக்குநர், தொல் பொருள் ஆய்வுத்துறை, தமிழ்நாடு அரசு, சென்னை) | தமிழ் எழுத்துகள் |
| 21. | 20—4—'77 | ,, | டாக்டர் இரா. சீனிவாசன் (தமிழ்த்துறைத் தலைவர், பச்சையப்பர் கல்லூரி, சென்னை) | தமிழ் வினைச்சொல் வரலாறு |

| வரிசை எண் | நாள் | தலைமை | சொற்பொழிவாளர் | பொருள் |
| --- | --- | --- | --- | --- |
| 22. | 20—4—'77 | பேராசிரியர் டாக்டர் சி. பால சுப்பிரமணியன் (தமிழ்த் துறைத் தலைவர், சென்னைப் பல்கலைக் கழகம்) | பேராசிரியர் க. த. திருநாவுக்கரசு, (உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை) | பெயர்களும் தொகைகளும் |
| 23. | 23—4—'77 | ,, | டாக்டர் தி. லீலாவதி (தமிழ்த்துறை, வட சென்னை அரசினர் மகளிர் கல்லூரி) | நந்திக் கலம்பகம் |
| 24. | ,, | ,, | டாக்டர் இரா. குமாரவேலன் (தமிழ்த்துறை, பச்சையப்பர் கல்லூரி, சென்னை) | தமிழ் விடு தூது |
| 25. | ,, | ,, | கவிஞர் ஈரோடு தமிழன்பன் (தமிழ்த்துறை, புதுக்கல்லூரி, சென்னை) | பாவேந்தர் பிள்ளைத்தமிழ் |
| 26. | 27—4—'77 | ,, | பேராசிரியர் மா. நன்னன் (தமிழ்த்துறை, மாநிலக் கல்லூரி, சென்னை) | வீரசோழியம் உணர்த்தும் மொழிவரலாற்றுச் செய்திகள் |
| 27. | ,, | ,, | டாக்டர் வீ. ஞானசிகாமணி (இரட்சணிய யாத்திரிக நிலையம், சென்னை-28) | கித்தேரி அம்மானை |

## Special Lectures in English - 1976

| Serial No. | Date and Time | President | Speaker | Subject |
|---|---|---|---|---|
| 1. | 2—1—'76 at 5.15 P.M. | Dr. K. Arumugam, Reader and Head of the Dept. of Tamil, university of Delhi. | Dr. N. Sanjeevi, Prof. & Head of the Dept. of Tamil, University of Madras. | Vaḷḷuvar : Gāndi : Arnold : Vaḷḷalār (Series 3) |
| 2. | 17—1—'76 at 3 30 P.M. | Dr. K.K. Raja, Prof. and Head of the Dept. of Sanskrit, University of Madras. | Prof. R.R. Mehrotra, Prof. of English, Hindu Banarus University. | The Rape of Language |
| 3. | 17—1—'76 at 5.15 P M. | Mahavidvan M.V. Venugopalappillai, President, Tamizakap Pulavar Kuzhu. | Dr. K.K. Venkatachari, Director, Ananthacharya Research institute, Bombay. | Manippiravalam. |
| 4. | 30—1—'76 at 5.15 P.M. | Thiru. M.S. Gopal, Station Director, All India Radio, Madras. | Dr. N. Sanjeevi, Prof. & Head of the Dept. of Tamil, University of Madras. | The Impact of Mahatma Gandhi on Tamil Literature with special reference to Ma.Po.Ci.'s works. |
| 5. | 2—2—'76 at 5.15 P.M. | Thiru N. Mahalingam, President, Ramalinga Mission, Madras. | Dr. N. Sanjeevi, Prof. and Head of the Dept. of Tamil, University of Madras | Vaḷḷuvar : Gāndi : Arnold: Vaḷḷalār (Series 4) |
| 6, | 3—2—'76 | Thiru Krishna Srinivas, Editor, 'Poet', Madras. | Dr. N. Sanjeevi, Prof. and Head of the Dept. of Tamil, University of Madras. | Annā Kāviyam |

## 4. தமிழ்த்துறை ஆசிரியர்

அ) தமிழ்த்துறை

1. டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்,

   பேராசிரியர், தமிழ்த்துறைத் தலைவர்

2. டாக்டர் ந. சஞ்சீவி, பேராசிரியர்

3. டாக்டர் பொன். கோதண்டராமன், இளநிலைப்பேராசிரியர்

4. திரு. வ. செயதேவன், விரிவுரையாளர்

5. டாக்டர் மா. செல்வராசன், விரிவுரையாளர்

6. திரு. து. மூர்த்தி, தொழில் நுட்பத் துணைவர்

ஆ) திருக்குறள் ஆய்வுப் பகுதி

1. புலவர் மு. சண்முகம் பிள்ளை, விரிவுரையாளர்

2. திரு. கு. மோகனராசு, விரிவுரையாளர்

3. செல்வி தி. சு. சத்தியம், ஆய்வுத் துணைவர்

## 5. தமிழ்த்துறை ஆய்வாளர்

[டாக்டர் பட்டம் (Ph.D.)]

*1. மேற்பார்வை டாக்டர் ந. சஞ்சீவி*

| அ. ஆசிரியர் | ஆய்வுப்பொருள் |
|---|---|
| திரு. கு. மோகனராசு, | திருக்குறளும் தொல்காப்பியமும் -ஓர் ஒப்பாய்வு |

| ஆ. மாணவர் | ஆய்வுப்பொருள் |
|---|---|
| திரு. ப. கிருட்டிணன், | தமிழ் இலக்கியங்களில் மொழி, இனம், நாடு |
| திரு. ப. வீரப்பன், | சங்க இலக்கிய நடை |

| இ. பகுதிநேர ஆய்வாளர் | ஆய்வுப்பொருள் |
|---|---|
| திரு. பு. அ. மோகனராசு, | 1900 வரை தமிழ் அச்சு, பதிப்புத் தொழில் வளர்ச்சி |
| திரு. ந. பாண்டுரங்கன் | சதகங்கள்–ஓர் ஆழ்வாய்வு |
| திரு. மு. கோவிந்தராசன் | தமிழ் நூல்களில் கல்விபற்றிய கருத்துகள் |

[குறிப்பு : 1. திரு. க. ப. அறவாணன் அவர்கள் 'தொல்காப்பியம்-உரை வேற்றுமை' என்னும் பொருளில் ஆய்வு செய்து டாக்டர் பட்டம் பெற்றுள்ளார்.

2. திரு. சு. சண்முகசுந்தரம் அவர்கள் 'திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப் பாடல்கள்' என்னும் பொருளில் ஆய்வு செய்து ஆய்வேடு வழங்கி யுள்ளார்.]

2. மேற்பார்வை : டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்

| அ. ஆசிரியர் | ஆய்வுப்பொருள் |
|---|---|
| திரு. வ. செயதேவன் | தமிழ் அகராதிக்கலை - வளர்ச்சியும் வரலாறும் |
| செல்வி தி. சு. சத்தியம், | திருக்குறள் ஆராய்ச்சியின் வளர்ச்சி—ஓர் அகழ்வாய்வு |

| ஆ. மாணவர் | ஆய்வுப்பொருள் |
|---|---|
| திரு. சி. நா. குமாரசாமி | தமிழிலக்கியங்களில் நன்னாட்டுக் கோட்பாடு |
| திரு. த. அமிர்தலிங்கம் | தமிழ்க் கவிதைகளில் வறுமைப் புனைவு |
| செல்வி கோ. தான்யா | தமிழிலக்கியத்தில் மார்க்சியக் கொள்கைகளின் தாக்கம் |
| திரு. க. வேங்கடேசன் | பழந்தமிழிலக்கியத்தில் மருத்துவம் |
| திரு. பா. உதயகுமார் | அறிஞர் அண்ணா ஒரு சமுதாயச் சிந்தனையாளர் |
| திரு. அரங்க. இராமலிங்கம் | சங்க இலக்கியத்தில் வேந்தர்கள் |

| இ. பகுதிநேர ஆய்வாளர் | ஆய்வுப்பொருள் |
|---|---|
| புலவர் இ. சுந்தரமூர்த்தி | பரிமேலழகர் உரைத்திறம் - ஒரு திறனாய்வு |
| திரு. கோ. இராமச்சந்திரன் | திருக்குறளில் மனிதநலக் கொள்கைகள் |
| திரு. இரா. மாயாண்டி, | சங்க இலக்கியத்தில் கற்பனை |
| திருமதி கிருட்டிணா சஞ்சீவி | சங்க இலக்கியத்தில் ஒப்புமைப் பகுதிகள் |
| திருமதி மா. சு. சாந்தா | சிவப்பிரகாசர் நூல்கள் ஆய்வு |
| திரு. சே. இராசேந்திரன் | தமிழ்வளர்ச்சி ஆராய்ச்சியில் திராவிட இயக்கத்தின் தாக்கம் |

3. மேற்பார்வை : டாக்டர் பொன். கோதண்டராமன்

| அ. மாணவர் | ஆய்வுப் பொருள் |
| --- | --- |
| திரு. த. மணியன் | தமிழ் நாளிதழ்களில் மொழியமைப்பு |
| திரு. ந. தெய்வசுந்தரம் | தமிழில் இரட்டை வழக்கு |
| திரு பெ. மாதையன் | தமிழில் வினையெச்சங்கள் |

| ஆ. பகுதிநேர ஆய்வாளர் | ஆய்வுப்பொருள் |
| --- | --- |
| திரு. ஜி. ஜான் சாமுவேல் | The Aspect of Romanticism with a special reference to Bharadhi & shelley. (ஓர் ஒப்பாய்வு) |
| திரு. மா. இரா. இளங்கோவன் | தமிழ் இதழ்கள்வழி சமுதாயவியல் ஆய்வு |
| திரு. இ. மறைமலை | தமிழில் சொல்லாக்க முறைகள் |

## எம். பில் - முழுநேரம் (1977-78)

| பெயர் | தலைப்பு |
|---|---|
| 1. திரு. மு. கருணாநிதி | கவிஞர் சுரதாவின் கவிதைகள்- ஓர் ஆழ்வாய்வு |
| 2. திரு. ந. கல்யாணசுந்தரம் | குறிஞ்சிப்பாட்டு - ஓர் ஆழ்வாய்வு |
| 3. திரு. சு. தங்கவேல் | திருத்தொண்டரின் தனிச் சிறப்புகள் |
| 4. திரு. மு. பொன்னுசாமி | மதுரைக் காஞ்சி - ஓர் ஆழ்வாய்வு |
| 5. திரு. பூ. இராமச்சந்திரன் | தமிழில் பிழை ஆய்வு |
| 6. திரு. ஆ. கந்தசாமி | மாணிக்க வாசகரின் திருவெம் பாவை திருப்பள்ளி எழுச்சி - ஓர் ஆழ்வாய்வு |
| 7. திரு. கூ. வ. எழிலரசு | பாரதிதாசன் நாடகங்கள் - ஓர் ஆழ்வாய்வு |
| 8. திரு. பெ. அர்த்தநாரீசுவரன் | தமிழ் நூல் - ஓர் ஆய்வு |
| 9. திரு. அ. தட்சணாமூர்த்தி | ஐங்குறுநூற்றில் முல்லைத்திணை |

## எம். பில் - பகுதிநேரம் (இரண்டாம் பருவம்)

| | |
|---|---|
| 1. திருமதி. வெ. கனகசுந்தரம் | கவிஞர் தமிழ் ஒளியின் கவிதைகள்-ஓர் ஆழ்வாய்வு |
| 2. திரு. மு. கோவிந்தராசன் | சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்க் கல்வி வளர்ச்சி |
| 3. திரு. இராம. தட்சிணாமூர்த்தி | சிலப்பதிகாரத்தில் புறத்திணைச் செய்திகள் |
| 4. திரு. வ. சாந்தகுமாரி | தமிழ் இலக்கியத்தில் குறவர் |
| 5. திரு. உ. சுப்பிரமணியன் | நாடகக்கலை, நாடகவாழ்க்கை, நாடகத் தமிழ்பற்றிய நூல்கள், கட்டுரைகள் |
| 6. திருமதி. பா. புவனேசுவரி | கு. அழகிரிசாமியின் சிறுகதைகள் -ஓர் ஆய்வு |